# கீதாத் திரயம்.

ஈசுவர கீதை, பகவற் கீதை,

பிரஹ்ம கீதை,

மூன்று சேர்ந்தது.

உரிமை யுடையோர்,

திருப்பூவணம், வேதாந்த மடம்,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்.

விலை ரூபாய் மூன்று.

1. வியாச பகவான் சம்ஸ்கிருதத்தில் இயற்றிய, கூர்ம புராணத் துள்ள ஈசுவர கீதை 11 அத்தியாயம், சுலோகம் 495. கவி 338.

2. பாரத இதிகாசத் துள்ள, பகவற்கீதை. 18 அத்தியாயம், சுலோகம் 700. கவி 545.

3. ஸ்காந்த புராணம், சூத சம்ஹிதை யில் உள்ள, பிரஹ்ம கீதை, 12 அத்தியாயம், சுலோகம் 1058. கவி 547.

ஆக சுலோகம் 2253. கவி 1430.

உ

3047

ஸ்ரீ வியாச பகவான்
சம்ஸ்கிருதத்தில் இயற்றிய
கூர்ம புராணத் துள்ள
(சிவப் பிரகாசம் என்னும்)

# ஈசுவர கீதை.

இஃது
இறும்பூதூர்
**ஸ்ரீ தத்துவ ராய ஸ்வாமிகளால்**
தமிழில் செய்யுள் வடிவ மாக
மொழி பெயர்க்கப்பட்டு
தலைப்புக் கவி —
பாட்டு முதற் குறிப்பு அகராதியோடு,
**திருப் பூ வண மடாதிபதி**
**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய**
**ஸ்வாமிகள் அவர்களால்**

மதுரை
ராஜேஸ்வரி பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.
 1953. [விலை அணு பத்து.

# முக வுரை.

ஸ்ரீ வியாச பகவான் மந்த மதியினர் கடவுளின் உண்மைச் சொரூபத்தினை உணர்ந்து பக்தி செய்து பரகதி யடையும் பொருட்டுக் கருணை மீக் கூர்ந்து செய்யப்பட்ட புராணங்கள் பதினெட் டாம்.

புராணம் 18, உப புராணம் 18, உப உப புராணம் 18 ஆக மூன்று வகை யாக 54 புராணங்கள் உள்ளன என உணர வேண்டும். இவை யாவும் பிரஹ்மா - விஷ்ணு - ருத்திரன் - சூரியன் - அக்கி என்னும் பஞ்ச மூர்த்திகளைப் பகர்வன வாம். பல முனிவர்களாலும், மகரிஷிகளாலும் செய்யப்பட்டன வாம்.

ஸ்ரீ வியாச பகவான் இயற்றிய பதினெண் புராணங்களுள் 15-வது ஆக எண்ணப்படும் கூர்ம புராணமும் ஒன்றாம். அது பிராஹ்மீ, பகவதி, சௌரீ, வைஷ்ணவீ என நான்கு சம்ஹிதை உடையதாம். அவற்றில், பிராஹ்மீ சம்ஹிதை மாத்திரம் பூர்வார்த்தம் 53 அத்தியாய

மும், உத்தரார்த்தம் 46 அத்தியாயமும், ஆக 99 அத்தியாயத்தில் 5867 சுலோகம் உடைய தாக விளங்குகின்றது. அதன் உத்திரார்த்தத்தில் ஈசுவர கீதை என்பது 11 அத்தியாயத்தில் 495 சுலோகம் உடையதாக விளங்குகின்றது. அது ஈசுவரன் நாராயண மூர்த்திக்குத் திரு வாய் மலர்ந் தருளியது.

இவ் வளவு அருமை வாய்ந்த சம்ஸ்கிருதத்தில் உள்ள இதனை இறம் பூதூரில் சமாதி கொண் டிலங்கும் ஸ்ரீ தத்துவ ராய சுவாமிகள் 338 செய்யுளில் தமிழில் மொழி பெயர்த்திருக்கின்றார் கள். இதனை இயற்றி மூந் நூறு ஆண்டுகட்கு மே லாக இருக்கலாம். இத் தமிழ்க் கவிக்கு ஓர் உரை நாம் இயற்றி யிருக்கின்றோம்.

இதனை, படிப்பவர்கட்கு உபகார மாக டபிள் கிரௌன் 1—32 பேஜ் சைசில் சிறி தாகப் பாக் கட்டில் வைத்துக்கொள்ளும்படி யாக அச்சிட் டிருக்கின்றோம்.

திருப் பூ வணம், வேதாந்த மடம்.

## புராணம் 18 வியாசர் செய்தது.

1. அக்நி புராணம்.
2. கூர்ம புராணம்.
3. கருட புராணம்.
4. நாரத புராணம். 24000 சுலோகம்.
5. பத்ம புராணம்.
6. பிரஹ்ம புராணம்.
7. பிரஹ்ம வைவர்த்த புராணம்.
8. பிரஹ்மாண்ட புராணம். 11000 சுலோகம்.
9. பவிஷ்ய புராணம்.
10. ஸ்ரீமத் பாகவத புராணம். 18000 சுலோகம்.
11. மத்ஸ்ய புராணம்.
12. மார்க்கண்டேய புராணம்.
13. லிங்க புராணம்.
14. வாமந புராணம்.
15. வராஹ புராணம்.
16. விஷ்ணு புராணம்.
17. சிவ மகா புராணம். 24000 சுலோகம்.
18. ஸ்காந்த மகா புராணம். 7 கண்டம்.
81100 சுலோகம்.

## உப புராணம் 18. பலர் செய்தனர்.

1. ஸ்காந்த புராணம். 6 சம்ஹிதை.
100000 சுலோகம்.
2. பார்க்கவ (கணேச) புராணம்.
3. சிவ புராணம். 4. நர சிஹ்ம புராணம்.
5. ஆதி புராணம் 20 அத்யாயம். வியாசர்
6. ஆதி பிரஹ்ம புராணம். [செய்தது.
7. கல்கி புராணம். வியாசர் செய்தது.
8. ஜைமிநீய புராணம்.
9. ஸ்ரீமத் தேவீ பாகவத புராணம்.
10. வாயு புராணம். வியாச தேவர் செய்தது.
11. சாம்ப புராணம்.
12. சௌர புராணம். த்வைபாயநர் செய்தது.

## உப புராண உப புராணம் 18.
## பலர் இயற்றினர்.

1. சுதர்சந புராணம். 2. சூர்ய புராணம்.
3. பிருஹத் ஸ்வயம்பு புராணம்.
4. மகா பாகவத தேவி புராணம்.
5. ஹரிவம்ச புராணம்.
6. பிருஹத் தர்ம புராணம்.

உ

சிவமயம்.

3047

## ஈசுவர கீதை கவி 338-க்குத் தலைப்புக் கவி 6.

## பதி னுன்கு சீர் ஆசிரி விருத்தம்.

1. இரு-பூதம் இல-முன்ம சிவ-பிரம நாதனுய் சூதமா கார்-அ ருந்த, இத்தபோ சொன்னவா தலை-பரம நார-எ துகா-அந்த திங்கள் சுட்ட, வரு-அரியு செய-கந்த வெல்க-துதி அந்த மால் உன்னைநீ கேச யாதொன், வானே-ஒ வா-அளவி பாயிரமுன் முப்பது சாங் கியயோகம் மறை-அ றைவ, உரு-இந்த மறைவு-அறி வென-யாதொர் ஆங்கவன் பந்த-உயிர் அயில்-இ ருளுடன், உலகி னில் அறிவினே முத்தியா னே-அறிவின் இன்பம்-எப் பொழு-இத் தன்மை, நரு-தான லா-கருமம் அழியாதெங் ஆதலான் முனி-யாதொர் படி-அ டுத்த, நல்லறிவு யாதொருபொர் படிகந்த ஆத லால் யாதொரு பொழுதி யோகம்.

2. யோக-பூ தங்களெவை யும்-யாதொ பொழுதியோ கந்தன்னை யாவன் யாதொர், யூ-பூதங் கள் யாவ ஞெரு-பிற-ஆ றுப-ஆதல்

அவ்வண்ணம் ஓங்கி யோகம், யாகயா தொன்-யோகம் அறையுமவ் எல்லாரு கண்ணின்-எல்லாரை பார்த்து, யாதொன்றை நானேமா எங்கும்-ஆங் கவர்-சுத்தன் என்னு-அன் றெண்பதைந்தே, ஆக-மூன் றவதுசம் பிரதாயம் முன்னனன் ருய்-இரண் அரிது ஒருதான், சொன்னதாமகம்-ஆதி கோலம்-ப டைப்பதும் நிகில-இந்திய-சகத், சாக-பா ஏக-பதி ஊனந்து-நான் காவதாம் பத்திமை-வி ரிந்த திங்கே, சகத்-ஈங்கு சந்ததம் ஏகனு பத்தி-மறை பழு-கலை-ப டைத்-ஒ தும்-ஈ.

3. ஈது-வஞ் சமாயையொர் ஆலம்ப ஓதியா மூன்ருவ நித்த அறிவால், எல்லாவு காலமாகியபாம் படைப்பவன் யானுடும் இருப தொன்றே, சேதைந்தா வது-விஸ்வ நுப-இவ் வள-எண்ண எவன்மா நித்தி கணமா, சிரபுண்ட தனதான ஞால-உற் பவநோயு ஆகாத துறவி மாதா, போது-உரு வோகண்டு மா-குரம் பை-பழுதில் ஆகமுறு காரண பாமா, போதனு இப்பிரம எந்தைநீ உன்னுரை தொழுத-ஒரு மறையனந்த, ஆதிதே படை-யோகி அகிலவுல காரணம்யா ஓது

 

மொலி எந்த கூடு, அம்-பவன் காமனீ உருப்ப-
எந் தை-அளவி மேலதா நாற்ப தாறே.

4. ஆளுவ தாதுசிவ சத்திசேயல் காத-அகி
செய்-மேவி ஈங்கு கரிய, அமர்-எந்த கடை-
தெய்வ வருண-மிக பொல்லா அருத்திசெய் தக்க
மதியின், பாறு-வே மெரி-படவ பொருவில்-நிகழ்
உற்பவ அங்நியமி பூதம் ஆதம், பல-தொல்-இரு
பத்தைந்து ஏழாவ தாம்தத்வ நிசபூதி அனிய
சிர-சங், ஏறிந்த்ர ஞானமதி எண்-சித்தர் கற்பங்
கள் எவலார் தக்க ஒன்ன, எந்தப்பி ஊற-மனம்
ஆகவிவை ஒத்தமுக் தரும-அறி யாமை பின்னி,
போறு-அவன் இருபதாம் எட்டாம்ப்ர பஞ்ச-வரு
பகர்-சென்ம எந்த பாங்கா, பொன்று-சங் கை-
இறைவ நுண்ணி-ஆ ரண-மோக பாகம்-என்னை-
பன் மூன்றோன்.

5. ஒன்பதாம் மாயாவி கார-நின் மல-
என்றோ யாதொன்று சோதி அன்றி, ஓது சின்
மய-எனச் தம்-சத்தி மத்தியம் உடு-ஈனஞ் செய்
யும் ஒப்ப, பன்-உலகம் புன்மய அப்பாம் எங்கு-
மூகம் மாசுபதி னெட்ட தாகும், பத்தாந்தத்
துவதரிச னந்-தக்க ஒப்பரும் அறிவினில் நின்ம

யோகி, என்-பேறு பங்கமில் மெத்த-ஆ தியு-தபன உதியாமல் நித்த தாரா, எல்லாவே பதினன்கு பதினெரா வது-யோகம் இடர்யோக ஒருகா-தானி, அன்-மயலி சுத்தமா அயர்வறு-த ருக்கி-மனத் தால் - உள வாறு மறைவின், அரந்தை-படர் பல வாசி கூடி-தோ யமு-கந் புரா-மந்த மந்த உகவே.

6. உக-அகற எச-இந் திய-ஓது தார்-விவத் இருது-தடி நீர்-வ ருத்தம், உன்னரும் தனி-பங்க சக - மிக்க யாவர் - அந் நிய - அவம அப்ப சொன்ன, துக-நலம் ஆசிரம பிறி-பரியு எண்-எசில் எப்படி-பொய் பத்தி பன்னி, துயரு-துதி எத்தொழில் அடங்கு-துற் றுவ-என்னை என் பதத் சாம எந்த, இக பங்கம் ஈதெல்-கரு நீங்காத காமர-பொல் அரி-சிவண முனிவர் இந்த, ஏதம்-ஆ தலி-நான்ம மரு-தன்ப ரா-ஈச யோகிகள் சனற்கு எந்தை, அக-எம வேருக ஒழி-ஓதம் தீதின்-மா மறை-மூவர் எண்ப தேழாம், ஆகமுந் நூற்றுமுப் பானெட்டு இவைபரமன் அடியவர்க் கருள முதமே.

முற்றும்.

# ஈஸ்வர கீதை.

## பாயிரம்.

பூத மைந்தோ டிரவிமதி புருட ளுகிப் புணர்ந் தென்றும், பேத மில்லா வறிவுருவாய்ப் பிறங்கு கின்ற பேரொளியோ, ளுதி மூவர்க் கறிவரியோ னரிவை பாக ளுமமலன், பாத பங்க யங்கடலை வைத்தே பணியும் பரிசினளுல் 1

இலங்கிய மறைக ளுன்கு மியம்புதற் கியலா தென்ன, மலங்கிய சிந்தை யோடு வானவர் மூவர் நிற்க, விலங்கிய லனைய வென்னை வேதகஞ் செய்தென் னுள்ளே, துலங்கிய சொரூபா நந்தன் றுணையடி தொழுதல் செய்வாம். 2

முன்மதி யணிந்த செக்கர்நன் மவுலி முதல் வனே யென்னமுன் னின்று, நன்மதி முனிவர் கேட்பவன் போடு நல்கிய நான்மறைப் பொரு

ளைப், புன்மதிச் சொலவும் பொருளுமொன்
றுணரேன் போதகஞ் செயப்புகு மிதுகண்,
டென்மதி யெனக்கே நகைசெயு மாறு லேதி
லார்க் கென்செயா திதுவே. 3

சிவன்றிரு வுருவு கொண்டுமுன் பருளிச்
செய்ததோர் புராணமா தலினற், சிவன்றனை
யளித்த பரன்றிரு நாமஞ் சிவப்பிர காசமா
மதனற், சிவந்தசெந் தமிழா லியார்க்குமிந்
நிலத்தே சிவந்தனைத் திகழ்த்திடுந் தெளிவாற்,
சிவன்றனக் குரிய தாதலா னுமஞ் சிவப்பிர
காசமென் றுரைப்பாம். 4

பாயிரம் முற்றிற்று.

---

# 1. இருடிகள் வினவும் அத்தியாயம்.

பிரமரண் டங்கள் படைத்தவப் பரிசும் பெருமையு மறுக்கவெல் லுலகளும், வாமுற வுரைத்தாய் வளம்பெற வதிலே வாய்மையால் வருணநான் கினினுந், தருமதற் பாராய் ஞானயோ கத்தே சாலவா தரிப்பவர் தம்மாற், றிமுறப் பாவுந் தேவதே வர்க்குந் தேவனுண் டென்றுசெப் பினையால். 1

நாதனு யரிய நான்மறை தெரிந்து நன்னெறி யளிக்குநா ரணனு, மாதவ முனிபா லறிவெலா மறிந்தா யாதலா லரும்பரந் திகழ்த்தி, யேதமார் பிறவி யறுப்பதா ஞான மேதது வியம்புவா யென்று, சூதமா முனியைச் சௌனகன் முதலாந் தொல்லைமா முனிவர்கள் சொன்னர். 2

சூத மாமுனி முனிவர்கள் சொன்னவா கேட்டுப், போத மாநெறி யளித்தன புராணனை நினைவுற், ருேது வாணெருப் படவவன் றனக்குணர் வளித்த, நாத ஞகிய வியாதனு முறைவிட நடந்தான். 3

கார்முகில் போலு மேனி கமலமா மலர்போ லுங்கண், ணேர்மிகு முநியை யெல்லா முநிவரு மிறைஞ்சச் சூதன், பார்மிசைத் தெண்டம் பண்ணிப் பன்முறை வலமாய் வந்து, கூர்மிகு மன்பிற் சென்னி குவித்தகை யோடு நின்றான். 4

அருந்தவத் தோர்க ளெல்லா மநாமய முரைத்த வர்க்குப், பொருந்துமா தநங்கற் பிக்கப் பூசுரர் முகங்க ணோக்கி, யிருந்தவங் கல்வி கேள்விக் கில்லையே யிடையூ றென்று, பெருந் தகை யுரைத்தான் சூதன் பின்னரும் வணங்கிச் சொல்வான். 5

இத்தபோ தநர்கள் சாந்தியா லறத்தா லிறந் தவ ரிறையியல் பறிவான், பத்தரா னவர்க ளேவலே செய்யும் பாவகம் பிறந்தன வெவர்க்கு, மத்தனு மரிபண் டாமையாய் முநிகட் கருளிய தேதெனக் களித்த, சுத்தஞா நத்தை யிவர் களுக் கருளாற் சொல்லெனத் துணையடி தொழுதான். 6

சொன்ன வாசகமு ளங்கொ ளாவிறைது ணைப்ப தங்களைநி னைந்துதன், சென்னி யாலுறவ ணங்கி விண்ணவர்க டேவ னும்பரவு தேவனே,

முன்னோர் நாண்மிகுச நற்கு மாரன்முதன் முனி
வர் கட்குலகின் மூலமாந், தன்னை யாரருளி
னோதி னினிது கேண்மி னென்றுமுனி
சாற்றினன். 7

தலைமைசேர் சநற்கு மாரன் சநந்தநன் சநகன்
வெள்ளி, யலைவிலா வருத்தி ரன்று னங்கிரா வாம
தேவன், கலைதெரி பிருகு யோகி கபிலனத் திரிக
ணுதன், மலைவறு வசிட்ட னோடு மரீசியா மதி
யின் மிக்கோர். 8

பரமன தருளா லன்றியே பாத்தைப் பரப்
புறப் பார்த்ததம் மதியா, லொருவரோ டொரு
வர் பன்னெடுங் கால முசாவியொன் றுணர்
வுறப் பெறுமல், வரமிகு பதரி வநமடைந் தரிய
மாதவம் வருந்தினர் வருந்த, நரனொடு நாரா
யணனொரு முனியாய் நற்றவர்க் கருள்செய
நடந்தான். 9

நாரண னருளிற் பணிந்துமா முனிவர் நான்
மறை மொழியினல் வழுத்தக், காரணந் தன்னை
யறிந்துநீர் தபித்த காரண மென்னெனக்
கண்ண, னோரணி மறையின் பொருடெரிந்

திடுதற் கெங்களா லியன்றில திறைவா, வாரணப் பொருளை யறிகுவாய் நீயே யாதலா லுன்னையே யடைந்தோம். 10

எதுகா ரணமிவ் வுலகினுக் கெல்லா மென்று நின் றளிப்பவ னெவன்ரு, னேதுதா னுந்மா வேதுவீ டேவன் பிறப்பவ னெவனபிறப் பிப்பா, னேதுமா ராலே கண்டிடப் படுவ திணை யறு பிரமமே தெல்லா, மோதுவா யெங்க ளையநீ யல்லா லொழிப்பவரில்லை யென் றுரைத்தார். 11

அந்த வெல்லையி லம்புயை கேள்வனும்
வந்த தன்றவ வேடத்தை மாறியே
சிந்தை யாலிமை யோர்க்குந்தெ ரிக்கொணு
வெந்தை தன்னொளி யாலேயி லங்கினுன். 12

திங்க ளுயிறு போலத்தி கழ்ந்தவெண்
சங்கு மாழியுந் தண்டஞ்சா ரங்கமுஞ்
செங்கை நான்குந்தி ருமறு மார்பமும்
பங்க யாலயப் பாவையுங் கூடவே. 13

சுட்ட பொன்னினுந் தூயொளி யாயொளி
விட்டி லங்கினன் விட்டுவி ளங்கொளி
மட்ட மன்றிய மண்டலத் தால்வெளிப்
பட்ட னன்னரு னுய்வந்த பான்மையான். 14

அரியுருவு கண்டகம கிழ்ந்தவள விற்கே, பெரியபரி வோடுபிறை சூடியபி ரான்முன், சுருதி முடி வோதுபொருள் சொல்லுத றுணிந்தே, கருதவரி யான்முனிவர் கண்ணில்வெளி நின்றான். 15

செயசெய தேவர் போற்றுந் தேவமா தேவ போற்றி, யயமற முனிவர் போற்று மம்பிகா பதியே போற்றி, நயமுறு மன்பா லன்றி நணு குதற் கரியாய் போற்றி, செயலற விருந்த யோகிற் றிகழ்ந்திடுஞ் சிவனே போற்றி. 16

கந்தரை கனல்கா னீராற் கலந்திங்ஙன் கட்டப் பட்ட, வெந்திரம் வல்லாய் போற்றி யியங்கிட வளிப்பாய் போற்றி, யந்தமுஞ் செய்வாய் போற்றி யாநந்த வுருவே போற்றி, பந்தனை யறுப்பாய் போற்றி பாமகா ரணனே போற்றி. 17

வெல்க பூதபதி வெல்க சீவபதி வெல்க யோக பதி வெல்கவே, பல்கு பேருருவு கண்கை கான்முடிப கர்ந்தி டற்கரிய பான்மையாய், தொல்லை நான்மறையி னுலு முன்னியல்பு

சொல்ல லாகுமள வல்லவால், வல்ல வாறுசில சொல்லி யாமுனேவ மூத்து கோமெனவ ணங்கினர். 18

துதித்தமா முநிவர் தலைகளால் வணங்கித் தொழுதகை யினர்களாய் நிற்பக், கொதித்த வான் புலத்துக் கொண்டல்வந் துதவிற் றெப்பவே கொடியவெங் கூற்றை, யுதைத்த தா ளுடையா னுலகமுண் டுமிழ்ந்த வொரு வனைத் தழுவியிங் கிவர்கள், பதைத்தகா ரணமென் செய்யவேண் டுவதென் பகரெனப் பவளவாய் மலர்ந்தான். 19

அந்தமா விறைவ னருள்செய்வா சகத்தைக் கேட்டவ ரருந்தவ வெரியால், வெந்தபா வத் தால் விமலபா வத்தான் மெய்ப்பொருள் விளங்குவான் வேண்டி, யெந்தையே யெனையே யடைந்தன ரிவர்கட் கிரங்கியான் கேட்டுட னிருப்பப், பந்தவே றறுக்கும் பரமஞா னத்தைப் பகர்ந்தருள் செய்கெனப் பகர்ந்தான். 20

உன்னைநீ யுணர்தி யல்லது வேறு ருணருவா ருனதுபே ரருளாற், றன்னையே தன்னுற் றுனறி யுறிவு சங்கரா விவர்க்கரு ளென்று, பின்னர்மா

முனிவர் தங்களை நோக்கிப் பிஞ்ஞகன் பெருகிய
வருளா, லென்னைநீர் வினவு மரும்பொருள்
வினவி யெய்துவீ ரெனவவர்க் கிசைத்தான். 21

கேசவ னுரைத்த மாற்றங் கேட்டவர்
பணிந்து பின்னு, மீசனை வினவு மெல்லை
யிருவிசும் பிடையே தெய்வ, வாசகம் வந்த
தாங்கே யரியொடு மளவி றந்த, தேசினு லகில
மெல்லாந் திகழவீற் றிருந்தான் றேவன். 22

யாதொன் றிலடங் கவிளைந் தவெலா
மியாதொன் றிடைநின் றதொடுங் குவதப்
பூதங் களினு தனொர்பொன் னணைமே
லேதங் கெடவே றியிருந் தனனால். 23

வானே முதலியா வையுமன் னிடமாய்த்
தானே முழுதா கியதத் துவமாங்
கோனே யிவர்கண் டுகொளும் படியா
னுனே யரியோ டுமொரா தனமேல். 24

ஓவா மையுளத் திடையோ குசெய்வார்
பாவா லயமே வுபரம் பொருளைத்
தேவா திபர்தே டுசிவன் றனையே
யாவா வவர்கண் டனரா தனமேல். 25

அளவி றந்தவன் பாகிய வருந்தவர்க் கமலன், முளரி யங்கண்வண் டுழாய்முடி முகுந்தனை நோக்கி, வளமி குந்தமெய்ஞ் ஞாநநான் மற்று மக் குரைப்ப, வுளமொ ருங்கியன் போடுகேட் டுணர்மினென் றுரைத்தான். 26

1. இருடிகள் வினவும் அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் — 30.

---

## 2. சாங்கிய யோக அத்தியாயம்.

---

மறைபயின் முநிவர் கேட்ப மாமறை முடிவி னூலு, மறிவரு மறிவா நந்த வருளுரு வமலன் றன்பாற், பிறிதரு பேத நீத்துப் பெயர்விலா தொன்ரு யெங்குஞ், செறிதருந் தன்னை யீசன் றெரிதா வியம்ப லுற்ருன். 1

அறைவதன் றிந்த ஞாந மியாவரு மறியா ரானன், மறைவுறச் செய்வ தொன்ருய் மன் னியே யுள்ள தென்றுந், திறலுடை யியம

மாதி செய்தசீர் மறையோ ராலு, மறிவரும் பொருளை நீங்க ளறிமினென் றருளிச் செய் தான். 2

இந்த ஞானத்தை யெய்திய வின்பத்தா
ரந்த மில்பிர மத்துரு வாயினோர்
பந்த மேவிடார் பண்டுமின் றமென்றே
யெந்தை யீறிலி யீசனி யம்பினன். 3

மறைவுறும் பொருள்களினும் மறைவுறும் பொருண்மிகவு, மறைவுறும் படிசெயலை யற விருந் திடவுளது, செறியுமன் புடைமையொடு திகழ்தருந் தவமுநிக, ளறிவுறும் படியிதனை யறைவனென் றருளுமிறை. 4

அறிவென வுரைக்கப் பட்ட தவனுடை யுருவு தன்னே, ருறைவிலா நிமலன் சாந்த னுண்ணிய னென்று முள்ளோன், செறியுமெப் பொருட்கு முள்ளாய்ச் சின்மய மாயே சான்றாய்ப், பிறிதரு மவித்தைக் கெட்டாப் பெற்றிய னென்றா னீசன். 5

யாதொரு பொருட்கு முள்ளா யிருந்துள வறிவு தன்னை, மேதகு புருட னென்று முயி

ரென்று மீச னென்றும், பேதமில் கால மென்று மநமொடவ் வியத்த மென்று, மோதிடு மறைக ளென்றே யுரைத்தன ஞெழிவி லீசன். 6

ஆங்கவன்பா லாவவெலா மவனிடையே யோவதுவு, மோங்கியமா மாயையினை யுடையனதி லார்ப்புண்ணுன், பாங்குறநா நாவுடலம் பண்ணியிடு மாயிடினு, மீங்கிவைதன் னிடைத்தோயா திவைநடத்து மியல்புமிலான். 7

பந்தமதி லொருக்காலும் பற்றுணு னப்பந்தஞ், சிந்தைசெய்துந் தான்செய்யான் செய்வானு யேகிற்கு, முந்தியவான் காற்றனனீர் மண்ணல்லன் முழுதுமா, யந்தமிலா வாநந்த வறிவுருவே யவன்வடிவம். 8

உயிரி ஞேடுமந மவ்வி யத்தமுறு கந்த மாதிபுல னைந்தலா, னயர்வி ஞகியக மென்று நின்றறியு மந்த நாற்காண மும்மிலான், பெயர்வி லாது சொலும் வாக்கி ஞேடுமுத லைந்து மாய்விடய மும்மிலா, னுயர்வ தாயவறி வேத னக்குருவ மென்று ரைக்குமொளி மேனியோன். 9

அயில்கின்ற வவைமுதலாம் போகநுகர் பவனல்ல, னுயிரல்ல னுயிர்க்குயிராம் புருடனெனு

மவனல்லன், மயலொன்றி யுளமாயை யதுவல்
லன் மற்றெல்லா, மயர்வின்றி யறிகின்ற
வறிவுருவென் றேயறிக. 10

இருளுட னேரொளி யாவதெவ் வண்ண
மருவலி லாவவை மற்றது போல
விரிவுள தாயச கந்தனி னேடும்
பொருவலி லாதப ரன்புணர் வெய்தான். 11

உலகினி லெவ்வண மொண்ணிழ றன்னே
டிலகுவெ யிற்கல வாதது போல
நிலையில தாயச கத்தொடு நில்லா
னுலவலி லாதொளிர் கின்றப ரன்றான். 12

அறிவினே டொன்றி நிற்குந் தமத்தொடு
விகார மாங்கே, யறிவினிற் கலக்கு மென்று
மணைந்துட னிற்கு மாகி, லறிவினுக் கநந்த
கோடி கற்பம்வந் திறந்திட் டாலும், பிறிவதற்
காகு முத்தி யில்லையே பேசி லென்றும். 13

முத்தியை யடைந்து யர்ந்த நித்தநன் முனிவ
ரென்று, மொத்தபே ரறிவே தன்பா லுளதவி
கார மென்றுஞ், சுத்தமுற் சுகதுக் கங்க டொடர்
பிலா நந்த ரூப, நித்தமென் றிடவுங் காண்ப
ரென்றன னிகரி லீசன். 14

யானே செய்கின் றனனெவையுஞ் சுகதுக்கங்க ளென்செயலே, யூனே வாடி யிடறடித்த லுடையோ னெனென் றுரைத்திடுவோ, ராஞ வறிவின் றன்மேலே யாங்கா ரத்தை யிடுதலின, ஞனே யெல்லா மென்றிருப்பர் ஞாந மில்லா ரென வறிக. 15

அறிவினை யுடைய ராகி யருமறை முடிவு கண்டோர், செறியுமெய்ப் பொருட்குஞ் சான் ருய்ச் சிந்மய மாயே தன்னிற், பிறிதரு மவித்தைக் கெட்டாப் பெற்றியோ டெங்கு நிற்கு, மறிவென வுரைப்ப ரல்ல தயலொன்று மின்மை கண்டே. 16

இன்பமொடு துன்பமது வின்றியொர்வி காரந்
தன்கணதி லாவறிவு சார்வதிலை பந்தம்
பின்பதுள ஞவதறி யாமைமுத லாலென்
றென்பதுள தாகுமுட லோடியைய வென்றும். 17

எப்பொழுது நின்றுதய மானவொளி தானே
மெய்ப்படவி ருந்தறிவ தாகியெவ்வி டத்து
மொப்பில்பா ஞகுபுரு டன்னகம ணேந்தே
செப்பரிய வேறுபல செய்வனெனு நின்றே. 18

இத்தன்மைய தாகுமவ்வி யத்தமொடு கூடுமறி
வெத்தனையு முட்புறமி ருந்தறியு மேனுஞ்
சுத்தமது வாயதன துண்மையறி யாதே
யத்தன்மைய தாயவுரு வாயழியு மன்றே. 19

தானலா தொன்றைத் தானு யறிந்திடு மதனு லென்று, மானதாஞ் சுகதுக் கங்க ளியாரையும் வெறுப்புண் டாக்கு, மீனமா மயலோ டொன்றி யிருந்திடு முடலங் கொண்டே, யானதா யழியு மென்று மறியாமை மூதலாய்க் கொண்டே. 20

கருமஞ்செய விடர்வந்துறு மதுபுண்ணிய பாவந், தருமென்றுரை செயுமாமறை யவை யாகிய வசமே, யுருவந்தரு முழுதும்முள தாகும் மென வொழியா, வருடந்திடு மொளிமேனிய தறிகென்றருள் செயுமால். 21

அழியா தெங்கு முளதாகி யனைத்துட் புறம்புந் தானிரம்பி, யொழியா வறிவா யொருகுற்ற முரைத்தற் கரிய தொருபொருளே, கழியா மாயை யதனலே காணப் பலவாய்த் தோன்றி யிடு, மழிவா யினதென் றென்றுமிலா திருக்கு மதுவே யியல்பென்றான். 22

ஆதலான் முநிக ளுண்மை யொன்றென வுரைப்பர் வேறும், பேதமவ் வியத்தத் தாலா மென்றன ரதுவு மென்று, மோதிய மாயை தன்னை யாசரித் திருந்தே செய்யு, நீதிய தென்று கொண்டே நிகழ்த்தின னிகரி லீசன். 23

யாதொர்படி தூமமொடு தூளியொளி யாய
நீதியுடை வானைமறை யாதவண மேபோ
லோதுபுல னேடுகர ணம்முறுப வெல்லாம்
போதமுட னென்றியவை நின்றுபுண ராவால். 24

அடுத்தநிற மெத்தனைய தாயபடி கம்வே
றடுத்திடவி லாதுதன தாயவொளி யேபோ
லடுத்தகம தாகியணை யாதவறி வென்றும்
விடுத்திருளை மிக்கொளிய தாய்விரியு மன்றே. 25

நல்லறிவு ளோருலகை ஞாநவடி வென்றே, சொல்லுவர்க ளவ்வறிவி லார்தொழிலில் வேறும், பல்வகைய தேபொருள தென்றறிதல் கொண்டே, நில்லதில தாமுலகு கண்டிடுவர் நின்றே. 26

யாதொரு பொருட்கு முள்ளாய்க் குணமின்றி யெங்குந் தானாய்ச், சேதந னியே யென்றுந்

திகழ்ந்திடும் பரிசு காணு, ரேதமா மயக்கந் தன்னு வியாவையு மிருந்த வண்ணம், பேதமாய்க் காணு நிற்ப ரென்றனன் பிறவி நாசன். 27

படிகந்தனி னிடையேபல நிறம்வைகவவ் வுருவாய், வடிவந்தன தெனநின்றிடு மதுபோலறி வுருவு, முடிவொன்றுமில் பொருளெங்கணும் முழுதும்மொளி யாயே, வடிவந்தொறும் வடிவந் தொறும் வேருய்வரும் வகையே. 28

ஆதலா லழியா நித்த சுத்தமா யெங்குந் தானும், பேதமி லறிவு தன்னைப் பெரியவர் பேசக் கேட்டு, மோதியு நினைந்து நாளு மருச்சனை செய்ய வேண்டு, மேதமில் வீடே யெய்தற் கிச்சையே யுடையோர் தம்மால். 29

யாதொரு பொழுதி யோக மநத்திடை யெங்கு நின்ற, சோதியா யிலங்கு போதஞ் சோகத்தா லிடைவி டாத, நீதியா னிகழ்ந்தெப் போது நின்றிடிற் றுனே தன்னி, ஞேதிய பரிசு நின்று னென்றன னுமையோர் கூறன். 30

பூதங்க ளெவையுந் தன்பாற் புணர்ந்திட நிற்றல் கண்டே, பூதங்க ளெவற்றி னுள்ளும்

புறம்புந்தா னிற்றல் கண்டோன், பேதங்க ளனைத்து மில்லாப் பிரமமே யடைந்து வேறு, மேதங்க ளனைத்தும் விட்டோ னென்றிட லாகு மன்றே. 31

யாதொரு பொழுதி யோகந் தன்னையே யியற்றி யின்ப, மேதகு சமாதி தன்னை யடைந்து வே றாகி நின்ற, பூதமியா தொன்றுங் காணு திருந்தவ னெங்கு நின்ற, சோதியாந் தன்னிற் றன்னைச் சோர்வின்றிக் கண்டே நின்றான். 32

யாவனி யாதொரு போதித யத்தே
மேவிய வாசையெ லாமற விட்டா
னேவரு மின்னமிர் தாயவ னப்போ
தோவலி லாதொளிர் வீடடை வுற்றான். 33

பூதங்க ளுடைத்தா யுள்ள வேறெலா மொன் றின் கண்ணே, யேதங்க ளின்றிக் கண்டு மதினின்று மெல்லா மாய, பேதங்க ளனைத் துங் காணு தன்றிவன் பிரம மென்று, வேதங்க ளனைத்து மோது மெய்யறி வடைந்து நின்றான். 34

யாவ னொருவ னறிவுருவாந் தனையே கண்டு மற்றொன்றாய், மேவ லின்றி வேறுபடக் காணான்

விளங்க வப்பொழுது, நீவினிலையா யுலகனைத்து மாயை தானே யெனக்கண்டு, மேவ லரிதாம் வீடடைந்தா னென்றே விளம்பி யிடலாகும். 35

பிறப்பினொ டிறப்புமிடை துன்பமடை வென்ணு, தறப்பரிவு செய்வதொர்ம ருந்துளத தாய்வ, திறப்பில்பர மாயபிர மம்மதனை யெய் துஞ், சிறப்புடைய ரானபொழு தேசிவம தாவார். 36

ஆறுபல கூடியுல கத்தலைக டற்கே
வேறறவுண் மேவியுட னுகும்விளை வேபோ
லீறில்பர மாயருவ தாயபிர மத்தோ
டாறுமறி வானவைய டங்கியிடு மன்றே. 37

ஆதலா லெல்லா மாகி நின்றது மறிவே வேறொன், றேதிடக் கண்ட தில்லை யுள்ளபே ரறிவை நீக்கி, யேதமாம் பந்த மோடிவ் வுலகமு மிலையே பார்க்கி, லாதியா மறிவை மூடி யறி யாமை மயக்கு மன்றே. 38

அவ்வண்ண முரைத்த ஞான மமலமாய் நுண்ணி தாகி, மெய்வண்ண விகார மின்றி வேறொன்றோ டணைத லின்றி, மைவண்ண

விருத்தி யின்றி வளரொளி யாயே நிற்கு, மிவ் வண்ண மல்லா தெல்லா மிருளுடை யறிவா மன்றே. 39

ஓங்கிய முநிகா ளுங்கட் குரைத்தவே தாந்த சாரஞ், சாங்கிய ஞாந மென்றே சாற்றிடுந் தன்மை யாகு, மீங்கினி யோக மாவ திறை யின்றி விடய மெல்லா, நீங்கியே யென்றனோடு நிலைபெற நிற்றல் சித்தம். 40

யோகஞ்செய ஞாநம்முள தாகுமத னாலே, யாகும்மித யோகம்பினை யதுவேசெய லுறு வோன், சோகம்முறு பயனுமவை யெய்தா தள வில்லாப், போகம்முழு தெல்லாம்புணர் கின்றுனிவ னேயாம். 41

யாதொன்றினை யோகஞ்செய்து பெறுவா ரவர் பயனைப், பேதம்மில ஞாநந்தனை யறிவோர் பெற விசைவா, ரேதம்மில தாகும்வண மொன்று யிடல் கண்டே, போதம்முறு பரமாகிய பொருள் கண்டது புணர்வார். 42

யோகஞ்செய்து நின்றேன்றுகை விட்டே விட யம்மேன், மோகஞ்செல விழுமாலவர்

முடிவில்லிட ருறுவார், சோகம்மொழி விக்
கும்பா மெய்தார்தமை யடையா, ராகம்மறை
முழுதும்மது தனையேயறை தருமால். 43

அறையுமவ் வியத்தஞ் சீவன் மாயையா
லகிலஞ் செய்யு, மிறைவனு மீச னென்று
மியம்பிடு மறைக ளென்னே, முறைமையா
லுயிர்கட் கெல்லா மாகியே முழுதுங் கண்டே,
சிறையிறந் தோங்கி யெங்குந் திகழ்தரு மொளியு
னானே. 44

எல்லாரு மாசை யுறுகின்ற யாவு மிரதங்கள்
கந்த மெனிலே, நில்லாதி றந்து வருமாறி லாது
நிலையாகி நின்ற வெனிலே, பல்லார்மெய் கைக
ளொடுகால்க ளெண்ணில் பலவாய வற்றி னறி
வாய், நில்லாது நின்று நிகழ்கின்ற தென்று
முளனுய்வி ளங்கு மெனிலே. 45

கண்ணின்றி யெல்லாங் காண்பன் காலின்றி
யெங்குஞ் செல்வன், விண்ணின்ற வோசை
யெல்லாஞ் செவியின்றி விரைந்து கேட்பன்,
பண்ணின்ற கைய தின்றிப் பற்றுவன் விடுவ
னென்றே, யண்ணனன் முனிவர் தங்கட் கருளின
னறியும் வண்ணம். 46

எல்லா ரையுநா னறிந்திருப்ப னென்னை யறிவா ரியாருமிலை, நல்லா ருண்மை யெனக் கண்டோர் நாடி நின்றே யறிந்தபடி, யல்லா தில்லா வளவில்பரம் புருட னெனவு மறிவின்றி, யெல்லா மாகி யல்லாத வேக மெனவு மியம்பு வரால். 47

பார்த்துள முநிவ ரென்னைப் பரமென்றும் பண்டு மின்று, நீத்துள குணத்தோ னென்று நிர்மல ரூப னென்று, மாத்துமப் பொருளீ தென்று மலர்தலை யுலகுக் குண்மை, யாய்த்துமிவ் வறிவே யென்ப ரல்லவ ரறியா ரென்றும். 48

யாதொன்றை யமரர் தம்மா லறிவரி தாகு மென்ற, ஞேதிய மாயை மூட மோகத்தா லுணர்வ தின்றி, யேதுவொன் றிசையா வென்ற னுண்மையா மறிவைக் காணு, ரீதென முநிகட் கெல்லா மியம்பின னிமையோர்க் கீசன். 49

நானே மாயை தனைக்கடந்து நிற்பேன் ஞாலந் தனையியற்றே, னேனை யனவு மெனையொழிய யாதோர் செயலு மில்லதனு, னுனே சகத்தை நடத்திடு நாத னென்று நடுவென்று, மானு

வறிவோ ரறிந்திடுவ ரென்றே யருளிச் செய்
தனனல். 50

எங்குந் தானு யாவையுமாய் நின்றே யொன்று
யழிவின்றி, யங்க மொன்றின் றறிவேயாய்
நுண்ணி தாய வருள்வடிவைத், தங்கு ஞான
யோகத்தான் முன்பா சரித்துப் பினைவந்தெ,
னங்க மான பேரொளியோ டொன்றி யானு
யடங்கிடுவார். 51

ஆங்கவர்க ளென்னுடைய மாயையைவ சித்து,
நீங்கியபின் னின்மலம தாயவரு வாவ, ரீங்கிது
செ யாதவர்க ளென்றுமெனை யெய்தா, ரோங்கி
வரு பந்தமதி னின்றுடனு ழைப்பார். 52

சுத்தனு யொன்று யென்னைக் கூடிடுந் தொன்
மை யோர்க, ளெத்தனை நூறு கோடி கற்பங்க
டான்சென் றுலு, மெய்த்தக மீளா ரென்றன்
விளங்குமெய் யருளா லென்றே, யித்தகைத்
தெனவே வேத மியம்பிடு மென்று னீசன். 53

என்னு லுங்கட் கியம்பியவிஞ் ஞான ஞான
யோகிகட்கும், பின்னு முமது புத்திரர்க்கும்
பேணு மியோக சாங்கியந்தாஞ், சொன்னு

லாகு மல்லாரைத் தாரவொழிப்ப திது வென்றே, தன்னே ரனையா னுமீசன் ருனே சாற்றி யருளினன். 54

அன்றரி யாமை யாகி யருள்செய்த புராணந் தன்னின், முன்றிகழ் பிறவி தீர முனிகளுக் கீசன் சொன்னன், குன்றிடா மறையினீருங் கீதையி னிரண்டா மத்தை, யின்றெலா மறியும் வண்ண மியன்றவா றுரைத்த தன்றே. 55

2. சாங்கிய யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் – 85.

---

## 3. சம்பிரதாய அத்தியாயம்.

---

முன்ன நான்மறை யோதிமு டிந்ததை
யுன்னு மாறரி தாகிய வொன்றினை
ஞன்னு ஞானமு ஞேயமு மல்லதை
யின்னங் கேண்மினென் றீசனி யம்பினன். 1

நன்ருய் ஞான கனமாகி நானா வெல்லாம் பிறப்பிடமா, யொன்ருய் வேருேர் பொரு

ளின்றி யொளியா யொன்றே டுவமிப்ப, தன்று யகில சராசரங்கட் காதா ரந்தா னுயென்றும், பொன்று ததுவா யவிகாரப் பொருளாய்ப் புலனுய்ப் புணர்ப்பரிதாய். 2

இரண்டா வதிலா தளவைகளா லெட்டா ததுவா யெங்கெங்குஞ், சிரங்கால் கைகண் முகமுடைத்தாய்த் தெரியப் படாதாய்த் திர மாகி, யிரும்பார் நீர்தீ கால்வான மெல்லா மிருத்தற் கிடமாகும், பரந்தா னுணர்ந்தோர் நிர்க்குணமாம் பரம வியோம மென்பர்களால். 3

அரிதா யறியா வறிவேயா மனைத்தா ருயிர்க்கு முயிரந்தப், பெரிதா யகமும் புறமுமாம் பிரம நானே பிறர்க்கென்றுந், தெரியா தென்னு லேபரம்பி யென்பா லிருந்திச் சகமெல்லாஞ், சரியா நின்ற தென்றறிவான் சகல வேதங் களு மறிவான். 4

ஒருதா னுய பரம்பொருளை யுணரப் படாத வியல்பதனுற், றெரியா மையெனப் படுமந்தத் தெரியா மையிலே திகழ்காலம், பிரதா னந்தான் புமான்பிறந்த வவற்றுன் முழுதும் பிறத்தலினு,

னிருபா திகமாம் பிரமமய நிகழ்வே யிந்த நிகழ் வெல்லாம். 5

சொன்ன காலம் பகுதிபுமான் ரேற்ற மென் பா லிரண்டிற்கு, முன்ன ராகுங் காலமிவை மூன்று மென்பா லேமுடியு, மன்ன தன்மை யாலாதி யந்த மின்றி யந்நியமா, யென்னில் வேறு யின்மையினு லென்ன துருவே யென்பர் களால். 6

மகமுத லாக விசேடமீ ருக மன்னுமிச் சகத் தெலாந் தந்து, சகலவா ருயிர்க்கும் மோக மே செய்யுஞ் சத்தியைப் பகுதியா கவுமப், பகுதியி லாங்கா ரத்துடன் புணர்ப்பாற் பஞ்ச விஞ் சகனெனப் பட்டுச் சுகமொடு துக்கந் துய்ப்பவன் புருட ளுகவுந் துணிந்தனர் தொல்லோர். 7

ஆதிவி காரப் பகுதியின் மானு மறிதலில் விஞ்ஞா தாவும வன்பே, ரேதவ கங்கா ரம்மென மானு மொருவனு மேயங் கிருபெய ருற்றான், றீதுறு தேகங் கொண்டுந டத்துஞ் சீவனு மாகச் செப்புத லுற்று, ஞதலி னெந்தப் பிறவியு மின்ப துன்பமு மாங்கா ரத்தவனுலே. 8

கோல மறிவே சீவனுக்குங் கொண்டு தூய்க்குங் கருவிமாஞ், சாலு மதனு லவிவேக மதனுற் றுன்பஞ் சாருமான், மாலும் பகுதி யிற்புருடன் வைத்த பற்றுன் மற்றந்தக், கால்ஞ் செய்யும் பிறப்பிறப்புக் கதுவே யென்றுங் காரணமாம். 9

படைப்பதுங் காலந் தானே படைத்தவை யாவு நோய்த், துடைப்பதுங் காலந் தானே தொல்லையீ றில்லாக் காலத், திடைப்படத் தோன்றி மாயு மியாவையு மியாவ ரேனுங், கடப்பவ ரில்லைக் காலங் காலமே கடந்து நிற்கும். 10

நிகில வுலகு நடக்கும்வகை நேரே நியமிக் கின்றதது, சகல வுயிர்க்கு முயிருமது தானே யுள்ளா யிருக்குமது, வகில வறிவு முடையதது வாத லான்மற் றக்காலம், பகர வுறுவர் சநாதந னும் பகவான் புருடோத் தமனக. 11

இந்தி யங்களிற் பரமந மநத்திலாங் கார
மந்த மானவாங் காரத்திற் பரமவ்வி யத்தம்
பந்த மாமதிற் புமான்பர மதிற்பரங் கால
மிந்த யாவைக்கு முயிரிதிங் கிதனினு லெல்லாம்.

சகத்தி னுயிராங் காலபரந் தன்னில் வியோ மம் பரமதனை, மிகுத்து நின்ற வியல்பதனல் வியோமா தீத னுயெல்லாந், தெகித்த வதனு லநலென்று செப்பப் பட்ட யானுகும், பகுப் பொன் றில்லாப் பரப்பிரம மென்னில் வேரோர் பரமில்லை. 13

பரமா மெல்லாப் பொருளுக்கும் பரமா யுள்ள வெனையறிந்த, வரமா முனிவன் ருனென்று மரியான் பிறவான் மன்னுசரா, சரமா முலக மெனையொழியத் தானுண் டாகா தொரு காலுந், திரமா நானே யுலகனைத்துஞ் செய்கின் றேனுஞ் சிதைப்பேனும். 14

ஏகமாய் நின்ற வென்ற னேவலா லெல்லை யில்லா, மோகமாஞ் சகத்தை யென்றன் முன்ன ரே நின்று காலம், பாகமாய்ப் பண்ணு மென்று பரம்பர னருளி யீதே, யாகும்வே தங்க ளெல்லா மறைந்தகெதன் றருளிச் செய்தான். 15

3. சம்பிரதாய அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் — 100.

# 4. பத்திமை அத்தியாயம்.

விரிந்ததிங் கேவனுல் விண்மு தற்பொருள்
பெருந்தகை யாமவன் பெருமை பேசிடப்
பரங்தெழு சிந்தையை யொருக்கிப் பத்தியா
லருந்தவர் கேண்மினென் றருளிச் செய்குவான். 1

சகத்துளோ ரியாவர்க்குஞ் சான்ருகி யா
னென்று, மகத்துளே நின்ருலும் பழகியபத்
தியினன்றி, மகத்தினுற் ருநத்தான் மாதவத்
தான் மற்றுமொரு, முகத்தினு லொருவர்க்கு
முன்னிற்கு மவனல்லேன். 2

ஈங்கென துள்ளா யிருக்கவெப் பொருளு
மெதுக்குமுள் ளாகியா னிருப்பன், ருங்குவன்
முழுதுங் தருகுவ னெல்லாஞ் சகலமு மழிவ
தென் றன்னு, லோங்கிய முனிவர் பிதிரர்மற்
றும்ப ரொளிமிகும் பிரமரிங் திரர்வே, ருங்கொளி
மிகுத்தோ ரியாவரே யாக வவருமென் னுண்
மையை யறியார். 3

சந்ததம் வேத மியாவையும் பரமாச் சாற்ற
வும் படுவதிங் கெனேயே, யந்தண ரெல்லாம்

வேள்வியி னுலு மங்கியிற் போற்றுவ தெனையே, யெந்தலோ கத்தும் பிதாமகன் முதலா மியா வரு மிறைஞ்சுவ தெனையே, சிந்தையை யொருக்கி யோகிக ளுளத்தே தியாநமுற் றிருப்பது மெனையே. 4

எக னகி நிற்கின்ற யானே யெல்லா விமை யவர்க்குந், தேகம் பண்ணி யவற்றுள்ளே தித னய் நிற்ற லாய்ச்செய்ய, மியாக மெல்லா மெனக்குறித்தே யியற்று கின்ற ரவற்றிலவிர்ப், பாகங் கொள்வே னவற்றின் பயனுங் கொடுக் கப் படுவேனன். 5

பத்தியின வியாவர்சிலர் பரவியெனைப் பணி கின்றார், சத்தியமே யவர்களுக்குச் சந்நிதிபண் ணுநிற்ப, னித்தமுன்ன நால்வேத நிட்டர்களா யறநெறிசே, ருத்தமரா மவரெனினு மொழி வறவே யுணர்கில்லார். 6

மறையவ ரரசர் மாதவஞ் சிறந்த வணிகர்தா மநத்தினல் வணங்கிற், றுறைவறு பரமா நந்த மாம் பதத்தைக் கொடுப்பனன் குலமிலா வெந்தக், கறையுறுங் குலத்தோ ராயினு மதனைக்

காலபா கத்திலே பெறுவ, ரிறைபென வெனை
யே பத்தியான் மலரிட் டிடைவிடா திறைஞ்சுவ
ராகில். 7

பழுதிலவ ரென்னுடைய பத்தரொரு காலு,
மழிவிலர்க ளென்றடியி லேயறைத லுற்றேன்.
றெழுதவரெ னன்பனெயெ னைத்தொழுத லுற்
றோ, ரொழியவிகழ் வாருமெனை யேயிகழ்த
லுற்றார். 8

கலையாள ரியாவரினுங் காயாதன் மலராத,
விலையாத னீராத வியன்றதுகொண் டென்
பாலே, நிலையாய பத்தியினு னித்தமெனை வழி
படுவான், றலையாய வன்பனெனக் கியாவரினுந்
தானினியான். 9

படைத்தவனைப் படைத்தவற்குப் பண்டையே
மறையினைத்துங், கொடுத்தவனு னுதலிலெக்
குரவர்க்குங் குருபரனுன், றுடைப்பவனு னசுரர்
களைத் தொல்லறத்தி னின்றோரை, யிடர்ப்படுமா
றொழித்தவர்கட் கின்பமளித் திடுபவனுன். 10

ஒது மியோகியர்க டங்க ளூற்பவ மொழிப்ப
னுனுறு பிறப்பினுக், கேது நானொரு பிறப்பி

றப்புமில ஞவ ஞனிவகி லத்தினுக், காதி நானது துடைப்ப ஞனது புரப்ப ஞன்முழ் தளிப்பஞ, னீதி தானினைய லற்ற மாயை செய்து நித்த ஞய்மறைய நிற்பஞன். 11

வஞ்ச மாயையொரு சத்தி யென்றனது மற்றி யாரையும யக்குமாம், விஞ்சை யாகு மொரு சத்தி மற்றெனது விமல யோகுபுணர் வார்கடந், நெஞ்சின் மேவியத ஞலம் மாயையினை நீக்கி யேநிகழு கிற்பஞ, னஞ்சி டாதெனைய நந்த சத்தி களு மியானி னைத்தவண மாகுமால். 12

ஆலம் பரமாஞ் சத்திகளுக் காலம் பரஞ னடங்கவுமென், பாலங் கிருக்கு முத்தியு மென் பாலே யெவர்க்கு முள்ளாயென், மாலொன் றியமா யையையடைந்து மலரோன் வடிவு கொண்டொன்று, ஞாலந் தன்னை யுண்டாகப் பண்ணு நாநா விதமாக. 13

ஓதி யாவையுந் தாஞயு யிர்க்கெலா
நாத ஞகிய நாராய ணனெனுந்
தீதி லாதவென் சத்திதி தித்தலா
லீதெ லாநிலை பெற்றேயி லங்குமால். 14

மூன்று வதுருத் திரமூர்த் தியதாய்த்
தோன்று வகைகின் றுதுடைப் பதனைச்
சான்றோர் பலர்தா மதகா லமென
வூன்று வெனதா கவுரைப் பர்களால். 15

நித்தமிய மத்துடனே நெறியுறப்பார்ப் பார்கள்சிலர், பத்தியாற் பார்ப்பர்சிலர் பாவனையாற் பார்ப்பர்சிலர், சத்தியமா ஞாநத்தாற் பார்ப்பர்சிலர் சாற்றுகின்ற, வெத்திறத்தாரினுமிவனே யெனையுணரு மெய்ஞ்ஞாநி. 16

அறிவால் வழிபா டுறுவா னெவன்மற் றவனென்னிற், பிறிவா னவனியா னெனவேயினைமின் பிறர்தாமு, முறவால் வழிபா டுடையா ரடையா ரொருகாலம், பிறவா ழியிடைப் பிரிவா யெனையே பெறுகின்றார். 17

எல்லா வுலகங் களுமென் பாலே யென்னுலே, செல்லா நின்றுஞ் செயலொன் றிலனுன் சிவயோகி, யல்லா னடவா தெனவும் மந்தச் செயலென்பா, லில்லா தமையும் மறிவா னென்றும் பிறிவானுல். 18

கால மாகிய பாஞ்செயு முழுவதுங் கண்டு கொண் டிருப்பேனு, னூலி னுலுநண் ணுணர் விறைற் பிறிதினு னுவன்றிடப் படுவேனுன், மாலி லாதமா யோகிமா தேவனுன் மகத்துவ மெனக்குண்டா, மூல மாகிய பரத்தினிற் பரமமா முறைமையான் மொழிகின்றேன். 19

படைப்பவனு னெப்பொழுதும் பரம்பரயோ கிக்கிருந்து, நடத்துவனு னனவொடுக்க மிலா ஞான யோகத்தாற், கிடைத்திடுமென் றனை யாகக் கெழுமியயோ காநந்தத், திடைப்படலா னடஞ்செய்வே னெல்லையில்பே ரின்பத்தால். 20

யானுடு மியல்பறிவா னெல்லாவே தமுமறி வான், வானுடர் மாமறைக ளறைகின்ற மறை விதனைத், தானுளும் பெறவுரியான் றவமுடையா னிசமுடையா, னுனத வன்புடையா னுகிதவ நலமுடையான். 21

4. பத்திமை அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் – 121.

# 5. விசுவ ரூப அத்தியாயம்.

---

இவ்வளவு தானருளி யின்பமுட னன்பர்க்
கவ்வளவி லாததிரு மேனியத னாலே
யெவ்வொளியு மானவனி லங்கியவ ருள்ளே
செவ்வொளிவி ளங்கநட நின்றுசெய லுற்றான். 1

எண்ணமதி றந்தபர யோகவித யத்தே
வண்ணமதி லாதபர மாகியம கேசன்
விண்ணினிடை யேவிமல னானவரி யோடுங்
கண்ணினெதிர் நின்றுநட மாடவவர் கண்டார். 2

ஏவன் மாயை யிந்தவுல கெல்லா மாகி யிருப்ப
துவா, மேவ னாலே நடக்கின்ற தேவன் பதங்கள்
சிந்தித்தே, பாவ மான வஞ்ஞாநந் தன்னா லுண்
டாம் பயம்போகு, மாவ வந்தப் பரம்பொருணின்
றாடக் கண்டா ரன்போடும். 3

நித்திரையு ரூதவதில் வாயுவைநி றுத்திப், பத்தி
யொடு சாந்தியைய டைந்தபர யோகத், துத்த
மர்க ளாதலுத யாத்தமந மில்லாச், சுத்தவொளி
யோடவ்வொளி கண்டனர்க ளுயோர். 4

கணமாத் திரையிற் கழல்கை தொழுவோ
ருணரா மையழிக் குழுருத் திரனே
வணநா டரியா னையம்மா முனிவர்
கணமா வெளிகண் டனர்கம் மிசையே. 5

சிரங்க ளாயிரஞ் சேவடி யாயிரங்
கரங்க ளாயிர மாய்க்கரத் தேந்திய
வுரங்கொ டண்டமு மோங்கிய சூலமும்
பரந்த வேணியும் பான்மதிக் கண்ணியும். 6

புண்டரிக வுரியுடையும் பொன்னொளியாற் பூமகன்பே, ரண்டமெலா மாவரித்த வநலிரவி மதியென்னக், கொண்டிலகு முக்கண்ணுங் கூடொ யிறுங் கோடிபெய, ருண்டருக்க ரெறிக்கின்ற ரெனத்திகழு மோருருவும். 7

தனதான திருவுருவிற் சகமெலாம் பிறந்துதன
தநலாலே யழியமிக வதிசயமாம் படிகாட்டி
யினமான தில்லாத விந்தவடி வந்தானே
யனையாநின் ருகாசந் தனிலாடி யருளினனல். 8

ஞாலமெலாஞ் செய்கின்ற நாதனைஞா நச் சுடரைக், காலவுரு வனைக்கலைக ளியாவையுமாங்

காரணனே, யாலமமர் களத்தனையிவ் வனைத் துயிர்க்கு மதிபதியைச், சீலமிகு யோகிகடஞ் சிந்தனையிற் றிகழ்தேசை. 9

உற்பவரோ யுற்றவர்க ளொழிப்பதனுக் கொரு மருந்தாங், கற்பகத்தை யோகிகடங் காரணத்தை யாரணந்தேர், தற்பதத்தைப் பரமான சத்திகட்குச் சத்தியா, மற்புதவா தாரத்தை யமரேசர் தொழு மரசை. 10

ஆகா தழியா திருந்தபா மாகந் தத்தை யகி லத்துக், கேகா திபனை யெத்தேவு மெல்லா முனிவர் களுமிறைஞ்சி, நீகா வென்னு நின்மலனை நித்யத் துவத்தை நிரந்தரமா, மியோகா லடையு முயர்பதியை யொளிகட் கெல்லா முள்ளொ ளியை. 11

துறவின றிவிடைத் தோன்றுஞ் சோதியை
யுறவினி லறிபவர்க் கெளிய வுண்மையைப்
பிறிவினி லறிவரி தாய பெற்றியை
யறிவினை யறிபவர்க் கருளு மண்ணலை. 12

மாதா விலியா கியகருணை மாதே வனைமா மாதவத்தி, ஞாதா ரத்தை யொருகாலு மழியாச்

செல்வ மளிப்பவனைப், பேதா பேத மற்றெல்லாந்
தானு யிருந்த பிரமத்தை, யோதா துணரு மியோ
கத்தை யளித்தற் குரிய வொண்சுடரை. 13

உருவோவிங் கருவோவென் றும்பர்க்கு முணர்
வரிதாய்க், கருவாகி நின்றபெருங் கண்ணுன
காரணனைச், சொரூபாநந் தனைத்தனது சோதி
யுளத் தேதோன்றக், குருவாகுந் திருமேனி
கொண்டாடக் கண்டார்கள். 14

கண்டு மாயையை யதற்கு ளேயொருவர்
காணெ ணுவகைக ரந்துதா, னண்டர் மாயை
யை மறைத்து மீண்டுவெளி யாகி யாடியரு ளண்
ணலே, வண்டு ழாய்முடிய னுன வச்சகல லோக
யோகியையி டத்திலே, கொண்ட கோலமொடு
கண்டு மாமுநிவர் கூறெு ணுவுவகை கூடினுர். 15

குரம்பையினுள் ளேயிதயக் குகையின்மறைந்
திருக்கின்ற, பரம்பொருளைக் கண்ணலே பார்த்
திப்பல் காற்பணிந்து, கரந்தலையிற் குவித்துத்தங்
காதல்கரை யழிவுறநின், றுரந்தரவோங் காரத்தை
யுச்சரித்தங் குபநிடத்தால். 16

பழுதி லீசன்முன் பாவகற் கண்டதோ
ரிழுது போலவி தயமெ லாமுக
வழுது மன்பினெ டாடியும் பாடியுந்
தொழுது தோத்திரஞ் செய்யத்தொ டங்கினர்.

ஆகமுறு மாருயிர்நீ யவ்வுயிர்க்கு மதிபதிநீ, போகநுகர் புருடனுநீ நுகர்விக்கும் புராதநனீ, யோகிநீ யுணர்பவனீ யுளந்தொறுநின் றுணர் கின்ற, வேகனீ நிர்மலமா யாவையுமாம் பரம் பொருணீ. 18

கரண மெல்லா மொடுங்கினவர் காயத்துள்ளே கதியாகிப், பிரம யோகி யாயுள்ள பெரும வென் றும் பிறவாதாய், மரண மில்லா நின்செம்பொன் வடிவே பரமாய் மற்றெதிலும், பரம மாகி யுயிர்க் குயிராய் நிற்கும் பரமாய்ப் பார்க்கின்றேம். 19

பரமா ணுவின துருவாகிப் படைப்பாய் நீபல் லுலகுகளுந், திரமா முன்னு லேயுண்டாஞ் சிறிதிற் சிறிதாய் மிகப்பெரிதிற், பெரிதாய் நின்னில் வேறில்லாப் பெருமை காணும் பெருந்தகைமைக், குரியா ரெல்லா மொருநீயே வேறொன் றிலதென் றுரைப்பர்களால். 20

போத னாகிய புராணனும் புருடனைப் பொருட் கெலா முயிராக, வாதி நாள்படைத் தனையவன் படைத்தன னகிலமு மந்நாளே, வேத மியாவை யும் விரித்தனை யுன்னிலே மீளவு மனைத்திற்கு, மேதை பூதனு யுளந்தொறு மிலங்குநின் னியல்பு கண் டனமெந்தாய். 21

இப்பிரம சக்கரமி யங்குவது முன்பா
லப்பெரிய மாயையுடை யாயமல நீயே
சிற்பரம யோகபதி திவ்யநட நாநின்
பத்மசர ணங்கள்சர ணென்றுபணி கின்றேம். 22

எந்தைநீ பரமா காசத் திடையுறு நிருத்தங் கண்டோ, மிந்தவெப் பொருளு மாறு யேகநீ யாகி நின்ற, வந்தநின் மகிமா வைக்கண் டதிசய மாக வுன்ன, தந்தமில் பரமா நந்த மநுபவித் தநுப வித்தேம். 23

உன்னுரையா மோங்கார முயர்முத்திக் கொரு விதைநீ, துன்னியுட றேறுநீ தோன்றுமை மறைந் திருத்தி, நின்னிடையெல் லாமாய நீமாயாய் நின் னொழிய, வந்நியமா யுளவெல்லா மசத்தியமென் றறைவர்களால், 24

தொழுதரு மறையெலாந் துதிப்ப துன்னையே
பழுதறு முனிவர்கள் பணிவ துன்னையே
யொழிவற வுணர்பவ ருணர்வ துன்னையே
யழிவற நினைபவ ரடைவ துன்னையே. 25

ஒருமறை யநந்த சாகை கொண்டுன துருவ மொன்றி, னருமையை யறிவிக் கின்ற வப்படி யறிய வுன்றன், பெருமையை யறிவார் சாந்தி பெறுபவர் பெறுதா ரெல்லாங், கருமய லுறுவார் சாந்தி கனவிலுங் காண மாட்டார். 26

ஆதி தேவ னீயுலக னைத்து யிர்க்கு மாதியா, யீதெ லாம மைக்குமண்ண லெல்லை யற்ற வின்பமெப், போது மேவி யென்றுமைம்பு லப்ப டாதி ருப்பதோர், சோதி யாகி நித்த முத்த சுத்த னாயி ருக்குமால். 27

படைத்தி நீய ளித்திநீப டைத்த யாவு முன் னிலே, யுடைத்தி நீயொ ருத்தனேயு ணர்ந்து கொண்டி ருத்திநீ, யடைத்தி நீயு ளத்திலேநி ன்னை யேயொ ளிக்குமா, தடைப்ப டாம லென்றுநின்ச ரண்ப ணிந்து சாருகோம். 28

யோகி யாகி யுயிராகி யுணர்வா ஞகி யிணை யில்லா, வேக ஞகி யிந்திரனு மரியு மயனு மீசனுமாஞ், *சேகி தாவுந் தாதாவுந் தீயு மதியுந் திநகரனு, மாகி வெவ்வே றனைத்துருவு மாஞ யெனவே யறைகுவரால். 29

அகில வுலகு மிருப்பிடநீ யறிய வேண்டு மக்கரநீ, சகல தருமங் களும்வளர்க்குந் தாய்நீ புருடோத் தமன்ருனீ, புகலு மரிநீ பூமகனீ புராரி நீயெப் பொருளுக்கும், பகுதி நீநீ யொழிவின்றி நிலையாய் நிற்கும் பராபரநீ. 30

காண மியாவையுங் கடந்திருள் கடந்துனைக் கண்டவ ராதித்த, வருண மானசிந் மாத்திர நேத்திர முதற்புலன் மாஞ்செல்லாப், பிரம மேகமாம் புருடனேர் பிறிதிலாப் பெருமை யாற் பேச்சற்ற, பரம மான்முதற் பகுதிசிர்க் குணம்வெறும் பாழெனு நிகழ்கின்ருர். 31

ஓதுமொ லியூறு ருச்சுவைநாற் றந்தனக்கற்
ருதிமு டிவில்பர மாயசிந் திதமாய்ப்

---

* சேகிதா — தாதா, என்றவை ஒவ்வொரு தெய்வத்தின் பெயர்கள்,

பூதம னைத்தினுக்கு முள்ளாய்ப்பு றம்புமாஞ்
சோதிநி னையறிந்தார் தஞ்சார்பி றவாரால். 32

எந்த யோகிகளு நாடு கின்றபர யோகி நின்
னடியி றைஞ்சுகோ, மந்த மாதியில நந்த சக்தி
யுடை யண்ண னின்னடியி றைஞ்சுகோஞ், சந்த
மின்னதென நாடு மாறரிய சம்பு வேயடியி
றைஞ்சுகோம், பந்த மொன்றில்பரி சுத்த நற்
பரம பாத பங்கயமி றைஞ்சுகோம். 33

கூடுநின் றுருகு மிறைவநின் ஞானக் கூத்தினைக்
கண்டுகும் பிட்டே, நாடுமெங் கண்க ளுன்திரு
மேனி யன்றிமற் றொன்றையு நாடா, வோடுமிம்
மநமு மொழிவற நிறைந்த வுனையல தொரு
பொரு ளுணராப், பீடுறு கமல மலர்ப்பதம் பணிந்
தெம் பிறவிவே ரறுத்தனம் பிரானே. 34

பவனே நின்னடி பணிகோம் பவோற்பவ
னேயடி பணிகோந், தவனே நின்னடி பணிகோஞ்
சங்கர னேயடி பணிகோ, மிவனே யென்றிட
விங்ங னெழுந்தரு ளும்பே ரருளே, சிவனே
யெத்தே வர்க்குந் தேவே நின்னடி பணிகோம். 35

காம னீறுசெய் கண்ணவ ணங்குதுங் கால னூறிய காலவ ணங்குதும், சாம கீதனை நாளும்வ ணங்குதுந் தாளி லெந்தலை யாரவ ணங்குதுஞ், நாம ரூபம தின்றிய னைத்துமா நாம ரூபனை நாளும்வ ணங்குதுஞ், சேம மாகிய வீடருளெந் தையாஞ் சிவப்பிர காசனை யென்றும்வ ணங்குதும். 36

உருப்பநேகவித மாகி யோருருவ னூழ ருத்திரனுள்குவார், விருப்பனேயவர்க டற்பெ ரும்பிறவி வெந்து நீறெழவி ழிப்பதோர், நெருப்பனே நினைவு றப்ப டாவொருகி ருத்த னேநிமல நெஞ்சகத், திருப்ப னேயிறைவ னேசி வாயநம வென்று சேவடியி றைஞ்சினர். 37

எந்தையள வற்றதிரு மேனியையி றைஞ்சிச்
சிந்தைகளி கூருமள விற்சிவனை நேரே
யந்தமறு தன்னையருள் செய்யவரு ளாலே
வந்ததிரு மேனியினை மாலினொடு கண்டார். 38

அளவி றந்தவ னளவுபட் டிருந்தவவ் வருள்கண், டளம்வி யந்தின் னொப்பிலா வுருவுகண் டுய்ந்தோங், களவொ ழிந்துளங் காதலிக் கின்ற

தன் கரைதீர், வளமை யின்னமுங் கேட்கவென்
றடிவணங் கினரால். 39

மேல தானதன் பெருமையைக் கேட்கமேன்
மேலுஞ், சால தாந்தவஞ் செயத்தகு தபோதநர்
தமக்குக், கால காலனெக் கடவுளுந் தொழு
தெழுங் கடவுண், மூல மாதவன் றன்முகம்
பார்த்துமேன் மொழிவான். 40

5. விசுவ நுப அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் — 161.

---

## 6. சிவ சத்தியின்
## செய லுரைத்த அத்தியாயம்.

---

காத லான்முனிவர் கேண்மி னென்பெருமை
காணு மாறருமை கண்டுதா, ஞேத லான்மறையெ
னுள்ள வாறறியு முற்ப விப்பதில கென்றனு,
வீதெ லாமுநிலை பெற்றி யங்குவது மென்றனு
லழிவு மென்றனு, லாத லாலழிவி லாத றப்
பழைய னான நான்முழுது மாகுவேன். 1

அகிலபூ தங்க ளுக்கு மந்தரி யாமி யாய்நான், சகலபூ தமுமென் னுள்ளே சாரநான் ருங்கி நிற்ப, னிகிலமு மதிலெங் கண்ணு நிற்பவ னெனவு மென்னைப், புகலவும் படாதே யென்னிற் பொருள்பிறி தின்மை யாலே. 2

செப்பிடவொ ணுதெதிர்தெ ரிந்திடவு முங்கட்
கெப்படிநி கழ்ந்தது வென்னுடைய மேனி
யப்படியி ருந்தவெனை மாயையத ஞலே
யொப்பிடநி னைந்திடுவ ரேயுணர்வி லாதார். 3

மேவியா தினுமுளனுய் வியனுலகை நடத்துவனுன், ருவிலா வென்னலே சகலகலை களுநடக்கு, மோவிலா வொருகூற்ரு லுண்டாகு முலகனைத்து, மாய்வதா மற்றென்ரு விருமையுமென் மாயையதால். 4

ஈங்காதி யிடைமுடிவற் றிருப்பேனென் மாயையினற், பாங்காகப் பகுதிபுமான் பண்ணினன்முற் பவத்தாமா, ஞங்கார முதலாக வனைத்தும்விரிந் தனவதனு, லோங்காரப் பொருளாமென் னெளியின்விரி வுலகெல்லாம். 5

கரியதாய் நின்றிவ் வுலகினுக் கெல்லாங்
காலசக் கரந்தனை நடத்து, மிரணிய கருப்ப
னுகுமார்த் தாண்ட னென்னிடைத் தோன்
றின னென்னுற், புரியும்வே தங்க ணுன்கையு
மொன்ருய்ப் பொருளதாய்ப் புராணமாய்ப்
புணர்தற், கரியதி லரிதா ஞானயோ கதையு
மடியிலே யவற்களித் தனனுல். 6

எந்த நாளுமெனை யேநி னைந்தவியல் பாலே
யென்னருளி னுலயன், சந்த நாடரிய திவ்ய
மாமெனது தன்மை தானவத ரிக்கிறு, னந்த
மாதியிலென் னேவ லாலவனிவ் வகில லோக
முமமைக்கிறு, னிந்த நாரணன ளிக்கு மாறு
மிவ னென்னில் வேறெனவி லாமையால். 7

கடையுகம திற்கடிய காலவந லாய்நின்
றடையவுமு ருத்திரன ழிப்பதுமென் னுலே
யுடையவலி யாலுலவு மூதையுட லுய்த்தே
நடையைமுத லானவைந டத்துவது மென்னுல். 8

தெய்வங் களுக்கும் பிதிரர்க்குஞ் செய்யும்
பூசை யாகின்ற, வவியங் கவியம் பாகஞ்செய்
தநலோ னளிப்ப தென்னுலே, யுய்வர் திடுமா

றுதரத்தீ யாகு மவனுண் டனவெல்லா, மெய்
வெங் திடாம லென்னியமத் தாலே வேவித்
திடுகின்றான். 9

வருணனெனு மகிலசல பதியுமழை வரவுதவு,
மருணனெனு முலகுதிகழ் வதுசெயம லனும
மிர்த, கிரணனெனு முயிர்மகிழ்வு கெழுமவருள்
பவனுமெம, பாணமென விவரெனது பணிவகை
செய் தொழுகுமவர். 10

மிகப்ப யஞ்செயும ரக்கர் கோனிருதி யாகும்
விண்ணவனும் வெவ்விதா, மகப்ப யன்றனைய
ளிக்கு மந்தகனு மாட காதியள வற்றதோர்,
சுகப்ப யன்செய்யள கேச னுமெனது தோழ
னுஞ்சுருதி சொன்னவா, மகப்ப யன்றனைய
ளிக்கு மிந்திரனு மற்றெ னேவல்செய்து வாழ்
வரால். 11

பொல்லாத பேய்களுக்கும் பூதங்க ளனைத்
தினுக்கு, மல்லாத கணங்களுக்கு மதிபதியா
கியவீச, னல்லார்க்கு நன்மைபெற நல்குவது
நாடொறுமென், சொல்லாலே மற்றவர்க்குச்
சொல்லவேண் டுவதுண்டோ. 12

அருத்திசெய் தங்கிரா வடிவ ணங்குவோ
னுருத்திர கணத்திலுத் தமனி யோகிகள்
வருத்தம தொழித்துவாழ் வாம தேவனுந்
திருத்தமா யென்னுடை யேவல் செய்குவார். 13

தக்ககரு மங்களிலே நடத்துவதுஞ் சார்பி லர்பால், விக்கமளித் திடுவதுவும் விநாயகனென் னேவலினற், செக்கநிறத் தமரர்கள்சே நாபதி யாய் ஞாநத்தான், முக்கியமா மறுமுகனென் னேவலையே முயல்கின்ருன். 14

மதியி ஞன்மிகு மரீசியே யாதியாய் மன்னுயி ரனைத்திற்கும், பதிக ளாகிய பதின்மரு முலகெ லாம் படைப்பதென் பணியாலே, திதிசெய் நாரணன் றேவியா கியதிரு செல்வநல் குவதென் றன், விதியி ஞலென்றன் பணியினற் கலைமகள் விமலவாக் களிக்கின்ருள். 15

வேமெரி நரகி னுள்ளே வீழ்பவர் தம்மை யந்தத், தீமையி னின்று சாவித் திரியெடுப் பதுவு மென்ன, லோமெனும் பொருளை ஞாந யோகி யர்க் குமையாம் விஞ்சை, யாமக ளருளு மாறு மலகிலென் னருளி ஞலே. 16

படவர வரசென் னேவலா லுலகம் பரிப்பதும் பரவையு ணின்று, வடவையுண் பதுமென் னேவ லாற் பதினுன் மநுக்கள்பா லநமுமற் றென்னுற், சுடருடை யறுக்க ருருத்திரர் வசுக்க டொன் மருத் துக்களச் சுநிக, டிடமுற மற்றுந் தேவர்க டத்தந் தேவையென் னேவலாற் செய்வார். 17

பொருவில் கின்னரர் கருடர்கிம் புருடர்சா ரணர்கந், தருவர் சாத்தியர் சித்தர்விச் சாதர ரியக்கர், வெருவ வந்திடு மரக்கர்வே தாளபூ தங்க, ளொருவ ரிங்கொழி யாமனுன் விதித் தவா றுறைவார். 18

நிகழ்ந்திடுங் கலைகள் காட்டைக ணிமிட நீதிசெய் சாந்திநாண் முகூர்த்தம், பகர்ந்திடு மிருது வாண்டுமா தங்கள் பக்கங்க ளென் விதிப் படியே, யுகங்களு மநுக்கட் குள்ளவெல் லைகளு முறைத்திடு பரா * பரார்த் தங்க, ணிகழ்ந்திடுங் கால பேதமியா வையுநா னிய மித்த படியிலே நிலையாம். 19

---

* பரார்த்தம் - பிரம கற்பத்தின் அரை.

உற்பவச ராசரவி யோகியொரு நாலும்
பற்பலவ தாகமொழி பாதலம லைத்து
மெப்புவந மும்பிரம ரண்டமவை யாவு
மிப்படியி ருக்குமது வென்றனிய மத்தால். 20

அந்நிய மின்றி யென்னிலே தோன்று மாந்தபிந் நாந்மக மாயென், றன்னிடை நிகழும் பிரமரண் டங்க டனக்கொரு முடிவுதா னிலதான், முன் னிறந் தனவு முடிவிலை யென்பான் முளைத்திடப் படுவதப் படியே, யென்னிய மத்தாற் றோற்றமு நிலையு மிறுதியும் பெறுவதிங் கெல்லாம். 21

பூத மைந்தி ஞெடுமாமும் புத்தி மமதை பூதாதி, யாதிப் பகுதி யென்னியமத் தாலே யென்பா லாயிருக்கு, மோதி வந்த வினைத் திற்கு மியோநி யாகி யுளமாயை, பேதஞ் செய்வ தென்னேவ லாலே யன்றிப் பிறிதில்லை. 22

ஆகமெடுத் தவர்க்கெல்லா மதிபதியா மாந்மா வாம், போகநுகர் பரம்புருட னென்னேவல் புரி கின்றான், மோகமெலா மறமாற்றி முடிவில்பர மாநந்த, வேகவினைத் தரும்விஞ்சை யென் னருளா லியங்குவாள். 23

பலவுரை செய்குவதென் பலபர சத்தியினு,
லுலகமெ லாமெனிலே யொழுகவெ னுள்
ளொழியத், தலகுப ரப்பிரம மாகிய சோதி
யதா, யிலகுவ னுனெனில்வே றில்லையோ
ரந்நியமே. 24

தொல்லை யுள்ளவென் சோதியைச் சுத்தமா
நல்ல வன்பொடு நானுமக் கோதினே
னெல்லை யுண்மையு ணர்ந்தவர்க் குற்பவ
மில்லை யில்லையென் றீசனி யம்பினன். 25

6. சிவ சக்தியின் செய லுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் — 186.

---

## 7. தத்துவ நிசம் விபூதி அத்தியாயம்.

---

அரிய மானதற் றறிகு வார்கள்பின்
செனியு ரூதவா திகழுந் தேவனுந்
தனிய னனவென் றன்மை யோதநான்
முனிவர் கேண்மெனு முதல்வ னேதுவான். 1

சிரந்தந மாய்மிகத் திரமாய்ச் சிற்சுகந்
தரந்தனு ருவாயவி கார மாய்ச்சதா
நிரந்தர மாகிநிட் களமாய் நித்தமாய்ப்
பரம்பர மானதென் பழைய தாமமால். 2

சங்கரனு னுருத்திரரி லியோகிகளிற் சம்புநான்
பங்கமில்சீர் வசுக்கடமிற் பாவகனு கின்றேனுன்
மங்கையரின் மலைமகனுன் வலியவரில் வாயுநான்
சிங்கமிரு கங்களினுன் றிநகரரில் விண்டுவுநான். 3

இந்திரனு னிமையவரி லியக்கரில்வச் சிரவ
ணனுன், சந்திரனுன் ருரகையில் விரதத்திற்
சத்தியநா, னெந்திரத்தில் வில்லுநா னிலங்கியசா
வித்திரியா, மந்திரநான் மந்திரத்தின் மாதவரில்
வசிட்டனுன். 4

ஞானமதி லென்னுடைய ஞானநா னன்ருன
யானையயி ராவதநா னுச்சிரமத் தில்லறநான்
கானமுறு பறவைகளிற் கருடனுன் கதியதனி
னீனமிலா முத்திநா னிராக்கதரி னிருதிநான். 5

எண்ணுமதிற் காலநா னெல்லையிலா மாயை
பல, பண்ணுமவர் களிலரிநான் பாசத்தின்

மாயையுநான், புண்ணியமாந் தீவுகளிற் புட்கர நான் பூதத்தில், விண்ணுநான் றத்துவத்தின் மிருத் தியுமா கின்றேனன். 6

சித்தர்களிற் கபிலனன் றேசங்க டனிற்பிரம
மத்தன மீசர்களின் மகேசனன் மறைகடமி
லுத்தமவோங் காரநா னூர்களில்வா ரணசிநான்
றத்துவஞா நிகடம்மிற் சதுர்முகன கின்றேனன்.

கற்பங் களின்மா கற்பநான் கணேசர் களிலே விநாயகனன், சர்ப்பங் களிலே யநந்தனன் சாயம் புவுநான் மநுக்களிலே, வெற்புக் களின்மா மேருநான் விசுவ கன்மா நானெனலாஞ், சிற்பஞ் செய்ய வல்லவரிற் சேநா பதிக ளிற் குகனன். 8

எவ லார்களிலி ராம னைசுரர் தங்க ளிற்பிரகலாதனன், மேவ லாரகல வெல்லும் வீரர்களில் வேளும் வீரபத் திரனுநான், ருவில் சாமமறை தன்னி லத்தின்மிகு சேட்ட சாமமது தானுநா, னேவி லாதடைவி லேசு ழன்றிடுமு கங்க ளிற் கிருத யுகமுநான், 9

தக்க பிரசா பதிதம்மிற் றக்க னெக் கணங்களினும், விக்கி நவிநா யகனுன்ருன் வியாதனுன்மெய்ம் முநிவர்களிற், ருெக்க சூத்தங்களிற்புருட சூத்த மாவே னுன்சோதி, மிக்க விஞ்சை யாவையினுந் தன்னை யறியும் விஞ்சை நான். 10

ஒன்ன லர்த்தெறு மாயு தங்களி லோங்கு வச்சிர மாவனுன், பன்னு மெவ்வுல கங்க ளிற் பர மேச ரிற்பர மேசனு, னின்னு மிங்குல கிற்சிறந்தன யாவை மற்றவை யென்னதா, மன்னு சோதியில் வந்து தித்தன வென்ன வேமநம் வைம்மினீர். 11

எந்தப் பிராணி களும்பசுக்க ளென்னப் படுமிங்கதிபதியான், பந்தப் படுக்கு மென்மாயா பாச மதனுற் பசுபதியாய்த், தொந்திப் பதுவீழ்ப் பதுவாமித் தொழிலென் விளையாட் டேனையன்றி, யிந்தப் பசுக்கள் கட்டுனர்க ளில்லை யவிழ்ப்பார் களுமிலதால். 12

ஊறதாம் போகமே யூட்டி விட்டிடப்
பேறதா யுயிர்களைப் பிணித்த மாயைதன்

கூறதாங் கணங்களாற் கூறப் பட்டநா
லாறதாம் பாசம தறியக் கூறுவாம். 13

மாம்புத்தி மமத்துவம்வான் வளிதீநீர் மண்
ணெட்டு, முனையுற்ற பகுதிகளா மூக்குவிழி
செவிநாமெய், பனவுற்ற வாய்கைகால் பாயுரு
பத் தஞ்சத்தந், தனுவுற்ற லுருச்சுவைநாற்
றங்களெனுந் தத்துவமும். 14

ஆகவிவை யிருபத்து மூன்றிவற்றுக் காதிதா
னுகியநா தியதாகி யகிலத்தின் காரண மாய்
மோகசமு சயகுணமாய் முதற்பகுதி தெரியாமை
யேகமுமாந் தத்துவங்க ளிருபதுட னீரிண்டாம்.

ஒத்தமுக் குணங்களாம் பகுதி யுத்தமஞ்
சத்துவ ஞானமாந் தமமஞ் ஞானமா
மத்திமங் கலப்பதா மற்றிம் மூன்றையும்
புத்தியின் விகாரமே புலப்ப டுத்துமால். 16

தருமபாவமி ரண்டுள தப்புதற்
கருமை யாகிய பாசம தாகிலு
மிருமை யாதர வின்றிபெ னக்குநேர்
கரும முத்தியின் காரண மாகுமால். 17

அறியாமை காமம்வெறுப் பாமாசை யகஞ் செறிதற், பொறியாகப் புகுந்தொருவர் போக் கரிய பாசமிவை, முறியாத வினைத்தளையான் முடிச்சிட்டே யென்மாயை, பிறியாதென் பாலு ளதாம் பிறவிகளுக் கடியாக. 18

பின்னிய பகுதியாம் ப்ரதாந மாயையு
மன்னிய புருடனு மானு மாதியாய்த்
துன்னிய விகாரமுந் தொல்லை யீசனி
லந்நிய மின்மையா லவனே யாகுமால். 19

அவனே பாச மவனேகட்டுண் டவனே கட்டு மதிபதியு, மவனே பசுக்க ளாகின்ற னனைத்து மாகி யுள்ளானு, மவனே யவனை யொருவர்களு மறிவா ரில்லை யனைத்திற்கு, மவனே யநாதி புருடனென வவனை யறிவா ரறைகுவரால். 20

7. தத்துவ நிசம் விபூதி அத்தியாயம்
முற்றிற்று.

ஆக விருத்தம் — 206.

---

## 8. பிரபஞ்ச சர்வ காரண புராண புருஷப் பிரதிபாதநம்.

---

வருந்திய மறைகளீ றறிபு மன்னுயி
ரிரும்பவக் கடல்கடந் தேற வுய்ப்பதாந்
திருந்திய வுணர்வது செப்ப வின்னமு
மருந்தவர் கேண்மினென் றருளிச் செய்குவான். 1

பகருபா மீசன் வெறுமொருவ னீறில் பரம னெனு மாதி பகவனு, னிகரிலழி யாத பிரமமய மாகி நிமலநிலை யேயெ னெழிவுறுக், ககநவடி வான பிரமமெனி லியோநி கருவையுற மேவி விடுவனு, னகிலசக மாக வறிவருமென் மாயை யெனவிதைய னுகி யமருமால். 2

சென்மா தியதாம் பகுதிபுமான் சிறந்த மான்பூ தாதிமநந், தன்மாத் திரைகள் பேதங்க ளிந்தி யங்கள் சமைத்ததனுற், பொன்மா விரவி பல கோடி போலு மண்டம் போதானே, டென்மா சத்தி யெல்லையிலா வுயிரு முளதா யிழைத்திடு மால். 3

எந்தயோநி யிற்பிறப்பா ரியார்க்குந்தா யென் மாயை, தந்தையா னெனவறிவார் சநகவினை தப்புவாா, லெந்தையா யெனையறியா திருப்பவ ரென் மாயையினுற், பந்தமா மியோநிதொறுற் பவித்திறந்து பதைப்பர்களால். 4

பாங்காய விச்சைகட்கும் பகர்பூத மனைத்தி னுக்கு, மீங்காரு மிலரிறைவ ரென்னையலா லியானேயா, நீங்காத வதிபதியாய் நின்றுல கம் படைக்கின்ற, வோங்கார வுருவான பிரம மென வுள்ளேனும். 5

பொன்றுகின்ற பொருள்கடொறும் பொன் ருதே புரையறநா, னின்றதறிந் தவனென்னை நோக வறிகின்ற, னன்றியுமிங் கவன்றன்னைத் தன்னுலே யறிந்தழியா, தென்றுமுள பரமபத வின்பமடைந் திடுகின்ருன். 6

சங்கையறத் தத்துவங்க டன்னுடைய நுண் மையுமென், னங்கமென மொழிகின்ற வாறி னையு மகிலத்தின், பங்கமறு பகுதியுமப் பகு திவிநி யோகமுமென், றிங்கெனது நிலையறிந்தா னென்னையடைந் திடுகின்ருன். 7

இறைவனுக் காதியா யிலங்கு போதமு
மறிவது முழுதையு மநந்த சத்தியு
நிறைவொடு சுதந்தர நித்த சத்தியென்
றறைவர்க ளறிபவ ராறு மங்கமாய். 8

நுண்ணியதத் துவங்களென நுவல்வனதா நுகர்சிவன், வண்ணமிலா மநமொடுதன் மாத் திரைகண் மற்றெதுக்கு, மெண்ணுவதா மிவை யடியா மியாதினுக்குங் காரணமாய்ப், பண்ணு வது பகுதியதன் விநியோகம் பந்தமதாம். 9

ஆரண மந்த வுண்மையிற் கரப்ப தாகுமென் றறைந்திடப் பட்ட, வோரண வின்றி யுள்ளவெப் பொருட்கு மியோநியா தொன்றதிவ் வுலகின், காரண மந்தப் பகுதியி லதனைக் கடந்துமே லாகுமொன் றுன, பூரண மான மகேசனென் றுரைக்கும் பொய்மைதீர் பரமனும் புருடன். 10

மோக மாமுலக முற்றி னுக்குமொரு மூல மானதெரி யாமையும், போகு மாசெயும்வி ருத்தி யும்பொருள னைத்தை யுந்தருபு ராண ஞ, யேக னகியிறை யாகி வானமென வெங்கு

முள்ளபர மீசனு, மியோகி யாயுளவொ ருத்த
னேயெனவொ ருக்கி மாமறையு ரைக்குமால். 11

பாக மென்பர்ப குதிப்ப ரமனே
டேக மென்பர்சி லரனு வுக்கனு
வாகி மற்றது மப்படி யாமென்பர்
யோகி யுள்ளதெ லாமென்ப துண்மையாம். 12

என்னையுற நினைப்பவரி லெங்கேனு மொருவ
னவன், றன்மதியைக் கடந்தருளாற் றன்னிதயக்
குகைதன்னிற், பொன்மயனுய்ப் புராணமாம்
புருடனுய்ப் பொருந்துமெனி, லந்நியம தறவறிவா
னவன்பரமத் திடையடைவான். 13

8. பிரபஞ்ச சர்வ காரண புராண
புருஷப் பிரதிபாதந அத்தியாயம் முற்றிற்று.
ஆக விருத்தம் – 219.

---

## 9. மாயா விகார அத்தியாயம்.

---

நின்மலமா யவிகாரி வேறுபடா நிட்களனுய்ச்,
சின்மயனுய் நித்தனுஞ் சிவனேநீ செகத்தான,

தன்மையினை யருளென்னத் தபோதநரோர் தனை யொழிய, வின்மையினு னப்பரிசை யின்னமவர்க் கெடுத்துரைப்பான். 1

என்னெழிய வில்லைசக மியானவ்வுரு வல்லே
னுன்னிலொரு மாயையுல குக்குமுத லாகு
ஞன்னுருவ மானவெனை யன்றியது நாளுந்
தன்னியல்பி னுனிகழ்வு றத்தகுவ தன்றால். 2

யாதொன் றுருவ ராலேனு மறியப் படாத வியல்பாமென், னுதி முடிவின் றியசத்தி யந்த மாயை யதனுலே, பேத வுலக முண்டாகிப் பிறங்கு மதனுற் பிறர்க்கென்றும், போதப் படாத வென்னுலா யுள்ள பொருளிப் பொருளெல்லாம்.

சோதியா நந்த மாகுந் தோன்றிடா வேறே தொல்லை, யாதிகா ரணமா மென்றே யறைவர்க ளறிய வொன்றாய், நீதியாய்ப் பரமா நந்த நிமல மாம் பிரம நானே, பேதியா வென்னில் வேறுண் டாவது பிறிதொன் றில்லை. 4

அன்றி யின்மைய றிந்தவ ராதலா
லென்று மிச்சகந் தானது மியானென

வொன்று மாகியு லப்பில னைத்துமாய்
நின்றல் கண்டிவர் நிச்சயித் தார்களால். 5

சின்ம யாநந்த மாய்த்திகழ் கின்றதோர்
தன்மை யாய்ப்பர மாகிய சாந்தமாய்த்
தொன்மை யானசு டரால்வி காரமொன்
றின்மை யாமெனக் கேதமொன் றில்லையால். 6

எனந்த மற்ற வேக மேனி யெண்ணில் பேத மாக்கவற், றநந்த சத்தி யென்னி லேய வற்றின் மாயை யாதியா, வனைந்த வந்த மாயை யான வானி லேம நத்தினு, னினைந்தி டப்ப டாத வவ்வி யத்த மாகி நிற்பனுன். 7

சத்தியொன் றுலே யானுந் தக்கசா யுச்ச மான, முத்தியுண் டாகு மொன்றுன் முழுது செல் வமுமுண் டாகுஞ், சித்தியா நிற்ப தெல்லாஞ் சிதையுமொன் றுலே யெல்லா, நித்திய மாக வென்ற னியமத்தா னிகழு மன்றே. 8

மத்தியமாய்ப் பாஞ்சுடரா மண்டலத்தான் மண்டிதமா, யத்தகுமக் காமாகி யறிவரிதா

மநாதியாம், வித்தகமாம் விட்டுவின்மெய்ப் பரம பதம் விச்சையெனுஞ், சத்தியினு னிகழுமிது தக்கோர்க ளறிவர்களால். 9

உடுக்கு மாடை யினைப்போல வுலக மியா தொன் றிற்குறுக்கு, நெடுக்கு மாகு நிகிலமு மாய் நினைத்தற் கரிதா மியாதொன்றின், மடக்கும் வாக்குத் தான்செல்ல மாட்டா மையினுற் பவக் கடலைக், கடக்கும் பிரம வாநந்தங் கண்டா னடுக்கங் காணுனல். 10

ஈநஞ் செய்யு மஞ்ஞாந விருளைக் கடந்து மேலான, பாநந் தனக்கே யுளதான பரம வொளி யாம் பரம்பரனை, ஞாநந் தன்னுல் வேறறவே நானென் றறிந்த நல்லோனவ், வாநந் தமதாம் பிரமமய மாகி வீடே யடைகின்முன். 11

ஒப்பதுமிக் கதுகுறைந்த வொன்றுதனை யொழித்தில்லா, தெப்பொருளெவ் வொளிகட்கு மெவ்வொளிதா ஞெளியாகுஞ், சிற்பரமா காயத்தே திகழ்கின்ற வதுதெளிந்த, வப்பெரியோ னுநந்த மாய்ப்பிரம மாகின்முன். 12

உலகங்கண் முழுதுந்த னுளதென்ன வுளதா
யலகின்றி யழிவின்றி யறிவின்றி யமிர்தா
யெலையொன்று மறநின்ற பாவின்ப மிதிலே
நிலைநின்ற வவனின்ற நிலையென்று மழியான். 13

புன்மய கோசமுள் புக்கொ ளிக்குளே
நன்மைய தாகிய ஞானக் கண்ணிளுற்
சிந்மய மாய்த்திகழ் தேசை நோக்கிய
தன்மையால் வியோமநற் ரூமங் காண்பரால். 14

அப்பரந் தன்னைத் தன்பா லநுபவித் தநுப வித்தா, ரெப்படிக் கண்டா ருள்ளத் திலங்குமா முநிவ ரந்தச், செப்பரு மின்ப மாய்த்தன் றேசி னுற் றிகழ்ந்து தன்னே, டொப்பரு மவனே யார்க்கு மும்பனென் றுணரப் பட்டான். 15

எங்குமுள னுயிறையா யேகனு யெல்லாப்பூ, தங்கடொறு மறைந்திருக்குந் தன்மையனுய்ச் சராசரங்கட், கிங்குயிரா யுள்ளாகு மிறைவனெரு வனையுமறிந், தங்கடைவார் சாந்தியினை யடைவ ரல்லா தவரடையார். 16

முகமொடு கிரிவந்தன் முடிபத முடிவின்றாய்க்
குகைமுழு தினுநின்றே குறைவற வுலகெல்லா

மகமொடு புறமேவுற் றழிவறு நிலையாகும்
பகவனி லயலாகப் படுவதொர் பொருளின்றால்.

மாசுடை மநத்தர் தம்மின் மறைப்பதாய் மாசி
லாத, தேசுடை யோகி கட்குந் தெரிந்திடப்
படாத தான, வீசனு னெனதா ஞாந மிப்படி
யருளி னாலே, பேசின னுங்கட் கென்று பெருந்
தகை யருளிச் செய்தான். 18

9. மாயா விகார அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் – 237.

---

## 10. தத்துவ தரிசந அத்தியாயம்.

---

தக்கரங் குறியில்குறி சுக்கசூ சனதெரியி
லக்கணஞ் சகலவுல கத்தினங் குரமுமதவ்
வக்கரம் பரமபத மப்பரஞ் சுடர்பிரம
நிர்க்குணம் பரவெளியி னிச்சயம் பெறநிகழும். 1

ஒப்ப ரும்பர தத்துவத் தொப்பி டுஞ்சுருதிக்கலே, கப்ப றும்படி புத்தியிற் கற்பி தங்கள்கழற்றிமெய்த், தப்ப ருந்தவர் சித்தமெய் தற்பரந்தனி லற்றதிங், கப்ப ரம்பிர மத்தினுக்கத்தை விங்கமெ னப்படும். 2

அறிவினிற் பிறிதெல்லா மறிவென லறிவாகும், பெறவரி திதிலல்லாற் பிறிதினில்வெளியில்லேன், பிறவிய தறுஞாநம் பெறவரிததனலே, மறவிய தறுமாயா மயலல திலேயெல்லாம். 3

நின்மல மாகிநி ரஞ்சந மாய்வே
றின்மைய தாயவி காரமி தாமித்
தொன்மைய தாகிய சூக்கும ஞாந
மென்மல மில்லுரு வென்பர றிந்தோர். 4

யோகிநி லுளமென்பா லொருபடி யுறவைத்தே
யேகவெ னிலேகண்டா ரவரென தியல்கண்டார்
பாகம தறுமொன்றும் பலவுரு வழுநானே
யாகவு மெனேயன்பா லறிஞரு மயலன்றல். 5

பேறுறு பிரமாநந் தமுமது பெறுதாமும்
வேறற வறிகின்று ரவர்விழி மறைகின்றார்

கூறற வவிகாரங் கூடிய விறைதாமா
யூறற வுணர்கின்ரு ருண்மையை யுணர்கின்ருர். 6

பங்கமில்சீர் பரனுடைய தாதித்தன் பான்மை யினை, யிங்கொருவர்க் கறிவரிய தாகியதவ் வியத் தத்தை, யெங்குமுள தாய்த்தம்பா விலங்கியபே ரின்பத்தைத், தங்களிலே நிலைபெற்ற சாந்தா டைந் திருப்பர்களால் 7

மெய்த்தக வீடிது விமல மாய்ப்பரி
சுத்தம தாகிநிர்த் தொந்த மாயொரு
பெத்தமில் பிரமரூ பத்திற் பேதியா
வுத்தம மெனதுசா யுச்ச மென்பரால். 8

ஆதியு நடுவுமந் தமுமி லாததொன்
றேதது வெனிற்பர மீச னுனநா
னீதியி லெனையறி நிமல நித்தனும்
பேதமி லெனைப்பெறும் பிறவி பின்பெருன். 9

தபநனெளி பெருகிரவி சசியுடுமி னடையச், சிவனிகழ்வி னிகழ்வுபெற சிறிதுமிவர் நிகழா, ரவனுடைய வொளிகொடொரு வொளிதிகழு மசையா, விவனதொளி சிறிதுபெறி லிவர்நிகழ்வு பெறுவார். 10

உதியாமலென்று மொழியாமைநின்றவொளி யாகியென்று முளதாய்த், திதியாய்நி றைந்து தெளிவாகியங்கோர் செயலானதின்றி யருளான், மதியாளர் தங்க ளகமேய கண்ட வடிவாய்நி கழ்ந்த வடிவே, பதியாகி யென்று மழியாமை நின்ற படியாகி நின்ற பரனுன். 11

நித்தமநந்த நிட்கள மின்ப நிமலஞ்சற்
சித்தமுதந்தற் சிவமெனும் வேதத் திரளெல்லாஞ்
சுத்தனை யந்தச் சுருதியி னந்தத் துணிநெஞ்சத்
துத்தமர் தந்த முளமது ணர்ந்தா ரோமன்றே.

தாரா காயம் பவநம்புத் தாநன லல்லனீ ராதார, ஞோரா தான பிராணுதி யெல்லா வாயுவி னுருவல்ல, ஞோரா காசன் மநம்புத்தி யுறுமொரு சேதந மவனல்லன், பாரா காச யோகத்தில் கேவல ஞகும் பரமீசன். 13

எல்லாவே தத்துமறைந் திருப்பதுவா யாவர்க் குஞ், சொல்லாத பரஞாந முங்களுக்குச் சொன் னேனு, னல்லானிப் பரயோக ஞாநத்தா லேநவி

வொன், றில்லாத விடத் தடைவா னெனவியம்பி யருளினன். 14

## 10. தத்துவ தரிசந அத்தியாயம் முற்றிற்று.

ஆக விருத்தம் – 251.

---

## 11. யோக அத்தியாயம்.

---

இடர்ப்படு பிறவி தீர்க்கு மியார்க்குமெட் டாத தாகி, யுடைத்தன தொளியி னலே யொளிர்வதா யுள்ள ஞானச், சுடர்த்திரு வுருவ மான சொரூபனை யாதொன் றாலே, கிடைத்திடு மந்த யோகங் கேண்மினென் றருளிச் செய்தான். 1

யோக வெரியோ ரிமைப்பிலே யாது வினையு மெரிப்பதாந், தேக மொழியுமிம் முத்தியே சேரு முணர்வு செகிப்பதா, மியோக முணர்வை யொழித்தரு யோக மொழிய வுணர்ச்சிதா, னகு தலவீ தளத்துளா னியாவ னவனை யளிப்பனன்.

ஒருகா லிருகான் முக்கான்மற் றுள்ள கால முள்ளத்தை, வருகா தலின லியோகத்தே வைப்

பார் மகேசரெனப்படுவா, ரரிதா மிதனே மாயோக
மபாவ யோக மெனவறிஞ, ரிருபா லாக வியப்புவ
ரவ் விரண்டு மிருக்கும் படிகேண்மோ. 3

தானிவேயு மாறரிய தத்துவமி யாதொன்
றுனிகழ்வ தாகுமத பாவமெனு மியோகம்
வானியல தாகியொரு வத்துவுமி லாதாஞ்
சூநியம தாகவறி கின்றனர்க டுயோர். 4

மயலிலா யாதிலொரு மலமிலா தானசுக டிை
வதா மாசி லொளியா, மயலிலா வேகவெனே
யயலெனு தேகமென வறிகைமா யோக மதுவா,
முயலுமா றுசையென முடிவிலா நூல்கள்பல
மொழியுமியோ காட விவெலா, மியலுறு தாமரிய
விதனிலோர் சோடசியு மிசையுறு தாகு மியல்
பால். 5

சுத்தமா யென்னேக் கண்டெத் தோற்றமுந்
தோன்று தான, வுத்தம யோக மெல்லா யோகி
லும் பரம யோக, மத்திற மின்றி யென்னே யாயிரங்
கோடி காலஞ், சித்தம தொருக்கி நாளுஞ்
சிந்தையிற் றிகழக் காணூர். 6

அயர்வறு யோகலா தறிகை யாதந
மயலற விந்திய மடக்கல் வாயுவின்
சயமிகு தியாநதா ரணைச மாதியு
மியமு நியமமு மெட்டு மங்கமாம். 7

தருக்கி லாதபி ரமச்ச ரியமெய்
யுரைக்கை கள்ளமொ ழிகையின் னுசெயா
திருக்கை யாதொன்று மோராமை யென்றிவை
சுருக்க மாகய மமென்று சொல்வரால். 8

மநத்தால் வாக்காற் காயத்தால் வாதை யாவ
தியாதேனு, மனைத்தா ருயிர்க்குஞ் செய்யாத
தகிஞ்சை யாக வறிகவிது, தனிற்றான் பரமாந்
தருமமிலை சாருமின்பந் தானுமிலை, யெனைத்தாம்
விதியி லுயிர்க்கின்னு செயினு மதுவு மினிதேயாம்.

உளவாறுரை செயுறுனுரை செயுமாறெழு
குதரான், வளவாய்மைய தெனநாடினர் மதியான்
மிகு முதியா, ரளவாரகி லமும்வாய்மையி லுள
தாதலி னதுதா, னுளவாசக வினையாலுடை
யவனியாவையு முடையான், 10

மறைவினி லாகினும் வலியினி லாகினும்
பிறர்பொருள் வவ்வுதல் பெரிய கள்ளமாங்
கறையுறு மரிவையர் திறங்க ளுவிலும்
பிறழ்வற மறப்பது பிரம சாரமாம். 11

அரங்கைமுழுந் திடவாபத் தடைந்திடினு மன்பாலே, யிரங்தொருவ னீந்திடினு மோராமை யோராமை, வருந்திமநத் தாசையற மடக்குவான் மாசற்ற, நிரந்தரமா மியமமிவை நியமமினி நிகழ்த்திடுவாம். 12

படர்தவம் வேதநூல் பயிறல் பத்தியாற்
கடவுளை வழிபடல் கருதி நெஞ்சினே
டுடலுறு தூய்மைசந் தோட மோங்கிய
சுடர்மிகு நியமமாய்ச் சுருங்கச் சொல்வரால். 13

பவமார் நோவு கெடநோன்பு பலவா லாக்கை மெலிவிக்கை, தவமா குவது வேதாந்தஞ் சதருத் திரியந் தாரகமாஞ், சிவமா கியமந் திரம்பலவின் செபமத் தியாநஞ் சிறந்துள்ள, வவமா னதிலா வதன்பேத மறிவா ரறையும் படிகேண்மோ. 14

வாசிக முபாஞ்சு மாநத மென்று மதிலொ ரொவ் வொன்றினுக் கொன்று, தேசுடைத்

தென்று செப்பினர் பிறர்க்குத் தெரியவே செபித்
திடுஞ் செபந்தான், வாசிக முபாஞ்சு வாயித
முடித்தன் மாத்திர மாநத மடங்கி, யாசறச் சிந்தை
செய்தலொன் றினுக்கொன் றுயிர மடங்குநல்
லனவாம். 15

கூடின கொண்டலம் பாவங் கூடல்சந்
தோடமென் றறிஞராற் சொல்லப் பட்டதா
லாடுறு தூய்மைதா னகம்பு றம்புள
தோடம திரண்டையுந் துடைத்த லென்பரால். 16

தோயமு மண்ணுமாக் கொண்டு சுத்தமாக்
காயமே வியமலங் கழுவப் பட்டதாம்
வாய்மைய முதலதா மநத்தி னுற்செயுந்
தூய்மையை யுள்ளநற் றூய்மை யென்பரால். 17

கந்தநன் மலர்கொடு காய பூசனை
வந்தனை செயல்புகழ் வாக்கின் பூசனை
பந்தனை யறமநம் பத்தி யாற்செயுஞ்
சிந்தனை நியதமுஞ் சிவன்றன் பூசையே. 18

புராதநரோ தியவியம நியமங்கள் புகன்றன
மேற், பிராணனதின் யாமமது பேசுபிரா ணுயா

மம், விராவியுட னுறும்வாயு விளம்புவர்கள் பிரா ணனென, நிரோதநமே செயலதனை நித்தலுமா யாமந்தான். 19

மந்த முத்தம மத்திம மென்றுமிங்
கந்த நல்லுயிர் யாமம றிபவர்
சந்த முற்றச கற்பவ கற்பமாய்ச்
சிந்தை யுற்றிரண் டாகவுஞ் செப்பினர். 20

மந்த மாறிரு மாத்திரை மத்திமோத் தமங்க, ளந்த வெல்லிரட் டிரண்டுடன் மாத்திரை யடக் கல், கந்த வேர்ப்புறுங் கம்பநங் கிளம்புகை யிவையா, னந்த மாச்செயு மொன்றினுக் கொன் றுநன் மையதாம். 21

அகற்ப மல்லதா மந்திர மகத்திலே யானவா யாமந்தான், சகற்ப மாம்வியா கிருதியோங் காரஞ்சா வித்திரி தனைமுக்கால், வகிக்கு மெல் லையா மிடம்வலம் வழங்கிய வாயுவை வலமாக, முகக்க வென்றறிந் தவரியோ கத்திலே முயன் றிட மொழிந்தாரால். 22

ஏசது ருமலி டத்தில்வ ழங்குகை
மாசது ருமல்வ லத்தினில் வாங்குகை

யாசத றத்திதி யாகவ டக்குகை
ரேசக பூரக கும்பக மென்றூர். 23

இந்திய மீட்சி தானே யிசைந்திடும் பிரத்யா
காரங், கந்தர மிதய நெற்றி கபாலநா பிகளி
லொன்றிற், சந்ததஞ் சிந்தை வைக்கத் தாரணை
தரித்த தேக, சிந்தனை யொழுங்கொன் றேடே
சேர்ந்தது தியாந மாமே. 24

ஓதுமா லம்பந மொன்று மின்றியே
போதமும் போதகப் பொருளு மென்றுணர்
பேதம தன்றியே யிருந்த பெற்றிநற்
சாதந மாகிய சமாதி யென்பரால். 25

தாரணை யாயா மத்திற் றகுதிபன் னிரும
டங்காந், தாரணை தன்னிற் றியாநந் தானுமப்
படியே நன்றாந், தாரணி தன்னின் ஞாந சாதந
மாஞ்ச மாதி, யோரணி தியாநந் தன்னி லேற்
றமிப் பரிசே யென்பர். 26

விவத்தி தம்பெற்றி ருக்கைவி ரைந்தெழுங்
கவற்றி தீர்வுறக் கற்பித்த வாதந
மவற்றி னெல்லைய றைவரி தந்தநற்
சுவத்தி கம்பத்ம மியாதினுந் துய்யவாம். 27

இருதுடை மேலே யீரடி யேறும்
பாமவி ருப்பது பதுமம தாகு
மொருபத மேலே யொருபதம் வைக்க
மருவவி ருப்பது மத்திம மாகும். 28

தடித்த வூருசா னுக்களின் சந்துற
மடித்த வந்தாத் துள்ளேம றையவைத்
தடித்த லங்கள்செவ் வேசெல வாங்குறத்
தொடுத்தி ருத்தல்சு வத்திக மாவதே. 29

நீரினுற் செழும்ப தானவவ் விடங்க ணொருப்
பினல் வெந்தவவ் விடங்க, ளூருசெந் துக்க
டுற்சநர் தூால ருதிர்ந்திடு சருகுபுற் றிடங்கள்,
கோரமாம் பயங்க ளுள்ளிட மிடிந்த கோயினுற்
சந்திகண் மயாந, மாரவா ரங்க ளுள்ளிட மசுத்த
மலக்கணு மநத்தினுக் கதனுல். 30

வருத்தமா யுடல வாதையைப் பற்று மநமது
நடுநடுங் கிட்டுப், பொருப்பினிற் குகைகள் புண்
ணிய தேசங் கோயில்க ணதிகளின் கரைக,
ளிருப்பறு மனேதா னூர்வது கடிப்ப தின்றியே
காந்தமா யுள்ள, வொருத்தரு மறியா விடத்திலே
யென்னே யுன்னுவான் மநனொருப் படுவான். 31

உன்னரு மியோகொருப் படுவன் முன்னரே
யென்னருள் பெற்றயோ கீசர் தம்மையுஞ்
சென்னியால் விநாயகன் றனையுந் தேசிகன்
றன்னையு மென்னையும் வணங்கிச் சாருவான். 32

தனியி லிருந்து பயமின்றிச் சாந்த னாகித் தனக்கிசையு, முனிவர் மொழியு மாதநங்கண் மூன்றி னொன்றி லேமூக்கி, னுனியைச் சிறிதே கண் விழித்து நோக்கி யாது நோக்காதே, யினிய தன்பா லேயிருந்த வென்னைப் பாவிப் பதியோகம்.

பங்கயந் தலைக்கு மேலே பன்னிரு விரலிற் கற்பித், தங்கதற் கறமென் மூல மறிவது நாள மாகுந், தங்கிடுஞ் செல்வ மெட்டுத் தளநிறந் தவள மாகு, மிங்குதன் வலிவை ராக்ய மெனப்படு தாதி தன்கண். 34

சகலசத் தியுமு டைத்தாய்த் தமநிய மயமாய்த் தாரம், புகலுமெப் பொருளா யென்றும் பொன் றுரு தாகி யெங்குந், திகழொளித் திரளா யுள்ள தெய்வமாய்த் தெரிக்கொ ணாதாய், நிகழுதற் பரத்தி னேரே நித்தலு நெஞ்சை வைப்பான். 35

மிக்கபாஞ் சுடரான விமலனையும் விளம்புற்ற,
வக்கமலத் தேதனையு மயலாகா வகைநினைவா,
னக்கரமாம் பரமாகா சத்துவனைத் தானெங்கு,
மொக்கநினைந் தேபின்னை யொன்றுநினை யாதொ
ழிவான். 36

யாவரு மறிவரி தாய பாவனை
மேவுற விளம்பினன் வேறு மின்னமோர்
பாவனை கேண்மின்முன் பன்னு பங்கயப்
பூவினை யுன்னியப் பூவி னுள்ளதாம். 37

அந்நிய மறவந லோனைக் காட்டிய
பன்னிய புருடனும் பஞ்ச விஞ்சகன்
றன்னையே சகலகத் தாவாத் தன்னுரு
வன்னியின் சிகையதா மதித்து நோக்குவான்.

அவமறு புருடன்ற னகமுற வறநன்றுச்
சிவமம லமதாகித் திகழ்தரு பரமாந்மா
வுவமையில் பரனுமென் னுரையினி லுணருந்தத்
துவநிலை குலையாவச் சுதமென மநம்வைப்பான்.

அப்பர மாந்மா வுள்ளே யதனுக்கா தார மாகி,
நிற்பதாய்ப் பரம மாகி நிரஞ்சந மாகி யுள்ள,

வொப்பரு மகேச னேக வுருவனு யுன்னி யந்தத்,
தற்பரந் தன்னே டொன்றுந் தன்மைய னுகிச்
சார்வான். 40

சொன்னதத் துவங்க ளெல்லாஞ் சோதனை
பண்ணிப் பின்னைப், பிந்நதத் துவமொன் றில்
லாப் பிரமநா னெனநினைந்து, பன்னரு மோங்கா
ரத்தாற் பரமமாம் பரமா யுள்ள, வென்னிலே
தன்னை வைத்திங் கென்மய மாகி யுள்ளான். 41

நலங்கொள் ஞாநநீ ராடிநல் லாகுதி
துலங்கு நீற்றையுந் தூளித்து மந்திர
மிலங்கு மங்கிமு தனினைந் தீசனைப்
புலங்கொள் சோதியின் புஞ்சமா யுன்னுவான். 42

ஆசிரம மேலிலதி யாசிரம மாகத்
தேசுதரு மாமறையி னீறுகடெ ரிந்தே
பாசுபத யோகுபசு பாசமற நேரே
பேசினனி தாருமறி யப்பெறும தன்றால். 43

பிறிதறு மெனதுசா யுச்சம் பேறதா
மறைபொருள் கேவலம் வழங்கி டாரிது
வறமுய லந்தணர் தம்மி லன்பரிற்
றுறவுறு பிரமசா ரிகட்குஞ் சொல்லாம். 44

பரியும கிஞ்சைப் பழிதீர் பிரம
சரியந்த வந்தரு சந்தோட முண்மை
யுரியபொ றைதுாய்மை யுண்டென்றி ருக்கை
யரியவி ரதத்துக் கங்கங்க ளாமால். 45

எண்ணிய விவற்றிலொன் றீந ஞனவன்
றண்ணிய ஞதலாற் ருன்ன மூவிஞன்
புண்ணிய வினையினோர் பொருந்த வென்னையே
கண்ணிய விரதமெஞ் சாமற் கைக்கொள்வார்.

ஏசி விந்தவி யோகாலெ னையடைந்
தாசை கோபம்ப யமற்ற வார்மராய்ப்
பாச மற்றெனைப் பாவித்த பாவத்தா
லாசி லென்மய மாஞர நேகரால். 47

எப்படி யார்நினைந் தடைவ ரியானவர்க்
கப்படி யானிகழ்ந் திடுவ ஞதலா
லொப்பரு ஞானமெய் யோகு ளத்தெனைத்
தப்பரும் பூசனை செயவே தக்கதாம். 48

பொய்யில் பத்தி யாற்றுறவாற் போதம் பொ
ருந்தும் புந்தியினுற், செய்யும் பூசை யேபூசை
செய்யுந் தொழில்க ளெல்லாம்விட், டய்யம்

பண்ணி யுண்டொன்று மாசைப் படாதா னெனை யடையு, முய்யும் பரிசு மறைந்த பொரு ளுங்கட் கிரங்கி யுரைத்தனனால். 49

பத்தியையென் பாலுடையா னெவ்வுயிர்க்கும் பரிவுடையா, னொத்தநலந் தீங்கடையா னொடுங் கியவுள் ளமதுடையான், புத்திமந மென்பாலே பொருந்தியபா வனையுடையா, னெத்தனையும் பொறையுடையா னியாவரினு மெனக்கினியான்.

பன்னியயோ கொழிவில்லான் பற்றிலான் பாவகத்தோ, ரின்னலிலா னாரம்பித் திடுவதூஉ மொழிவதிலான், றன்னைவெரு வுதலொன்றாற் றான்வெருவ றானில்லா, னென்னதியா னெனவில்லா னென்றுமெ னக்கினியான். 51

துயரு றாதசந் தோட மேவியே
செயலெ லாமுதா சீந னாகியே
யயல ராயினா ரன்ப ரின்றிவா
ழியல்பி னானெனக் கினிய னாயினான். 52

துதியி னிந்தையிற் றுல்லிய னாயெனிற்
றிதிய டைந்துசி னஞ்செருக் கின்றியே

மதியி ஞென்றினும் வாஞ்சையு ருதுள
வதிக வானெனக் கென்றுமெய் யன்பினுன். 53

வாடலின் முகமது மலர்ச்சியு மவுநநற்
பீடுறு வித்தகம் பெற்ற தோடலங்
கூடுத வினியவை கூறலி யாவரு
நாடரு நிலையுடை யவர்க்கு நல்லனுன். 54

எத்தொழில்க ளுஞ்செயினு மென்னருளி ஞலென், பத்தர்பர மப்பதம டைந்திடுவ ராலே, தத்துவமும் வைத்தெனிலெ னைச்சரண மாக, நித்தமுநி ராசையைய டைந்துநினை கிற்பார். 55

அடங்கு மனுய்ப் பயனென்றி லாசைப் படாதா னளவற்ற, விடங்கொள் வினைகள் செய்தாலும் வீடே யெய்து மாதலின, லுடம்பு காணு நல் யோகி யுண்டாம் வினையா லொருகாலு, மிடும்பை யடையா னசைப்பா டில்லா னெனையே யடைந் திடுமால். 56

துற்றுவரு தொந்துவம யக்கவைது டைத்துப்
பெற்றதொ டமைந்தெனருள் பேறுறநி னைந்தே
யுற்றகரு மங்கள்வினை யென்னவுரை செய்யார்
கற்றவர்கள் வீடதென வேகருது கின்றார். 57

என்னை யேகினைந் தெனைப்பணிந் தெனையருச் சித்தென், றன்னை யேயறிந் தவனெனை யன்றியே சாரான், பின்னி யாதுமப் பெருந்தகை யிருந் திடந் தனிலென், சென்னி யாற்சுமந் தவற்கு வேண் டுவதுசெய் குவனுல். 58

என்ப தத்தைவிட் டிதரதே வதைகளைக் காமித், தின்பம் வேண்டுநர் தாமுமிங் கிதனை யெய் துவரா, லன்பி னுலருண் மூர்த்திவேண் டுநர்களு மவர்பாற், பின்பு வந்தெனை யறிந் துநன் முத்தியே பெறுவார். 59

சாமவ ரெந்தக் கடவுள ருஞ்சா வில்லாதென், ருமம தாமென் றென்னையொ ழிந்தார் தமை விட்டன், பாமக வாதிச் சுற்றமும் விட்டென் பாலன்பா, யாமர ணுந்தத் தளவுமி லிங்கத் தருச்சிப்பான். 60

எந்தப் பதமுங் காதலி லாதே லிங்கத்தே
வந்திப் பவன்ஞா னாத்மக மாகி மயலற்ருேன்
சிந்தைக் குளதா யெங்குந் தானுஞ் சிவலிங்க
மந்தச் செனனந் தனிலே யறிவா லடைகின்ருன்.

பங்கமில் பத்தி யோடுமற் றெவரும் பாவனை யாலிலிங் கத்தே, யிங்கெனை யிறைஞ்சி லின்ப

மெய்ஞ் ஞான மெங்குமா மிலிங்கமெய் துவரா,
லங்கியிற் புனலி லம்பரந் தன்னி லருக்கனி லவி
லனிந் துவினி, லிங்கிவை யிலிங்க மாணு தியிலே
யெனேனிந் திறைஞ்சிடப் படுவான். 62

ஈதெ லாம்வெறும் லிங்கம யமதா
மீதெ லாமிலிங் கத்துளி ருப்பதா
மாத லாலந்த லிங்கமெங் கேயங்கே
காத லாற்றெழ வேகட னுகுமால். 63

கருத்திலா மூடர் காட்டமா திகளிற் காண்
பர்கற் றவர்களா காயத், தருக்கனிற் புனலிற்
காண்பரா குதியி லருச்சனை செய்யுமந் தணரவ்,
வெரிக்கணே காண்ப ரெங்குமாய் நின்ற வெனது
லிங் கத்தினை நேரே, யொருக்கிய பரம யோகிக
ளென்று மொழிவறக் காண்பர்தம் முளத்தே.

நீங்காத காதலினு னின்மலபோ தம்பயக்கு
மோங்கார மாதலினல் லுருத்திரியந் தானுதல்
பாங்காக வத்தியந வானுகிப் பரித்தவுடல்
போங்காலத் தளவுநிரந் தரயோகம் புரிந்திடுவான்.

காமா மெங்குங் காமா கன்றூர் காசிக்கே, யாமா
ஞந்தத் தளவுமி ருப்பா ரங்காவி, போமளா

வுற்றார் போய்வர வுற்றார் புறையற்றோர், காமரை வென்றார் தாமரை வென்றார் கழல்கண்டே.

பொல்லா தவரு மங்காவி போகி லென்னை விடப்போகார், நல்லா ரென்னை யடைவரென நவில வேண்டு வதுமுண்டோ, வெல்லா வுயிர்க் கும் வீடளிப்ப னென்றால் வினையா லிரங்காத, வல்லா வகைகூ டினுமுயிர்விட் டகல்வா னல்ல னறிவுடையான். 67

அரிய மறையி லரியமறை யாகும் பொருளீ தறிஞர்களாற், றெரிய நினைந்த படியெவர்க்குஞ் செப்பப் படாது செய்தவத்தா, லுரிய விரத னுய றமற் றொடுங்கு முள்ளத் தொடுபிரம, சரிய முடைய பத்தனுக்கு நேரே சாற்றத் தகுவது வாம். 68

இவணமே தனதி யோக மியம்பித்தன் னிடத்தி ருந்த, வுவணகே தனனை நோக்கி யுத்தமர்க் குரைத்த யோக, மிவணுரை செய்யத் தக்க திலங்கிய சாந்தி நெஞ்சிற், சிவணிய புதல்வர்க் கென்றே சிவனருள் செய்ய லுற்றான். 69

முனிவரே யுங்கட் கெல்லா மொழிந்திடப் பட்ட
ஞானம், புனிதராய்ப் புதல்வர்க் காகப் பூசுர
ரானோர் கேட்ப, வினியநும் வாயி னாலே யிப்படி
யிறப்பு மீண்டு, செநியமு மொழிய நீருஞ் செப்பு
மென் றருளிச் செய்தான். 70

இந்த நாரண னீச னாகிய வென்னில் வேறல
னென் றுதஞ், சிந்தை யானினை வார்க ளுக்குரை
செய்த யோகிது செப்பலா, மெந்த வாருயிர்
கட்கு மின்னுயி ராகு நாரண னென்பதோ, ரந்த
மாதியி லாவெ னக்கரு ளான தோர்வடி வாகு
மால். 71

ஏதமுற நாரணனை யென்னிலயல் காணும்
பேதவிழி யாளர்பிற விப்பிணிய ரூரே
மாதவனை யானெனம நத்தினினை கிற்கும்
போதவிழி யாளர்பரி பூரணம டைந்தார். 72

ஆதவில ருச்சிமினிவ் வாதியரி யானுய்க்
காதலொடு காண்மின்மய லாகியயல் காண்பார்
தீதுதரு மாநரகு சேர்வுறுவர் தீதா
நீதியுறு நீசரிடை யானும்வெளி நில்லேன். 73

நான்மறை யந்தணர் நாய்வதை செய்தத
னான்மிசை கின்றவ ரோதினர் மூடப்
பான்மைய ரும்மரி யைப்பழி யாதம்
மேன்மைசெய் பத்தரை வீடுறு விப்பன். 74

மருவற் கென்னை மநம்வைத்தோன் மாலா மிவனென் வடிவென்றே, பாவிப் பணிவா னென் றேசெம் பவளத்திருவாய் மலர்ந்தருளி, யரவிற் றுயிலச் சுதனுக மழுந்தத் தழுவ வவ்விடத்தே, காவுற் றருள வதிசயமாய்க் கண்டார் மேனி கண்டிலரால். 75

தன்ப ராபர மாகிய வடிவினைத் தவிர்ந்தொரு தவனுகி, முன்பு தோன்றிய வடிவதாய் முகுந்தனு முநிவரை முகநோக்கித், துன்ப வேரற வருளினு லுமக்கிறை சொன்னவிச் சுடர்ஞாந, மன்ப ராயற மறிபுதல் வர்க்கறி வியுமென வருள்செய்தான்.

ஈசன தாய வந்த திலங்கிய பரம ஞாந, மாசிலந் தணனு மாகி *யாகித வநல னுகி, நேசனு யடங்கி யுள்ள நெஞ்சனு நிமல னுக்குப், பேசலா மென்று கண்ணன் பின்னரு மருளிச் செய்தான். 77

---

* ஆகித அநலன்-அக்கிநி கோத்திர முள்ளவன்.

யோகிக ளியாவ ருக்கு முத்தமயோகி தானே, யாகிய முகுந்த னிவ்வா றருளியங் கவரை நீங்க, வேகவீ சனேயு நாரா யணனேயு மிறைஞ்சி யெல்லா, மோகவே தனேயு மாறி முனிவர்முற் பதிய டைந்தார். 78

சனற்கு மாரன்சம் வத்தகற் குரைத்தனன் சநந்தனன் புலகற்குப், புனிற்றி தீர்முனி கௌதமன் பொருட்டிது புகன்றனன் புகன்ருனிங், கநித்த மற்றுள விதுபரத் துவாசனுக் கங்கிரா வளித்தானேர், செகிப்பி லாவிது கபிலமா முனி பஞ்ச சிகற்குரைத் தனன்முன்னே. 79

எந்தை யாகிய பராசரன் சநகனு விலங்கிடப் பெற்ருனென், தந்தை பாலருந் தவஞ்செய்வான் மீகியுந் தானறிந் திடப்பெற்ரு, னந்த கோபனன் மனேயினின் மதலேயாய் நடித்தநா ரணன்குந்தி, மைந்த ஞகிய பார்த்தனுக் கருளினன் வழங்கினன் மான்றேர்மேல். 80

ஏம மாகவெ னக்கிது ருத்திர
வாம தேவன்வ ழங்கின ஞதலாற்
காம னீறெழக் காய்ந்தவக் கண்ணுத
ருமமேசா ஞகத்த ருவதே. 81

வேறாக நானிந்த வெம்பிறவி வேரறப்பா,
னேருளு மிறையவனே யென்றவனை யடைகின்
றேன், மாறாத வன்போடு மனைமக்கள் கிளை
யொடுநீ, ராறுருஞ் சடைமுடியா னடியடைமி
னிதுவேண்டில். 82

ஒழியாது நற்கரும யோகத்தா லுருத்திரனை,
வழிபாடு செய்யுமென மாமுனிவன் மறைப்பொ
ருளை, மொழிவானை நோாயம் முக்கணிறை
யெனமுனிவர், கழிகாத லொடுபணிந்து கைதொ
ழுது களிகூர்ந்து. 83

ஓதம் பற்றியோ குணர்ந்துறங் கமலநீ யுன்றிரு
வருளாலே, போதம் பெற்றவா னவர்களும்
பெறலரும் புராணபூ ரணன்செம்பொற், பாதம்
பற்றியப் பவக்கடல் கடக்கநற் பத்திபெற் றன
மாற்று, லேதும் பெற்றனம் பெறுததொன்
றில்லையென் றிணையடி பணிவுற்றார். 84

தீதின் முத்தியைச் சேரவேண் டினர்சிவ
னடிக்கே, யாதி லர்ச்சனை செய்தன ரந்தவெல்
லையிலாப், போத முற்றநற் கருமயோ கினைப்
புதல் வர்களா, யாத ரிப்பவர்க் குரைமினென்
றருண்முனி பணித்தான். 85

மாமறையின் மெய்ப்பொருளை மாலொடுச
நற்கு மாரன்முத லார்க்கிறைவ ழங்குதிரு வார்த்
தை, யாமைவடி வைக்கொடரி யமுதமத நத்தன்
றருமுனிவர் கட்கருளு மறிவதனை யன்பாற்,
றுமதமில் சௌநகனை யாதிமுனி வர்க்குத் தந்த
ருளு கென்றுதலை யாலுறவ ணங்கித், தோமின்
முனி சூதனுரை செய்யவவர் கட்குச் சுருதிகடெ
ரிந்தமுனி சொன்னபரி சீதால். 86

மூவர் தேடிறைச நற்கு மாரன்முதன் முனிவர்
கட்குமொழி கீதையிங், கியாவ ரோதினரி தன்
பொ ருட்டுணிவ ரியாவர் கேட்பவரி யாவர்தம்,
பாவம் வேரொடுப றிந்து நல்லபா மப்பதம்
பெறுவ ராதலான், மேவு மன்பினொடு மோத
மீளுதலில் வீடு வேண்டினன்வி ரும்புவான். 87

**11. யோக அத்தியாயம் முற்றுப் பெற்றது.**

ஆக விருத்தம் — 338.

## சிவப் பிரகாசம் என்னும்
## ஈஸ்வர கீதை முற்றுப் பெற்றது.

**சர்வஞ் சின்மயம்.**

உ

சிவமயம்.

# ஈஸ்வர கீதை பாட்டு 338-க்கு முதற் குறிப் பகராதி.

அ

ஈஃவர கீதை பாட்டு முதற் குறிப் பகராதி
முற்றுப் பெற்றது.

அத்தியாயம் 11-க்கு. பாட்டு 338. 59 எழுத்து.

திருப் பூ வண மடாதிபதி, சத சாஸ்திர கர்த்தா,

**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றியன.**

| | | |
|---|---|---|
| 1. | விசார சாகரம். வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு ரூ. | 2—4 |
| 2. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா. வசநம். ,, | 2—8 |
| 3. | கதா சரித் சாகரம். வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு | 2—4 |
| 4. | நைஷ்க் கர்ம்ய சித்தி. வசநம். ,, | 0—8 |
| 5. | வியாச தாத்பரிய நிர்ணயம். வசநம். ,, | 0—8 |
| 6. | வேதாந்த சித்தாந்த முக்தாவலி. வசநம். ,, | 0—8 |
| 7. | வேதாந்த பரிபாஷை. வசநம். ,, | 0—7 |
| 8. | ஸ்வாராஜ்ய சித்தி. வசநம். ,, | 0—4 |
| 9. | மண்டல பிராஹ்மண உபநிஷத்-ராஜயோக பாஷ்யம். ,, | 0—4 |
| 10. | ஈசாவாஸ்ய உபநிஷத்-சங்கர பாஷ்யம். வசநம். ,, | 0—4 |
| 11. | வேதாந்த சஞ்ஞா. வசநம். ,, | 0—2 |
| 12. | ஹரி மீடே-ஹரி தத்வ முக்தாவலி. வசநம். ,, | 0-12 |
| 13. | நாநா ஜீவ வாதக்கட்டளை-சத்யார்த்தப் பிரகாசிகை உரை | 2—0 |
| 14. | கீதா சாரத் தாலாட்டு - லகு சந்திரிகை உரை. | 2—0 |
| 15. | மகாராஜத் துறவு - மநப்பிரசாதிநி உரை. | 2—0 |
| 16. | சீடாசாரம் - பால போதிநி உரை. | 0—8 |

ஓம்.

பரப் பிரஹ்மணே நம:

சம்ஸ்கிருதத்தில்

ஸ்ரீ வியாச பகவான் அருளிச் செய்த

(பரமார்த்த தரிசநம்)

# பகவற் கீதை.



இது 3047

சேம நகர், ஸ்ரீ பட்டனு ரவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டு

திருப் பூ வண மடாதிபதி

**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகளால்**

பரிசோதிக்கப் பெற்று.

தலைப்புக் கவி —

பாட்டு முதற் குறிப்பு அகராதியோடு,

மதுரை

ராஜேஸ்வரி பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

காபிரைட்] 1953. [விலை ரூபா. 1-4-0

# முக வுரை.

---

உலக மாந்தர் உஜ்ஜீவிக்கும் பொருட்டு, ஸ்ரீ வியாச பகவான் தர்ம புத்திரர் முதலியவர்களின் சரிதத்தை பாரதம் எனப் பெயர் புனைந்து ஒரு லக்ஷம் சுலோகத்தில் பதி னெட்டுப் பர்வமாக இயற்றினர். அதன்கண் யுத்த சமயத்தில், கிருஷ்ண அர்ஜ்ஜுன சம்வாத மாக எழு நூறு சுலோகத்தில் பதி னெட்டு அத்தியாயத்தில் பகவற் கீதை என ஒரு நூல் தோன்றிற்று. அது கர்மம் - பக்தி - ஞானங்களைத் தெளிவாகக் கூறுகின்றது. அந்தப் பகவற் கீதையின்கண் உபநிஷத் மந்திரங்கள் நேராகவும், சில எழுத்துக்கள் மாற்றப்பட்டும் வைக்கப்பட்டிருக்கின்றன. அதனால், இதனை வேதம் என்றும், உபநிஷத் என்றும், ஸ்மிருதி என்றும், அலங்கரித்துக் கூறுகின்றனர்.

இதனைச் சேம நகர் பட்டாரவர்கள் எழு நூறு சுலோகங்களையும் தமிழில் 545 செய்யுளில் மொழி பெயர்த்தனர்.

இத் தமிழ் கவிக்கு, அருணசல முதலியார் என்பவர் ஓர் உரையும், சிதம்பரம் — பொன்னம் பல ஞாந தேசிக ஸ்வாமிகள் அவர்கள் கூடார்த்த தீபிகை என ஓர் உரையும், இயற்றியிருக்கின்றார்கள்.

இக் கவியை மட்டும் படிப்பவர்கட்கு உபகாரமாக, டபிள் கிரௌன் 1—32 பேஜ் சைசில் சிறிதாக பாக்கட்டில் வைத்துக் கொள்ளும்படி யாக அச்சிட்டிருக்கின்றோம்.

சம்ஸ்கிருத எழு நூறு சுலோகத்திற்கு பதப் பொருளும் எழுதி ஆங் காங்கு தமிழ்க் கவியையும், உரையையும், இணைத்து ஒன்றாக ஓர் புத்தகம் அச்சிடுகின்றோம். படிப்பவர்கட்கு இரு பாஷை அறிவும் ஒருங்கே உணர உபகார மாகும் பொருட்டு விரைவில் வெளிவரும்.

திருப் பூ வணம், வேதாந்த மடம்.

| எண். | அத்யாயப் பெயர். | சுலோகம். | கவி. |
| --- | --- | --- | --- |
| | பாயிரம் | 0 | 4 |
| 1. | சோக அத்தியாயம் | 47 | 26 |
| 2. | சாங்கிய யோக அத்தியாயம் | 72 | 60 |
| 3. | கர்ம யோக அத்தியாயம் | 43 | 26 |
| 4. | சம்பிரதாய அத்தியாயம் | 42 | 31 |
| 5. | ஞாந கர்ம அத்தியாயம் | 29 | 19 |
| 6. | யோக அத்தியாயம் | 47 | 37 |
| 7. | மாயா ரூப அத்தியாயம் | 30 | 25 |
| 8. | எழு வகை விஞ உரைத்த அத்தியாயம் | 28 | 18 |
| 9. | மாயா விகார அத்தியாயம் | 34 | 23 |
| 10. | விபூதி யோக அத்தியாயம் | 42 | 26 |
| 11. | விசுவ ரூப அத்தியாயம் | 55 | 43 |
| 12. | பக்தி யோக அத்தியாயம் | 20 | 12 |
| 13. | க்ஷேத்ர க்ஷேத்ரஞ்ஞ விபாக யோக அத்தியாயம் | 34 | 31 |
| 14. | குணதீத அத்தியாயம் | 27 | 23 |
| 15. | பிரபஞ்ச அத்தியாயம் | 20 | 25 |
| 16. | தேவாசுர சம்பத்து விபாக அத்தியாயம் | 24 | 21 |
| 17. | குண விகார அத்தியாயம் | 28 | 25 |
| 18. | சங்க்ஷேப அத்தியாயம் | 78 | 70 |
| | ஆக சுலோகம்-கவி | 700 | 545 |

உ

சிவமயம்.

# ஸ்ரீ பகவற் கீதை

## கவி **545**-க்குத் தலைப்புக் கவி-8.

## பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்.

1. எய்-பாயி ரம்-சோகம் ஐவ-மன் விண்-
உன்-புண் போர்-வீம கங்கை அன்றி, எய்-மேல்-
வஞ் ஆர்-வைய தரு-ஒன்ற யாவர்-விள தாவி-தீ
தறு-வாய் ஓதல், இய்-அாச ஆன-கொற் குல-
தடு-வா ரா-மின்-கொல் முப்பது-சாங் கியம றுப
தாம், இவ்-ஆயா ஒல்-மாற்ற தவர்-ஆத உஞ்சே-
மன் நெய்-பின்னை சாவ அன்ன, பிய்-மாயு
பொன்-அன்ன இவ்-சீத மண்-வையா யான்-
அழி-இல் ஊறு நில்லா, பீறி-உரு எல்-வீவர்
செறி-ஒருவ தித-செய்தி ஆவ-அன் இன்று துற்ற,
அய்-கதுவி அரி-தெளி-புண் நவை-குளமு அறி-
விடல தரு-பேதை தலை-இவ் அறிவி, ஆமை-
குறை ஆதல்-எரி வேண்டல்-அடுத் தல்-ஆறு
யாதொருபொா நீரின் யான்-பின்.

2. பின்-மூன்று வது-கருமம் அலை-நன்றே
ஆதி-ஒரு வரு-புலன தேவர் செயல்வ, பேர்-
மற்ற உளவாமு இதனு-கண் ஆதலால் பெரியு

வர்ப என்-செ யல்-மெய், கன்-என்பா பண்டு
செய அஞ்சு-புல தடு-மாய தீம-எவ் வகை-நெ
ருப்பை, காதலால் ஆற்று-மேல் இருபதா ரும்-
பின்-நான் காலதே சம்ப்ர தாயம், சென்-நற்ற
எவம-கரு தரு-நல்ல ஞானமா சொல்லார்-சா
வாது இவ்வ, செய லாலும் உய்யும்ப ஓடு-செயன்
மேல்-ஆவ தென்-எண்-அ டங்கு பெற்ற, தோன்-
விட்டு பிரமமா அறிவ-உந் திய-தேடி மிகமேனி
இன்ன இப்ப, தொன்மை-விழி அதனுல்வ எறி
யா-தீ தற்-சொல்ல அறியாமை முப்ப தொன்றே.

3. ஒன்றைந்தா வதுஞாந கருமம் - பூத்
தருளியொரு கருமநன் துறவு பெருமை, ஒரு-
வினைமு கவைதரும் காணும்-யா ரெவ்வினையும்
உடன்-அன்ப இவ்வ அறிவி, நன்றேஞா னம்-
இகம் உடம்பு-மெய் யறி-காவல் அஞ்சுபொறி
சாதி புரியும், நாடு-பத் தோன்பதே ஆறுவ தாம்
யோகம் யோகம்-செய் மேவி உய்வ, என்-
புன்மை தான-இற பாடும்ப கைம்மாறி தலையாமி
ஒக்கு தலையும், எண்டி - துயில் இப்பரிசு யா
தொன்றி வஞ்சர்வேல் போகமாய் வாங்கி தேறு,
மன்-இழியா யாவனெரு இடரான எல்லாவு

இவ்வ-வெய் என்று யோகம், மையல்-பொய் யோக-சிற கொண்-அனைய நீடு-எல் லா-இருவ முப்ப தேழே.

4. எழாவ தாம்-மாயா ரூபம்-உய் மாயு-மண் கண்-வேத திரி-ஆன் மூன்-மைக், இவ்வ-ஊ ழா-செல்வம் இன்ன-ஓ தரு-விரிய மற்றயா வன்-அளித்த, ஈழ்-சிந்தை தானந்த மருவு-போ னவை-வியக் எறி-தேடும் இருப தைந்தாம், எட்டாவ தாம் எழுவி ஞ-அடைய ஆய-விரி அந்த-எஞ் இந்த நல்ல, ஆழ்-எல்-மரு யாதொன்-அஞ் ஓதல்-இப் செய்-நெறி-எப் அங்கி-வ தம்பதி னெட்டு, ஆர்-ஒன்ப தாவது மாயாவி காரம்-ஈர் அறை-அழி யாரு முன்-என், ஞாழ்-ஈண் விலங்-ஊர்வ அறிவினல் கால-வே தம்-ஆயில் எல்லா தாங்கி, ஞானமா மின் - தேவ போத - எப் பொருள்-ஊனே வணி-மின்-இரு பத்து மூன்றே.

5. பத்தாவ துவி-பூதி அரி-தேவ புத்-ஏனை-இப் நிர-மற்ற பேத எல்-மெய், பருகா-இ றந்த வென் ஓதிற்பெ சந்திரனு மலை-பெருமு சித்த புடைகள், வித்-வருண னும்-பொரா மிக்க-

பெண் கல்-கண்ண இரும்பு-பல இருப தாரும்,
விசுவரூ பம் - பதினொ ராவதாம் சுருள்-தெரியா
எண்-மரு-என் அங்கு எய்வ, வத்-அவ்வ மண்-
தேவ கண்களும் இந்தவுரு என்று-வலம் நில-
வணங்க, வானடைய தஞ்சமிவ் நூற்றுவர் ஓத-
ஒளி என்ற-இறம் இவ்வ ஞாந, எத்-கையும்
ஆதி-எய் என்-தேவ நீதிவே சாயைபோல் எறு
யாத, என்னு-உண் உண்டாய அறி-பண்-என்
தேவ-இப் கண்ட-நாற் பத்து மூன்றும்.

6. ஆம்பனிரண் டாம்பக்தி எய-மன் உரை-
கார யாவர்-மெய் அத்தி இருவ, ஆர்-உலக
ஒன்றி-இகழ் பன்னிரண் டே-பன்மூன் றுவது
க்ஷேத்தி ரக்ஞ, ஓம்விடம் உட-மன்ன மற்றி-
எப் பொருளி-கா தலில்-இற்றி மான பெற்ற,
ஒருபெரும் முன்-ஆதி காணும்பு பூத-அரு ஆன-
எள் ஓதி நண்ணி, ஈம்-இவ்வு உண்ப-இப் படி-
செறியு இருமையும் போவ-கெடு ஒத்து உணர்-
உன், இர-ஓரின் முப்பத்தொன் றும்பன்னுன்
காவது குணதீதம் செல்-நல் இன்ன, தாம்-மூத
இந்த-என் சத்து-பற் ஓது-குறி உரை-வாழு

ஒத்து தக்க, தக்கசத் அரு-சத்து உட-கண்-வாய்
தொழில்-மான இப்ப-ஒழி இருபான் மூன்றே.

7. ஏ-பதினெங் தாவ(து)பிர பஞ்சம்-சா யை-
வேர்-இவ் ஊழ்-கரு-மற் றிப்-கண் நெறியால்,
ஏர்-கனவு மந்திர-துன் குட-பூக்க மின்-இந்தி
மூங்(து)-தின்-நல் அசைவி மருவு, ஆப-மொழி
இவை-இந்த வேத-கண இருபத்தைந் தாம்-
பன்னு ரூவ(து)தேவ, அசுரசம் பத்து-மற தெய்-
அஞ்சு மறை-இருவ தீமை-என் விரும்ப நிறைவி,
பாப-இற இப்-இனம் தொட-விய-மன் மற்-இவ்-
ஒரு காதல்-கூ ஆதல் மூவேழ், பதினேழா வது
குணவி காரம்-உண் வேத-யா வர்-சாத்து அட-
உண் சத்து, மூப-இப் ஆசி-செய நூற்-தீக்கு
தீர்த்த-தெளி தலை-தீத்த வசையி பேதை, முன்-
கொண்-வா யா-ஒப்ப ஓமென்கின் ஓமென்று
காதல்-இரு பத்தைந் தாங்காண்.

8. காண்-பதினெட் டாவது-சங் க்ஷேபம்-ஏ
கம்-சன்னி காமமென் றீங்கி ஞாந, கார்-என்ன
நித்த-மெய் யாதி-யாக் இன்ன-ஒங் இரு-வாக்-இவ்

யாவன் அறிவு, சாண்-ஆன்ற நன்றாய்-ஊ னப்-
வீதல் குலை-பற்று வினை-நினை மனமெர் ஈணம்,
தருமம்பா பாவ-மனம் பண்-துன்பம் பொரு-
தொடரு இந்தவியற் கறைசெய் தலைமை, ஆண்-
உழுதொ தீராவ அல்லாவி கனை - வெல்ல்
சொன்னகர காடு சொன்ன, அந்தவுரு என்னப்ப
ஒன்றி-விரை பொறி-வேற தீதகலா என்னை
இருவே, மாண்-மற்று எல்லாப்பொ ஏய-என்
மண்-வைய பையாவி அணி-பி ணித்த, மாத-அப்
பொரு-எஞ்ச திரு-என்ற வேதநூல் ஆற்றியல்
எழுப தாமே.

மூற்று.

உ

ஸ்ரீ கிருஷ்ணாய பரப் பிரஹ்மணே நம:



# பகவற் கீதை.

---

## ஸ்துதிகள்.

பாதியோர் பெண்மையான் பரிந்து பெற்ற தோர், சோதியாங் களிற்றினைத் தூர மண்மை யிற், பேதியா துளம்பெறப் பேணிப் பாகவற், கீதையான் மொழிகுவன் ஞாநங் கிட்டவே. 1

அரியயனோ டானுகி யகிலந் தன்னை யாக்கி யளித் தழிக்கின்ற வவித்தைக் கென்றுங், கரியது வாய்க் காந்தத்தி னிரும்பு போலக் காணத்தின் சலநத்துக் கேது வாகி, வரியமரு மரவணைமே லொளிய வேறி வைகுண்டத் தினிதமரு மா

யோன் மண்மேற், பரிபுணரு மணிநெடுந்தேர்ப் பார்த்தற் கூர்ந்த பாண்டவர்கள் சாரதிநாம் பரவுந் தெய்வம். 2

ஒருபத மடித்தொரு பதம்பொற் றேர்மிதித், தொருகையிற் குசைகசை யொருகை ஞான மாய்ப், பொருகைவில் விசயனைப் புரிந்து நோக்கி மெய், தருபொரு ளுரைத்தவர் சரணம் போற்று வாம் 3

## ஆக்கியோன் பெயர்.

சேயமா மதுரை நின்றுஞ் சேமமா நகரந் தேடி, யாயனுர் பட்ட ஞரா யவதரித் தருளி ஞலே, போயநாண் மொழிந்த கீதை புலப்படுத் ததுவு மன்றித், தூயமா தவர்க்கு மிந்தச் சுருதிநூ ஞெருடங்கி ஞரே. 4

உ
பரமாத்மனே நம:



# பகவற் கிதை.

## பாயிரம்.

ஐவகைப் பொருளு நான்கு கரணமுங் குணங் கண் மூன்றுஞ், செய்வினை யிரண்டு மொன்றி யாவருந் திகைப்ப நின்ற, பொய்யிரு ளகல ஞாநப் பொருட்கதிர் விரித்த புத்தேள், கைவள ராழிச் செங்கட் கண்ணனைக் கருத்துள் வைப் பாம். 1

மன்னருள் விசயன் கேட்ப வாளம ரதன்மே விட்டு, மின்னவிர் படைக்கை மாய னுரைத்த மெய்ப் பொருளை யெல்லாம், பன்னரு மறைகள் கோத்த பழமுநி பணித்த வண்ண, மென்னறி வளவி னாலே தமிழினு லியம்ப லுற்றேன். 2

விண்ணியன் மொழியினுல் வியாதன் கூறிய,
புண்ணிய கதையைநீ புகல்வ தென்னெனி,
லெண்ணிய வகைபிறி தில்லை யாருமிந், நுண்
ணிய பொருளிலே நுழைய வேண்டியே. 3

உன்னு நான்மறை மால்வரை யுச்சிமேன்
மன்னு மேகமு ழக்கிய வாக்கினைப்
பன்னு சீர்ப்பா மார்த்த தரிசந
மென்னு நாமத்தி தனையி யம்புவாம். 4





# 1. அர்ச்சுநன் சோக அத்தியாயம்.

புண்ணிய பூமி யென்று புகழ்குரு பூமி தன்னி,
னண்ணிய பின்னை நண்ணு தவர்களு நமரு
மாங்குக், கண்ணிய தெதனை யென்று கண்ணிலா
வரசன் கேட்பத், தண்ணிய வினிய சொல்லாற்
சஞ்சய னுரைக்க லுற்றான். 1

போர்முக மாகி நின்ற புல்லலர் படையைப்
பார்த்துக், கார்முக வுழவ னுய கலைமறை
யவனை நோக்கி, வார்முா சதிருந் தானை வாளா
வுயர்த்த தோன்ற, லேர்முகின் முழக்க மென்ன
வின்னண மியம்பு மன்றே. 2

வீமனையும் விசயனையு நிகர்தருபோர் வில்லாள,
ரோர்மருவு சிலையபிம னுள்ளிட்டா ரெனப்பலருந்,
தார்மருவு தலைவர்களாய்த் தலைப்பெய்த தானை
யினை, மாமருவு பெருந்தேரோய் பாரென்று மறித்
துரைப்பான். 3

கங்கை யாள்பெறு காதல னும்புக
ழுங்கர் கோனென தாருயிர்த் தோழனு
நங்கள் வாழ்துணை நம்பியு நீயுமற்
றிங்கு வாழ்சயத் திரதன்கி ருபனும். 4

அன்றி யேயும ரசா நேகரால்
வென்றி யேதிரு வல்லது வேண்டல
ரொன்றி யேதமெ மக்குறு மேலுயிர்
பொன்றி யேயது போக்குதன் மேற்கொண்டார் 5

எய்து மெங்கள்பி தாமக னேவலாற்
கைகொள் இன்றக டற்படை கண்ணுறில்
வெய்ய வீமன்வி யப்பொடு காத்திடு
மைவர் தம்படைக் காற்றவற் றாருமோ. 6

மேல்வ குத்திவர்க் காமின்வி ரைந்தெனு
மேல்வை யிற்றிறல் யாதவர் சூழ்ந்திடுங்
கால்வ ளைத்தசி லைக்கங்கை யாண்மகன்
வால்வ ளைத்திர டன்னையும் வாய்வைத்தான். 7

வஞ்சர் செய்தவி னைமற விக்குண
வெஞ்ச மம்விளைத் தென்னவும் வேந்தர்கோ
னெஞ்ச முண்மகிழ் வெய்தவு நேரலா
ரஞ்ச வுங்கனன் றார்த்தன ரார்க்கவே. 8

ஆர்த்தன வளைக ளெங்கு மதிர்ந்தன பல்லி யங்கள், போர்த்திரட் படையின் றார்ப்பப் புவநமீ ரேழும் பூத்த, தீர்த்தனுந் தனது சங்கைச் செங் கையால் வாங்கிக் கொண்டு, கார்த்திரண் முழக்க மென்னக் கடல்கிளர்ந் தார்த்த தென்ன. 9

வையம னைத்தையும் வாரிமுன் வைக்குஞ்
செய்யதி ருப்பவ ளத்திடை வைத்தா
னைவரெ னக்குயி ராதவி னாலே
யுய்வது மக்கிலை யென்பதை யொத்த. 10

தருமனடல் வீமனருச் சுநகுல சகதேவன்,
றிருமருவு விசயம்ப வுண்டரந்தே வதத்தமெழின்,
மருவுறுசு கோடமணி புட்பகமென் றிடுமிவற்றி,
னுருமனைய குரலெதிர்ந்தார் செவிபுதைப்ப
வூதினர். 11

ஒன்ற லாதுபல வூதி னர்கள்பல ரூதும் வால்
வளையி னோசைபோய், நின்ற கௌரவர்க ணெஞ்
சை யூடுருவி யஞ்ச வானினுநி ரம்பிமேல், வென்றி
சேரமர்தொ டங்கும் வேலையினில் வெள்ளை
மாநடவு தேரின்மே, னின்ற போர்விசய னென்று
மாயனெதிர் நில்ல லாமையொடு சொல்லுவான்.

யாவர் போர்கருதி யெய்தி னர்களெதி ரெய்தி
நின்றவிவர் தங்களில், யாவ ரோடமர்தொ டங்க
லாமெனவ றிந்து கொள்ளுமள வியாவையுங்,
காவல் பேணியவை தந்து பின்னவைக ரந்து
கொண்டருள்செய் கண்ணனே, மேவ நீகடவு

மாக்கொ டேரினைமி றுத்து வாயெனவி ளம்
பினன். 13

விளம்பு மவ்வளவின் மேக வண்ணனுமவ்
வெள்ளை மாநடவு தேரினைக், களங்கொ ளும்
பரிசு நின்ற தானைநடு வேக டாவியிது காணெனு,
வளங்கொள் கங்கைமக னுதியாகமுடி மன்ன
ரியாவரையு முன்னுருத், துளங்கு கின்றமொழி
யோடு நெஞ்சினெடும் வல்ல வாறுசில சொல்
லினன். 14

தாவிலருந் தந்தையருந் தந்தையர்தந் தந்தை
யரு, மேவியுடன் பிறந்தாரு மெய்ஞ்ஞான மளித்
தாரு, மாவியென நட்டாரு மான்றோரு மமர்க்
களத்தே, மேவியவெம் பொருட்டாக வீடுவான்
றொடங்கினர். 15

தீதறு சிறுவர்மற் றவர்கள் சேய்களு
மாதுல ரிவர்களோ மாய்கின் றூரெனக்
காதல்செய் திடரினுற் கலக்க முற்றவன்
மாதவ னெதிர்சில மறித்துங் கூறுவான். 16

வாயே யன்றி முகமலரா மநமொன் றுணர
மாட்டாது, நீயே யென்ன வுடல் வெதும்புஞ்

செவ்வே நிற்க மாட்டுகிலேன், வேயே தருதிண்
காண்டீப வில்லு நழுவி விழாகின்ற, தாயே
யனையாய் போர்நின்ற தமரைக் காணுந் தொறு
மன்னே. 17

ஓத லாகா நிமித்தங்க ளொன்றே யல்ல
பலவுளவாங், காத லாரைக் கொன்றுபெறும்
பயனே வொன்றுங் காணேனு, ஞதலாலிவ்
வென்றியுட னரசி னுரிமை யானதனை, யேய்த
லாவ தென்கின்ற தியாதின் பொருட்டோ
வியம்பாயால். 18

அரசவ் வரசால் வரும்போக மதனு லின்ப
மெய்துமென, வுரைசெய் பொருள்கள் யாவர்
சிலர் பொருட்டா லுலக ருழந்த டைவர், வரை
செய் புயனே மற்றவர்தம் பொருளுந் தங்கள்
வாணளு, நிரைசெய் தொருவ ரொருவரின்முன்
னிற்க வந்து நின்றூரால். 19

ஆன பொருளீ தாதலினு லவரைக் கொன்று
லருள்சேரா, தீன மன்றி யெங்க ளுக்கோ
ரின்ப மெங்கு மில்லையாற், கூன வரிவிற் கொண்
டென்னைக் கொலினு மவரை யான்கோறல்,

வானம் பெறினு மாட் டேனான் மண்ணின்
பொருட்டால் வல்லேனோ. 20

கொற்றவர்தங் குலங்கெடுத்தால் வருகின்ற
குற்றமுமெய், யுற்றவர்தந் திறம்பிழைத்தா
லுறுகின்ற வுயர்பழியு, மற்றவர்க ளறியாது
மறந்திடுக மறந்தாலுங், குற்றமென வறிந்தநான்
குறிக்கொள்ளா தொழிவேனோ. 21

குலங்கெடவே வருகின்ற குலதருமங் கேடுறு
மங், நலங்கெடவே குலம்பாவ நண்ணுமது நண்
ணவே, யிலங்கிழையார் நெறிதிரிவ ரிவர்கணெறி
திரியவே, தலங்குலவு குலமெல்லாந் தலைதடுமா
றுகுமால். 22

தடுமாற்ற மக்குலத்தே சார்ந்தவர்க்குஞ் சாரா
தே, கெடுமாற்ற னினைந்தவர்க்குங் கெடாநிரயங்
கிடைப்பிக்கும், படுமாற்ற மென்னுரைக்கேன்
பண்டிறந்தோர் களுந்தமக்கோன், றிடுமாற்ற
லவர்கள்பெறு திருணரகத் திழிவர்களால். 23

வாரா நின்ற குலமயங்கப் பண்ணி னார்க்கு
மற்றதனைச், சாரா நின்ற குலத்திற்குந் தருமந்
தளர்ந்து சாயுமாற், சாரா நின்ற சாதிகுல

தருமந் தளர்ந்து சாயவே, போா நிரய மெய்து மெனப் பெரியோ ரெல்லாம் பேசுவரால். 24

மின்னே யனைய செல்வத்தை வேண்டித் தங் கண் மெய்யுயிரைக், கொன்னே கழிக்க நின்ற வரைக் கொல்லத் துணிந்த கொடுவினையே, னென்னே கொடிய பெரும்பாவ மெய்த நினைந் தேன் யானுமிவர், முன்னே படைவிட் டமர் துறந்து நின்று விவர்கண் முனிவாரோ. 25

கொல்லினுமெ னக்கிதுபொ றுக்கைகுண மென்றே, கல்வினிகர் தோள்விடலை கண்ண னெதிர் கூறி, வில்லினுட னேபகழி சோாவிழி சோாச், செல்லுமணி யாழியணி தேர்மிசையி ருந்தான். 26

முத லாவது சோக அத்தியாயம் முற்றிற்று.

பாயிர முட்படச் செய்யுள் 30.

---

## 2. சாங்கிய யோக அத்தியாயம்.

---

இவ்வண்ண மறிவொாதுங்க வெழுகின்ற விரக் கத்தாற், செய்வண்ண மறியாது திகைத்திருந்த

தேர்விசய, னுய்வண்ண மதுநாடி யொருவண்ண முலகோதுங், கைவண்ண மலருடைய கார் வண்ணன் கட்டுரைப்பான். 1

ஆயா தவர்க்கு மலிகட்கு மடுப்ப தழியாப் பழியுனது, தேயா வறிவைத் தேய்ப்பதறச் சிறுமை களிலே சிறுமையது, சாயா நரகத் திடைசாய்ப்ப துன்போல் பவர்க்குத் தகுதி யன்றீ, தேயா நிலத்தே யுனையையா வெவ்வா றடைந்த தெனவறியேன். 2

ஒவ்வாதீ தொழிந்தமர்மே லொருப்படுகென் றுருக்கரிய, செவ்வாயன் றிருமொழியத் தேர் விசயன் செப்புவான், மெய்வாயி னெடுமநத் தான் மிகப்போற்றற் குரியாரை, யெவ்வாறு கொலைபுரிவே னென்றிவ்வா றியம்பினன். 3

மாற்றலர்க ளென்றிவரைக் கொன்றுபெறும் பெருவாழ்வி, லேற்றமுரைத் தியான்பிறர்பா லிரந்துண்கை யினிதன்றே, கூற்றவர்க ளுயி ருண்டா லவர்குருதி யாற்குழைத்த, சோற்றை யுணல் போன்மன்றே யான்பின்னைத் துய்ப்ப தெலாம், 4

தவர்கொள்படை விடுகையோ தவிர்கையோ தருவதுமற், றவர்களளை வெல்வரோ யான் வெல்வ னேவறியே, னிவர்கள்சில ரிறந்தக்கா லதனலே யென்னுயிர்போ, மவர்களமர் தொடங் குகவென் றடல்குறித்து நின்றூரால். 5

ஆதலா லறிவாய விழியினைமற் றூங்கவர் பாற், காதலா மிருண்மறைப்ப நெறியெங்குங் காணேனு, னூதலா லெனக்குறுவ தறிகிலே னுரைத்தருள்வாய், சாதலா னதும்பிறப்பு மில்லாத தனிமுதலே. 6

உஞ்சே போகு நெறிவாளா வுரைப்ப னே வென் றுளங்கருதிற், றஞ்சே யென்றுன் சரண் புகுந்தேன் றண்டிற் பணிந்தேன் றூமரைக்கண், மஞ்சே யுன்றன் மாணக்க னுயுன் பாத மலர் புனேந்தே, னஞ்சே லென்றிங் கடியேன்செய் வினைக ளேவி யருள்புரிவாய். 7

மண்ணுளும் பெருஞ்செல்வ மன்றியே மாயாத, விண்ணுடு பெற்றிடினு மென்னுடைய மெய் யுணர்வு, நண்ணும லடுதுயர நலியாமற் காப்ப தனைக், கண்ணுவிங் கெவ்விடத்துங் காண்கிலே னெனக்கலுழ்ந்தான். 8

நெய்மார்பிற் சொரிவதென நெடுங்கண்க
ணீர்சோர, விம்மாநின் றவன்காதல் வெந்தீயால்
வேவாமே, கைம்மாறின் றின்றியுயிர் காப்
பதே கடன்பூண்ட, வம்மாயன் றிருவாய்மை
யருண்மாரி யாலவிப்பான். 9

மின்னை யனைய திருநகைகொண் டருளி விரைத்
தா மரைநாறும், பொன்னை யணியுந் திருமார்
பன் போகாத் துயர்போம் பரிசெண்ணி, முன்னை
மறைக ளெடுத்துரைத்து முடியும் பொருளாய்
முதற்பொருளாந், தன்னை யுள்ள பரிசவற்குத்
தானே சாற்றத் தொடங்கினன். 10

சாவதிலை யாவர்களு நிற்கவது தானே
மாய்வரென நீகருது மாரதர்க ளெல்லாந்
தேய்வரிய தீவினைசெய் யாதமையி னலே
வீவதன்முன் வானுலக மேவுவர்கண் மேன்மேல்.

அன்னவர்கள் சோகிதமொ ழுவழுத லாலும்
பன்னவரி யோர்கண்முறை யேபகர்த லாலு
மன்னமய லேறியுண்ம யங்கினைகொல் வாயா
தின்னதொழி லானதைம றந்திடிவை யுங்கேள்.

மாயுமவ ராலுமுயிர் வாழுமவ ராலு
மாயுமறி வோர்களழி யாமையறி யாயோ
நீயுமிவர் தாமுமிகழ் நானுநெறி தேரி
லேயும்வகை யாலுலகி லென்றுமுள மேகாண்.13

பொன்றுவது டம்பதனு ணின்றபொருள் பொன்ரு, தென்றுமொரி யற்கையொடு நிற்கு மியல் பைக்கேண், முன்ருெடர்ம கப்பருவம் விட்டிளமை மூப்போ, டொன்றுமுட லாயினுமு யிர்க்கியல்ப தன்ருல். 14

அன்னவகை யாலுருவ ழிந்துவரு மாங்கே
யென்னுருவ மாமறிவி றந்துபிற வாதாற்
பின்னதறி வானுடல ழிந்துபிரி போதுந்
தன்னதென வேதுமொர்ச லிப்பதறி யாஞல் 15

இவ்வகைய தாகிலழல் சீதமிட ரின்பஞ்
செய்வகையி லாவறிவு சேர்குவதெ னென்னின்
மெய்வகையி னுலிவைவி ளைந்திதா மேய
வைவகையி னுயபுல னும்பொறியு மையா. 16

சீதமழன் முதலவற்றின் செயல்கேட்கி லநித் தியமாய்ப், போதலொடு வருவனவா யிருக்கு முவை பொறுநீயு, மாதலிலென் பயனென்னி

லவைபொறுத்த பெரியோனே, யேதமவை நிலை கலக்கா வவன்வீடே யெய்துமால். 17

மண்ணி னுய விகாரமுமம் மண்ணே யந்த மண்ணொழித்துப், பண்ணி னுரும் பிறரில்லை பண்ணப் பட்ட பலபொருள்க, ளெண்ணி னுரு வதன்முன்பு மிறந்த பொழுது நிகழ்விடத்துங், கண்ணி னுடி மண்ணொழியக் கண்டா ருளரோ கட்டுரைப்பாய். 18

வையாரயி லுழவாவதன் வகையேயிதன் வகைகேண், மெய்யானது நசியாதித னுடன் வேறென விரவும், பொய்யானது நிகழாதிவை புலனுகிய பொருளே, யையாவெனே யறிவாரிவை யறிவார்பிற ரறியார். 19

யானும்வகை யதுகேளெழு மொலியேமுத வியவும், வானுதியில் வருபூதமும் வருநாள்வரு மிடமா, யானுதெழு மறிவியாவையு மறிகாரண மதுவாய்ப், போநாளொடு வருநாள்வழி புணாரததொர் பொருளே. 20

அழியாதமெய் யஃதியாதெனி லவிகாரதை யுருவா, யொழியாநிறை வொடுநீடிய தெனதியா

னென வுணரா, வழியாமதி யியல்பாலிது சில
மாறுகொள் குவதாய், மொழியாரவி யயமா
மிதை முயல்வாற்கொல வலரார். 21

இல்லாமையி னியல்கேளெழு கழுதாழியி
னிடையே, யல்லாதெழு புனல்போலறி வுறவே
யழி குவதா, லெல்லாவகை யினுமாய்வதிவ்
வுருவேயறி வதுதான், கொல்லாதழி கொலை
யானது குறுகாதத னெறிகேள். 22

ஊறுபட வொன்றினுளே பிறத்தல்பிறந்
துளவாதல், வேறுபட வளர்தல்வளர்ந் தய
லொன்ருய் விளைந்தமைதன், மாறுபடத் தேய்
தலற மாய்தலென வருகின்ற, வாறியல்பு முடம்
பன்றி யறிவடையா வாதலினல். 23

நில்லா வுடற்கே நின்றேயு நித்ய மாகி யதுகாச,
மில்லா ததுபொய்ப் பிறப்பிறப்பொன் றறியா
ததுமற் றதுவறிந்தோர், கொல்லார் கொலையே
வலுஞ்செய்யார் குலமே விட்டுக் குலமறைக,
ளெல்லாம் விதித்த தொழிலினையு மியம்பிற்
றென்றே யிதுதெளிநீ. 24

பீறிய போர்வையைப் பெயர்த்துப் பின்னரே
வேறியல் போர்வையை விரும்பு வாரென
ஆறிய வுடம்பினி லுதித்த வுண்மைதான்
மாறியோ ருடம்பினை மருவு மன்னனே. 25

உருப்பான்மை மற்றதனுக் கொருநாளு மின்மையாற், செருப்பால்வெம் படைக்கலங்கள் சேதிக்க மாட்டாவா, னெருப்பால்வெந் தழியாது நீரானெக் கொழுகாது, மருத்தாலுஞ் சலியாது மற்றதன்றன் வகைகேளாய். 26

எல்லாப் பொருட்கும் பழையதனை யெங்குந் தானு யிருப்பதனை, யில்லாத் தன்மை யில்லதனை நித்யத் துவத்தை நிலைபேற்றை, யல்லாப் புலன்கள் பதினொன்கு மறியா வறிவை யறியாதே, யில்லாப் பொருள்போ லழியுமென விரங்கு கின்ற தென்கொண்டோ. 27

வீவரெ னக்கொடு மெய்தளர் வாயேல்
யாவர்பி றப்பவர் யாவர்க ளேனும்
சாவர்பெ யர்த்துமவ் வாறுச நிப்பர்
காவலி தற்குள தோகட னேகாண். 28

செறிந்ததிவ் வாறிவ ரென்பதுந் தேராய்
பிறிந்திவர் போமிட மும்பெரி தோரா
யறிந்தது நீநடு வேசில நாளே
யெறிந்திடு வேலவர் பாலிட ரென்னே. 29

ஒருவ னென்றுங் கண்டறியா ததுகண்டாற்போ லுணர்ந்திருக்கு, மொருவ னென்றுமுரைத்தறியா ததனை யுரைத்தாற் போலுரைக்கு, மொருவ னென்றுங் கேட்டறியா ததனைக் கேட்டாற் போலுவக்கு, மொருவ னென்றுங் கேட்டாலு மறியா னிந்த வுண்மையினை. 30

திதனு யெவரு மறியாத பொருளைத் தெரிந்து கொண்டுநீ, யிதனு லிவரை யான்கொன்றே னென்ப தொழிவா யின்னுங்கேள், விதநா லாய மறைமொழியும் வேந்தர் தருமம் வாளமரென், பதனு லமரே தொடங்கதனை யறநன் றெனநீ யையுறேல். 31

செய்தி யின்றியத் தேவர்கள் வானுல
கெய்த நின்றவி துபெறு கின்றவர்
வைதி கந்தரு மாதவ மேற்கொடு
மெய்தி ருந்திய வேந்தர்க ளல்லரோ 32

ஆவ தானவ மர்தொடங் காயெனிற்
போவ தானபு கழுந்த ருமமும்
பாவ மாம்பழி யாமிப்ப ழியினிற்
சாவ தானது வேதலே யல்லவோ. 33

அன்றி யும்முனே யஞ்சினே யென்பரா
னின்றி யைந்துநி லத்துமுன் னீசெய்த
வென்றி யும்பழி யாய்நிற்கு மேவல
ரொன்றி யம்பிவின் னுங்கிதன் மேலுண்டோ. 34

இன்று வாளமர் தன்னிலெ திர்ந்துநீ
பொன்றில் வானவர் போற்றவிண் காக்குவை
வென்றி சேரிலிவ் வேந்தரெ லாந்தொழ
நின்று ஞாலம ளிக்குவை நீயரோ. 35

துற்ற வின்பமுந் துன்பமுந் தோல்வியும்
வெற்றி யும்மிழ வும்மிகு பேறுமென்
றுற்ற வின்னவைக் கொத்தம னத்தனுய்க்
கொற்ற வாசமர் செய்குற்ற மில்லையால். 36

கதுவிய பொருண்ஞானங் கரையறு முறையாலே, பொதுவுறு வகைநீயும் புலனறி வகையானு, யெதுவொரு வினையாலே யிருவினைகளும்வீடு, மதுதனை யறிவார்வீ டணைபவ ரதுகேளாய். 37

அரிதெனு மறிஞோர்தஞ் செயலது வழி வாகா, விரிதரு மிடையூறும் வினைகளு மிடை கூடா, தெரிபொருள் சிறிதேனும் பெறுமய றெறுமாறு, வுரியதிவ் வுலகோர்பா லதுவல துளதோதான். 38

தெளிபவ ருணர்வொன்றே தெளிவில ருணர் வோதிற், றளிர்நிகர் பலவாகுந் தருபய னது மேவு, மொளிமறை நெறிமேலா வுணர்பொரு ளெனவோது, மளியவர் தெளியாதா ரவையல தறியாரால். 39

புண்ணிய வுலகத்தே பொருண்முடி வென வைப்பார், மண்ணியல் பிறவிக்கே வரும்வழி நெறிநிற்பார், பண்ணிய வினைகட்கே பயனினை பவர்தம்பா, லுண்ணிய பொருள் செப்பார் நுணுகிய வறிவுற்றோர். 40

நவைதரு குணமுப்பா னணுகிய பயனுற்றோர், சுவைதெரி குணம்வைப்பார் தொழின்மறை நெறியுற்றே, கவைதரு குணமுற்றோர் கருமம திடமிற்று, மவைகெட வருமப்பா லறிவின னெனநிற்பாய், 41

குளமுத வியவற்றே குளிமுத வியதுய்ப்பா, னளவறு புனல்பெற்று லவைகொள லருமைத் தோ, வளமறு கருமத்தால் வருசிறு சுவைவற்று, வுளமகிழ் பிரமத்தே யுளகொள லெளிமைத்தால்.

அறிவினை யறிகிற்பா யகிலமு மடைவுற்றே, பிறிபொழு தினிலொத்தே பெருவினை தனினிற் பாய், நெறிதரு மறிவொட்டா வகையினை தனி னிற்பார், சிறியவ ரெனமிக்கோர் தெளிபவர் செயலைக்கேள். 43

விடலரும் வகையிற்றும் வினைப்பய னது விட்டே, கடவிய வினைமுட்டா வகைசெய்து கழிவற்றோ, னுடலொடிவ் வுலகத்தே யுளனென நிகழ்பெற்றே, யிடரினை யறவிட்டா னெனையறி வகைபெற்றான். 44

தருபய னதுவிட்டே தகும்வினை செயலுற்று, லருமய லறுமற்று லறிவுறு மறிவுற்று, லிருவினை விடும்விட்டா விழவொடு பெறுதற்பா, லொரு மரம் வருமத்தா லெனையுணர் வுணர்வப்பால். 45

பேதைமை யடைகுற்றே பிறிதுறு மாமற்றே, யேதமி றெளிவுற்று னியாதொரு பொழுதப்போ, தோதலொ டுலகத்தோ ருரைகளி னுளம் விட்டா, ஞதலி னெனமெய்ப்பா டடைதரு நெறியைக்கேள். 46

தலைநின்ற பொருளைய மின்றியே சலியாதே, நிலைநின்று னியாதொருபோ தப்போதே நெறி நின்றுன், கலைநின்ற மெய்ஞ்ஞாந யோகங்கண் ணுறுமென்னச், சிலைநின்ற தோள்விசய னிவ் வண்ணஞ் செப்பினுன். 47

இவ்வகை யவனை நின்றோ ரெவ்வகை யுரைப் பா ரந்தச், செய்வகை யிலாதோன் செய்யுஞ் செயல்களென் செப்பு மாறென், மெய்வகை யருள்செய் கென்ன விண்ணையே முதலாக் கொண்ட, வைவகைப் பொருளு மீன்ற வவனி வை யருளிச் செய்வான். 48

அறிவினிற் றன்னு வின்புற் றனைத்தவா வினையு நீக்கி, வெறிதரு வெகுளி காம மயக்கநீத் தின்ப துன்பம், வறிதெழு பொழுதில் வாட்ட மகிழ்ச்சி யென் றிவையு மாய்த்துப், பொறிதரு புகழுந் தீங்கும் போற்றல்போற் றுமை போக்கி. 49

ஆமைதன் னுறுப்போ ரைந்துந் தன்னுளே யடக்கு மாபோற், றீமைசெய் புலன்க ளைந்துந் தன்னுளே செறியச் சேர்த்தி, வாய்மையு ணிகழு மின்னே வழுத்தவும் படுகின் றூனற், றூய்மை செய் தெவையு நாளுந் சொல்லுவ தவன்றன் சொல்லாம். 50

குறையுமாப் பிணிப்புற் றூலுங் கொண்டவிப் புலன்க ளெண்ணி, லறைகட லனைய நெஞ்சத் தவாவறு னறிவி னில்லான், மறைமொழி பலவு மோதி யடக்குவான் மநத்தை வாங்கிப், பொறை கெடப் புலன்க ளைந்தும் பொறியிலே புகட்டும் கண்டாய். 51

ஆதலாற் புலன்க ளைந்து மடக்கரி தடங்கா தாகிற், றீதிலாக் கருத்துந் தீய வவற்றிலே செல் லுஞ் சென்றூன், காதலாற் புகைந்து வெய்ய காமமாய்க் கொளுந்திக் காம, மேய்தலா காமை தீய வெகுளியா யெரியு மன்றே. 52

எரிகிகர் வெகுளி பொங்க மயக்கம்வந் தெய்து மெய்தத், தெரிபவை சிதையு முன்ளந் தெரிந்த வை சிதைந்த போதே, யுரியதன் னுணர்வு மாயு

முணர்வுமாய்ந் தொழிந்த வாறே, யரியவென் றறிஞர் பேசு மனைத்துமாய்ந் தொழியு மன்றே.

வேண்டல்வேண் டாமை யின்றி மிகைசெலாப் புலன்க ளாலே, மாண்டபோ கங்க டுய்ப்பான் மாங்கலங் குறுன்மற் றத்தா, வீண்டிய தெளி வுண் டாமாற் றெளியவே யெல்லை யின்றிப், பூண்டநோய் நீங்கு நீங்கப் புலனிலை நிற்கு மன்றே. 54

அடுத்தலைம் புலன்செ யாதார்க் கறிவில்லை யறி வின் றாக, விடுத்தமெய் யுணர்வின் றாமான் மெய் யுணர் வில்லை யாகிற், றெடுத்தபின் சித்த சாந்தி தோன்றிடா ததுதோன் றாதே, லெடுத்தநல் லின்பந் தானு மில்லையே யிசைக்க வேண்டா. 55

ஆறுசெல் பொருள்க டுய்க்கு மைம்புல னுக்கும் பின்னே, காறொடர் நெஞ்ச மந்தப் புலன்றனைக் கலக்கு மாங்கே, யூறிய கடலு ளோடு கலத்தினை யுடன்செல் காற்றே, வேறுசெய் தறைந்து மாய்த்து வீழ்த்துமா போல வேயாம். 56

யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மிருள் போற் காணு, வேரதரு ஞாமி யத்தை யுளங்கை

யிற் கனிபோற் காணும், யாதொரு பொருளை யெல்லா வுயிர்களு மென்றுங் காணுங், காதலின் ஞாநி யத்தைக் கண்ணினுற் றெரியக் காணுன். 57

நீரினு னிறைந்து நின்ற கடலிலே நெறிமேற் கொண்டு, நீரினு னிறைந்த வாறு வீழ்ந்ததா னிறைவு ருது, தேரினு யதுபோ லாசை செறிந் தவர் திறமே நோக்கிச், சாருமா லாகி லத்தா லவர்களுஞ் சலித்தல் செய்யார். 58

யானென தென்ப தின்றி யெவ்வகைப் பொருளும் விட்டான், ருனெனச் சரிக்கின் ருன்யா ரவனேயே யடையுஞ் சாந்தி, யீனம தடையா ரித்தை யடைந்தவ ரிறக்கு மப்போ, தேனுமீ தடைவா ரென்னே யெய்துவார் பிறவி யெய்தார்.

பின்னே யோவிவ்வு லகமெ லாம்பெற்ற
வன்னே யோதிரு மார்பத்த ணைத்தவன்
முன்னே யோர்புகழ் வேதமு டிவையோ
தன்னே யோவுள்ள வாறெலாஞ் சாற்றினுன். 60

2. சாங்கிய யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 90.

---

# 3. கர்ம யோக அத்தியாயம்.

அலையிலே கடல்கிடந்து மருமறைக ளானவற்
றின், றலையிலே யிருக்குமவன் றேரிலே நின்
றருளிக், கலையிலே பொருளெடுத்துக் காட்டவு
மெய் காணுதே, சிலையிலே தோள்விசய னிவ்
வண்ணஞ் செப்புவான். 1

நன்றே வினையின் ஞானமென வுரைத்தாய்
மீள வினைநல்ல, தென்றே யுரையா நின்றனைநா
னிவற்றி லெதுநன் றெனவறியேன், குன்றே
யனையா யுனையடைந்தேற் குற்ற துயர்நீக் கிடுவ
தனை, யொன்றே யாக வுரைத்தருள வேண்டு
மென்று னவனுரைப்பான். 2

ஆதியி லுலகினை யாக்கி யன்றுநா
னோதிய பொருளிவை யிரண்டு முண்மையே
தீதிய லவாவருன் செயலை மாற்றுவான்
மீதியல் வினையுறுன் வீடு மேவிடான். 3

ஒருவரு மொருபொழு தினுமோர் காலமு
மிருவகை வினைசெயா தவர்க ளில்லையா
லருமய லவாவருன் வினைய டக்குவான்
பருவா லொடுபொய்யே பாவிப் பானரோ. 4

புலனவை பொறிவழி போக்கு மாற்றியே
பலனற வினைகளென் பொருட்டுப் பண்ணுவாய்
நலனுறு மவ்வினை நாச மின்றியே
சலமுறு பிறவியுந் தவிர்க்குந் தன்மைகேள். 5

தேவர்களை மகிழ்விக்குஞ் செயலோடே தெரிந்திந்த, மூவகைய வுலகையுமுன் படைத்தமுதலவன்மொழிவான், மேவரிய சுரர்பூசை யிது நீங்கள் வேண்டியன, யாவையுமே தருமின்னுமிதுகேட்பீ ரெனவிசைப்பான். 6

செயல்வகையா னீங்களவர் திறம்போற்றுமாங்கவரும், புயல்வகையா லுங்களையே புறம்போற்றிப் புரந்தருள்வ, ரியல்வகையா னதுபிழையீ ரெனிலிரண்டு திறத்தீரு, முயல்வகையானலனடைவீ ரெனமிலத்தோர்க் குரைத்தனனால்.

மற்றவர்தந் ததுகொண்டு மறித்தவரைப்பேணுதார், கற்றவர்முன் பழித்துரைத்த கள்வரினுங் கடைப்பட்டார், பெற்றதுகொண்டவர்ப்பேணிப் பிழைத்ததுகொண் டுண்ணுதே, யுற்றதுதன் பொருட்டாக வுண்பான்றீ துண்கின்றான். 8

உளவாமுயி ருணவாலுண வுயர்மாரியி னுள வாம், வளவான்மழை யுயர்வானவர் மகிழ்வால் வரு மதுதா, னிளவாளரி யனையாயிசை தொழி லால்வரு மிதைமீ, தளவாமறை தருமாமறை யறிவாலதி லுறுமால். 9

இதனல்வினை களிலேவிளை வனயாவையு மிங்ஙன், றிதனல்வரும் வினையாழியி னெறி சேரலர் திரிவார், மதனுறிய புலனேமகிழ் விட மாகவு முடையா, ரதனலவ ரவமேகழி பவரா மென வறிநீ. 10

கண்ணிற் கருதரு மறிவைக் கருதியவ் வறிவே மிகவரு களிகூர்வோ, னெண்ணிற் றெழிறரு பயனுற் றிடும்வகை யிசையா னுதலில் வினையா வும், பண்ணிற் பெறுவதோர் பயனுண் டோவ வை பண்ணு துறுவதோர் பழியுண்டோ, மண் ணிற் பிறரிவ னிவையுற் றிலனென மதியா ரவை செய விதியாரால். 11

ஆதலா னீயும் பலத்தின்மே லவாவற் றடுத்தகா ரியஞ்செய்வா யவற்றுற், றீதிலா வீடே சேரலா முன்னஞ் சேர்ந்தவ ரநேகர்பின் றெறியிற், காத

லா லபசன் சநகனே முதலோர் கருமமோ டொழுகியே யன்றோ, போதரா யுலகம் புக்கதே மற்றும் புரிதிநீ யுலகிதன் பொருட்டால். 12

பெரியவர் பயின்ற படியலாற் பயிலார் பின்புளோ ரென்பதன் ருகி, லுரியவிவ் வுலக மூன்றினு மெனக்குச் செய்யவேண் டுவதுமொன் றுண்டோ, வரியவை யென்ஞ லுருதவு முறுதற் பாலவு மியாவையிங் கையா, பரியவிவ் வுலக மகிழ்வுடன் வினைதான் பண்ணுதற் கென்னையும் பாராய். 13

என்செய றவிரி லியான்செயா வினைகளியா வருஞ் செயாரத ஞலே, மன்செய்த குலங்கண் மயங்கிமாய்ந் திடுவர் மற்றவர் மற்றதற் காகப், பின்செய லறியா தவாவொடு முயலும் பேதையைப் போற்பிறர் பொருட்டா, லுன்செயல் களைச்செய் யவைசெய்வார் தம்மி னுணர்வை வேருக்கலு மொழிவாய். 14

மெய்வகை தனக்கும் புலன்கட்கு முள்ள வேறுபாட் டினைமிக வறிந்தோ, னைவகை யியற்கைப் புலன்களே பொறியுற் றழுந்துகின் றனவென

வசங்கா, னிவ்வகை யறியா தவனிரு வினையு
மியான்செய்தே னெனவினைத் தேங்கு, முய்வகை
யிதுநீ யுணர்ந்துனக் கடுத்த வினைசெயென்
றுரைத்துமீண் டுரைப்பான். 15

என்பாற் பொருமை யினைத்தவிர்ந்தென் கருத்
தா யுள்ள வினையிதனை, யன்பாற் பயில்வா
ரியாவர்சில ரவர்கள் வினைக ளறவிட்டா, ரென்
பாற் பொருமை யானுரைத்த விதனை யிகழ்கிற்
பார்களவர், வன்பார்த் தரையி லெழுமரம்
போன் மாய்ந்தா ரறிவு மாய்ந்தாரே. 16

பண்டு செய்பகு திப்படி யேவினை
கொண்டு நின்றிடிற் கோவித ரும்பிற
ருண்டு கொன்னல மென்றுணர் கிற்பரோ
கண்டு நின்றவென் கற்பனை யாலரோ. 17

அஞ்சுபுல னவைதொடரு மஞ்சு பொறி யவை
யாம், வெஞ்சுரானி லுலறியுயிர் வெம்பியழி வுறு
வோ, ருஞ்சுபுகு நெறிதகைய வொன்றுபகை
யுளகே, ளெஞ்சுதலி லின்பமிட ரென்பவவை
யிகழ்நீ. 18

தடுத்ததொழில் செய்வதுத காததுத னக்கே,
யடுத்ததொழில் செய்துகெடு மேனுமழ கையா,
விடுத்தகரு மம்பெரிது செய்தவனின் மேலோர்,
தொடுத்தகரு மஞ்சிறிது செய்கைதொழி
லென்ருன். 19

மாய னிவைநின் றுரைசெய்ய விசயன் மறித்
துங் கூறுவான், றீய வினைசெய் யாதவரைத்
திகைப்பச் செய்து திறலாலே, யேய பணிகொள்
வாரைப்போ லியற்று விப்பான் யாரென்ருன்,
பாயல் பரவை யாக்கொண்ட பழையோ னிவ்வா
றென்னப்பணிப்பான். 20

தீம நந்தனி லேசெந நஞ்செயக்
காம மென்னுங்கைப் பாய்வளர் கின்றது
வேம யங்கொள்வெ குளியென் கின்றது
நாம மற்றத னன்னல மின்னுங்கேள். 21

எவ்வ கைப்பய னுந்தின வல்லதை
யெவ்வ கைப்பெரும் பாவமு மீவதை
யெவ்வ கைப்பொருட் கும்பகை யாவதை
யிவ்வ கைத்தெனக் கூறுவ னின்னுங்கேள். 22

நெருப்பை முற்றிய தூமமு நீடொளித்
தருப்ப ணத்தைம றைத்தன மாசும்போ

லுருப்ப டைத்தன வுள்ளுணர் வியாவையும்
விருப்ப முற்றவெங் காமம்வி முங்குமால். 23

காத லாற்றவிக் காமம்பு லன்களே
வாயி லாப்புகுந் துள்ளம யக்குவ
தாத லாற்புல னைந்தும டக்கியே
யேதி லாங்கடுங் காமமி றுக்குவாய். 24

ஆற்று மிவ்வுடம் பிற்பர மைம்புலன்
மாற்று மைம்புல னிற்பர மாமநம்
போற்றும் புத்திய திற்பரம் புத்தியிற்
றேற்று கின்றது காண்பது தொல்பரம். 25

மேலா யுள்ள விப்பொருளை மெய்யா யறிந்து பொய்மாய, மாலாய் மயங்கு மநத்தினையு மடக்கி யந்த மநங்கலக்குங், காலா யுள்ள காமத்தைக் காப்பா யென்று கட்டுரைத்தான், சேலா யுலக முறுபுனலோர் செலுவின் புரையே செலுத்தி ஞேன். 26

3. கர்ம யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 116.

## 4. சம்பிரதாய அத்தியாயம்.

நற்றவ நிகழ்தரு கரும ஞானமு
மற்றம தறவுனக் கறியக் கூறினேன்
மற்றவை களின்வர லாறுங் கேளெனக்
குற்றமி லாழியங் கையன் கூறுவான். 1

எவமற முன்பியா னிரவிக் கோதினே
னவன்மநு வரசனுக் கறியக் கூறின
னுவகையோ டவனிக்கு வாகுக் கோதினன்
றவமுய லரசரீ தறியுந் தன்மையோர். 2

கருதரும் வகைநிகழ் காலஞ் சேறலான்
மருவரும் வகையதாய் மறைந்த வாய்மையை
யிருவினை கெடவரு மியோக நீர்மையை
யொருவரு மறிவரி தாய வுண்மையை. 3

நல்ல காதல்செய் நண்பனு மாயெனை
யல்ல தியாவும றியலை யாதலாற்
சொல்லன் மேயின னென்றனன் றூயவன்
மெல்ல வேறுவி சயன்வி ளம்புவான். 4

ஞான மாமிது நல்லவர் கேட்டிடப்
போன காலமும் யான்புகன் றேனென்று
யான தாகிலு மவ்வுடம் பன்றிது
தான தாம்வகை நீயறி தக்கதோ. 5

சொல்லார் விசய னிதுமொழியத் துளப முடியோன் சொல்லுவான், பல்லா யிரங்கா ணுடம் பெனக்கு முனக்கு நடுவு பரிக்தொழிந்த, தெல்லா மறிவன் யானீய தேது மறியா யிதுவன்றே, வில்லார் தோளாய் நமக்குள்ள வேறு பாடு விளம்புங்கால். 6

சாவாது பிறவாது தனிமுதலா யிருந்தநா, னுவாவிவ் வுலகுபடு மழிதுயர்தீர்ப் பதற்காக, மேவாது நின்றேயென் மாயையினுன் மெய்யே போ, லோவாது பிறந்திடுவே னுகந்தோறு முகந்தோறும். 7

இவ்வகையென் செயலதனை யறிந்திந்த விடும் பையினின், றுய்வகைய நெறிபெற்ருங் குயர்ந் தாரை யுரைப்பரிதால், மெய்வகைய திதுவென்ன வேண்டியவர் வேண்டியன, வவ்வகைய தெய்வமு மா யளிப்பேனும் யானேகாண். 8

செயலாலுங் குணத்தாலுஞ் செலநாலு குல மாக, வியலான்முன் படைத்தேனு னிப்பொழு துங் காப்பேனுன், மயலாய வினைப்பயனின் மநம் வையேன் மற்றதனு, லயலாயே யிருக்குமெனக் கவையறிவா ரெனையனையார். 9

உய்யும் படிமுன் னுணர்ந்தவர்க ளுணர்ந்த வினைமே லொருப்படுநீ, செய்யுங் கருமஞ் செய் யாமை தீய கரும மென்றிவற்றின், மெய்யும் பொய்யு மறிவருமை யறிய வேண்டும் பொருளு மிவை, யெய்யுஞ் சிலைக்கை யுரவோயிங் கிவற்றின் செயலை யியம்பக்கேள். 10

ஓடு கின்ற புனலாற்றி னோடத்துடனே யோடு வான், மாடு நின்ற மரமோடத் தானின் றூற் போல் வரச்செய்தே, நீடு நின்ற மரங்களிவை நிற்கு மியற்கைத் தன்மைத்திங், கோடு கின்றேன் யானேயென் றுணர்வு மிக்கோ னுணர்ந்தாற் போல். 11

செயன்மே னின்ற வறிவிடையே செயலின் மையுமச் செயல்செய்யா, வியன்மே னின்ற புலன்களிலே யெல்லா வினையு மியல்வதுவு, மயன்மே லின்றி யறிந்தானியா ரவனே யெல்லா மறிந்தோனு, முயன்மே னின்ற யோகியுநல் வினைக ளெல்லா மொழிந்தோனும். 12

ஆவ தென்பது மாசையு மற்றன
மேவ ஞானவெந் தீயிடை வெந்தன

யாவர் தந்தொழி லவ்வகை யோர்களே
சாவ தும்பிறப் புந்தவிர்ந் தார்கடாம். 13

எண்ணு மின்றியி கபரம் யானிவை
பண்ணு கின்றன னென்னுமிப் பான்மையோ
னுண்ணு மேல்வினை யுண்டென வோர்கிலா
னண்ணு கின்றவி னைநலி வுண்ணுமே. 14

அடங்கு கின்றபு லன்களொ டாசைபோய்
மடங்கு கின்றம னத்தின னவ
னுடம்பி தன்பொருட் டாலுள தாமெனத்
தொடங்கு கின்றவி னைதொடக் குண்ணுமோ. 15

பெற்ற தேகொட மைந்துமுன் பேறிழ
வுற்ற போதிலொத் தொன்றுமொ ருவர்பாற்
செற்ற மேதுமி லாதவன் செய்வினை
குற்ற மோவவற் றின்றிறங் கூறக்கேள். 16

விட்டு முற்றும்வி னைகள்வி னைப்பயத்
திட்ட மற்றிறை தன்னிலெ ழுங்கருத்
தொட்ட நின்றவ னியாகப்பொ ருட்டுறப்
பட்ட கன்மம்ப லத்துடன் மாயுமால். 17

பிரம மானோர்பி ரமனெ ருப்பிடைப்
பிரம மாகிய மந்திரந் தன்னினாற்
பிரம மாயச ருவுடன் பெய்தபின்
பிரம மேயடை வாருளர் பின்னுங்கேள். 18

அறிவ தாகிய வங்கியி லேகொள
வறிவை யேசில ராகுதி பண்ணுவார்
செறிவ தாஞ்சமத் தீயிடை யேசில
ரெறிவ தாயபு லன்களை யீவர்கள். 19

உந்தி யப்பொறி யைந்தையு மொக்கவே
யிந்தி யத்தழல் வாயிடு வார்சிலர்
நந்தி யத்தொழி லியாவையு ஞானநெய்
சிந்தி யோகவெந் தீயிடு வார்சிலர். 20

தேடிய பொருள்க ளாலுஞ் செயலுறு தவங்களாலு, நாடிய யோகத் தாலு நவின்மறை ஞானத் தாலுங், கூடிய பரிசால் வேள்வி குலாவுவ ரநேகரிங்குப், பாடிய விவர்க ளன்றி யிவர்சிலர் பரிசுங் கேளாய். 21

மிகமே னின்ற பிராணனையங் கபான னிடையே புகவிட்டங், ககமே நின்ற வபானனையப்

பிராண னிடையா குதிபண்ணி, யிகமே யிரண்டு
மியக்கமற விருப்பார் சிலர்மற் றிவர்கண்டாய்,
சகமேற் பிராணு யாமத்தின் றலைநின் றவரே
சாற்றுங்கால். 22

இன்னவர்க ளியாவர்களு மியாகமறிவாரே,
யன்னவர்க ளேயறனி றீமையின கன்றோர்,
சொன்னபரி சாலிவைதொ டங்கமுடி யாதார்க்,
கென்னபரி சாலுமிக மில்லைபய முண்டோ. 23

இப்படி யுரைத்த விந்த யாகங்க ளியாவு
முன்னஞ், செப்பிய பிரமத் தின்கட் செறித்தன
செய்யுங் காலை, யொப்பரி தாய புத்தி கருமத்தி
னுகா தூள்ளத், தப்படி யறிந்து நீயும் பாவத்தி
னகல நிற்பாய். 24

தொன்மை யாகமுன் சொன்னது றைக்கெலா
நன்மை யாமிகப் பாலது ஞானமே
பின்ம யாலறுத் தாங்கது பேணிடுந்
தன்மை யாதெனி லாங்கதுஞ் சாற்றுவாம். 25

விழியாமென வறிவாலறி வுறுவார்விழி வசமே,
வழிபாடுசெய் தவர்சேவடி மலர்சூடிட வவரே,
யொழியாதெவர் களுமியாவையு மொருநீயென

திடையென், றழியாவகை யதுவாவதொ ரறி
வேயரு ளுவரால். 26

அதனல்வரு பயன்யாதெனி லழிபாதக முத
லாய், விதாடரும் வினையாழியி னிடையேவிழு
குறுவார், திதனுகிய வறிவாகிய சிதையாமித
வையினு, விதனும்வகை கரைசேருவ ரெஙனே
யெனி லதுகேள். 27

எறியாவெரி வருகானிடை யெரியாதன வெ
வைதா, மறியாவறி வுடையோர்களு மறிவாரது
விதுபோற், குறியால்வரு குணஞானமெய் யகலே
கொள விடுமேற், பொறியால்வரு வினையானவை
பொடியாமிதொர் பொருளே. 28

தீதற் பாலாம் வினைபுரி வோருஞ் சிலநாளி,
லேதற் பாலா மறிவறி தக்கோ ரியாரென்னி,
ஞேதற் பாலார் பாலுமிவ் வுண்மைப் பொருட்
பாலுங், காதற் பாலா ரைம்புலன் வென்றோ
ரிவர்கண்டாய். 29

சொல்லரு ஞானப் பொருடெரி யாரெது சொன்னலு, மல்லவி தாமென் றையுறு வாரங் கன்பில்லா, ரில்லவ ராவா ரிகபர மில்லா ரிவர் கண்டாய், தொல்லறி வாலே யையுற வற்ளுேர் துறவுற்ளுேர். 30

அறியா மையிலே பிறந்துன்ற னகத்தே வளர்ந்த வையுறவை, நெறியா லுன்றன் ஞான மெனும் வாளால் வெட்டி யறநீக்கிக், குறியா லுன்றன் வினைவிளைத்துக் கொள்வா யென்று கூறினு னுறியார் வெண்ணெய் தொட்டுண்டிவ் வுலக முண்ட திருவாயான். 31

4. சம்பிரதாய அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 147.

---

# 5. ஞாந கர்ம அத்தியாயம்.

பூத்தருளி யொருமலராற் புவநமவை யீரே
ழுங், காத்தருளி விளையாடிக் கடைசாரங் கண்
வளருந், தீர்த்தன்மறை முறைமொழிந்த திரு
வாக்குத் தெரியாதே, பார்த்தனவ னெதிர்நின்று
சிலவிங்ஙன் பகர்வுற்றான். 1

கருமநன் றெனவுமெதிர் கழறுகின் றனைதுற
வை, யருமருந் தெனமொழிதி யவையிரண்
டினுமமல, வொருமையென் றுயாகல வுரைசெய்
கென் றனன்விசய, னிருமையின் பரிசுமிது வென
வியம் பிடுமிறைவன். 2

துறவுநன் றருவினைசெய் தொழிலுநன் றவை
துணியி, லறவுநன் றருவினைகள் விடலிலங் கவை
முயல்கை, பெறலிவின் பழுமிழவி லிடருமொன்
றிலர்பெரிது, துறவுநின் றவர்பிறர்க டியரினின்
றிடுதொழிலர். 3

பெருமையொன் றியதுறவு கருமமென் றிரு
மையினு, மருமையொன் றினையடைஞ ரவை
யிரண் டையுமுடைய, ரிருமையென் றறியுமவ
ரிவையறிந் திலரியல்பி, னொருமையென் றுணரு
மவ ரிவையுணர்ந் தவருணரில். 4

வினைமுயன் றிடவதனின் விளைதருந் துறவது கொ, டெனையடைந் திடுவரெவர் களுமிவண் செயலைவிட, நினைவருந் தகையபொரு ணெறி யறிந் திடுதலரி, தனையதந் தொழில்புரியு மவ ரடைந் திடுவரறி. 5

கவைதருங் குணமுமிகு களிதரும் புலனு மெனு, மிவைகடந் தவர்களெனை யறிவினன் றிசையுமவர், நவைதருந் தொழில்செயினு நலிவ தெங் கவரையவை, யவைகடந் தவர்கள்வினை யவைதுறந் தடைகுவதென். 6

காணுங் கேட்கு முறுமோக்குங் காலா னடக் குங் கண்வளரும், பேணுந் துறக்கு மூச்சுவிடும் பேசும் விழிக்குஞ் சிம்பிளிக்கும், பூணு மின்னும் பலவெனினும் புலன்சேர் பொறியின் புணர்ப் பென்றே, தூணுங் கிரியு மெனவொன்றுந் துளங் கான் விளங்குந் துணிவுடையோன். 7

யாரெவ் வினையு மென்பொருட்டா லியற்றிப் புயனை யிகழ்வாரவர், சேரும் வினைக ளவற்

ரேடுஞ் சேரா ரெய்துந் திறமுரைக்கிற், சார
வுடனே பிறந்திருந் துந் தண்டா மரையின் றகை
யிலையு, நீரு மெனலா யிருப்பாதி னின்றோர்க்
கொன்று நிகழாதால். 8

உடனைய புலனுனு மனனுலு முடம்பாலு, நட
மாகு மெனமுயல்வார் நாடோறு முயன்றாலும்,
விடமாகு மவ்வினையே வீடாகும் வினைப்பயனைக்,
கடனுகு மெனமுயல்வா ரதனுலே கட்டுண்பார். 9

அன்பவினை யாகுபயன் விட்டமைதி யாலே,
யொன்பதுபொய் வாசலமை யூரதனி னுள்ளே,
யின்பவுரு வாயினிதி ருப்பனியல் பாலே, முன்
பயில்வ தாம்வினைசெ யான்முயல்வி யானுல். 10

இவ்வகைய வரயசெய வியாவுமியல் பேகா,
ணவ்வகைய மாயையத னுலறிவு ரூதே, செய்
வகையன் யானெனது செய்கையிது வென்றே,
பொய்வகையி னுலழிவ தேபுலனி லாதார். 11

அறிவினு லறிகிலா தவையெலா மழியவே
செறிவினு ரறிவுவா னிரவிபோ நிகழுமா
னெறியினு லதனிலே நிலையுமா யதனிலோர்
பிறிதிலா வகையினுர் பிறவியா னதுவிலார். 12

நன்றே ஞாந வருமறையோ னன்று யக்ஞா யிறைச்சிதனைத், தின்றே யுழலு மவனியானை யாவென் றிந்தத் திறத்தெல்லா, மன்றே யென்று தாமென்று தறிவாய் நின்ற வெனையெங்கு, மொன்றே யாகக் காண்பானிவ் வுடம்போ டிருந்தே யுடம்பறுப்பான். 13

இகமே நிகழும் புலன்விளைந்த வின்பமெல்லா மறவிகந்துள், ளகமே விளையும் பேரின்ப மடைந்தார்க் கென்று மழியாதாம், புகமேய் கின்ற பலன்பொறிகள் புணர்ந்த வின்பம் போமென்றுந், தகமே விடாரா மெனவுமவை தக்கோ ரென்றுஞ் சாராரால். 14

உடம்புட னேயுள னாகியி ருந்தே
விடம்புரை காமவெ குளியின் வேகாச்
சடம்பொறை யாமைத விர்த்தவ னேநல்
விடம்புகு ஞாநியு மின்புறு வானும். 15

மெய்யறி வேவிளை யின்பம தாக
மெய்யறி வேவிளை யாடிட மாக
மெய்யறி வேயொளி யாகவு மேயோர்
மெய்யறி வேபெறு மின்பம்வி டாதார். 16

காவல்செய் தைந்துபு லன்கணி ரண்டு
மேவவி ரும்புரு வத்திடை விட்டிட்
டாவகை நின்றவ பாநபி ராண
னேவலி னின்றியி யக்கம றுத்தே. 17

அஞ்சுபொ றித்திற ஞசைய டக்கா
நெஞ்சுப யத்தொடு கோபமு நீக்கா
வெஞ்சுதி றத்தலில் யோகிகள் காணு
முஞ்சுபி றப்பிடர் யாவுமு திர்ப்பார். 18

சாதி புரியுந் தொழில்களுக்குந் தக்கோர் செய்யுந் தவங்களுக்குந், நீதி லுலக மேழினுக் குஞ் சேரு மிடமா யுள்ளவெனே, யோதி முடியும் பரிசேமெய் யுணர்ந்தார் பிறவா ரெனவுரைத்தா, ஞதி முடிவொன் றின்றியே யடையத் தானே யாய்நின்ருன். 19

5. ஞாந கர்ம அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 166.

---

## 6. யோக அத்தியாயம்.

யோகம நத்தவர் யோகம தற்கே
யேகமு தற்பொரு ளாகியி ருந்தே
நாகப ணத்திடை யேநட மாடும்
மேகம வற்கிவை மீளவி ரிப்பான் 1

செய்தவி னைப்பயன் விட்டிவை தீரா
தெய்தவி யற்றியி ருப்பவ னேகா
ணுய்யநி னைத்திடு யோகிநன் ஞாநி
வெய்யத ழற்பொலி வேள்விசெய் வாரில். 2

மேவின யாவையும் வீடுத வில்லார்
யாவர்க ளேனுநல் யோகிக ளாகா
ராவர்க ளாகில வாவற லேகா
ணேவலி லாதநல் யோகமு மையா. 3

உய்வகை யோகமொ ருப்படு வார்க்குக்
கைவரு மாசெயல் காரண மேகாண்
மெய்வகை யோகம்வி ளைந்தபின் மெய்யே
செய்வன வானவை தீமைய வேயாம். 4

புன்மைய வானபொ றித்திற னேடும்
பன்மைய வானவி னைப்பய னேடு
மன்மைய ஞனவ னப்பொழு தையா
தன்மையின் யோகம திற்றலை நின்றான். 5

தானல தியாவர்தன் மேன்மைசெய் தக்கார்
தானல தியாவர்தன் கீழ்மைச மைப்பார்
தானல தியாவர்தன் மெய்ப்பகை யாவார்
தானல தியாவர்த னக்குற வாவார். 6

இறவா வகைதன் னுள்ளத்தை யடக்கு மவ
னே தனக்கென்று, முறவா யுள்ளா னல்லாதார்
தமக்கே பகையா யொழுகுவார், துறவா தொழு
குந் துவந்துவங்க டுறந்தொன் றினையே தொடர்ந்
தவர்பான், மறவா தெழுந்த மெய்யறிவிம்
மாயை மறைக்க மறையாதால். 7

பாடும் பனுவல் பலவோதி யவற்ரு லறியும்
பயனுணர்ந்து, நீடும் புலன்க ளவைவென்று
நிலையிற் கலக்கற் கரியானு, யோடும் பொன்னு
மொருபொருள்போ லொக்கப் பார்க்கு மவனே
யிங், காடும் பெரிய மாயக்கூத் தாடா ததுகண்
டமர்ந்திருப்பான். 8

கைம்மா றில்லா தனசெய்வான் காதற்ரோ
ழன் கடும்பகைஞன், விம்மா தெவர்க்கு மொத்
திருப்பான் வேண்டப் படுவான் வேண்டாதா,

ன்ம்மா மறைநூ னெறிபுரிவா ஞகா தனவாக்
கிடுவானென், றிம்மானுடவ ரனைவருக்கு மொப்
பான் யோகியெ னப்படுவான். 9

தலையா மிந்த யோகத்தைத் தலைநின் றொழுகுந்
தன்மைகே ளுலையா வாசை யறமாற்றி யொன்
றுந் தனக்கென் றொழுகாதே, மலையார் முழைஞ்
சே முதலாக யோகங் களுக்கு வகுத்துரைத்த,
நிலையா வையினு மொன்றினில்வந் தியாது
நலியா விடத்ததிலே. 10

ஒக்கும் வகையாற் குசைபரப்பி யதன்மே
லுழையின் றோல்படுத்துத், தக்க துகிலை யதன்
மேலே விரித்துத் தானங் கதிலிருந்து, மிக்க
மநனை யறவொருக்கி வேறு செய்யும் வினைகளு
டன், றொக்க புலன்க ளவையடக்கி யுணர்வு
தூய்தா வதன்பொருட்டால். 11

தலையுங் கழுத்து முடம்புமிவை செவ்வே
தளரா தேயிருக்கு, நிலையி லிருந்து கண்களைத்
தன் மூக்கி னுதிமே லேகிறுத்தி, யலையுங் கடல்
போற் காமமுமெய்ப் பயமுந் தன்னை விட்டகல,
வுலையு மநமுள் ளடங்க வெனை யுணர்ந்தே
யிருக்கு மதுயோகம். 12

எண்டிகழும் யோகத்தை யிப்பரிசே யெப் பொழுதங், கொண்டுபயில் வார்கடைக்கா லென்னையே கூடுவரா, லுண்டியினின் மிகுவா ருண் டுறப்பார்மிக் குறங்கிடுவார், கண்டுயிலை யறத்துறப்பா ரவர்க்கிதுகை வாராதால். 13

துயிலு முணவுஞ் செய்தொழிலு மிகாமே குறைந்து தோன்றுமே, பயிலு மவனே யோகத் தைத் தன்பாற் படுக்கும் பான்மையா, னயிலும் பொறிவிட் டவ்வறிவு தன்பா லடங்கு மப் பொழுது, குயிலு மியோகந் தலைநின்று னென் றுங் கவனைக் கூறலாம். 14

இப்பரிசு பயில்கின்ற யோகிகா லிலாவிடத்து, மெய்ப்பரிசு நடுங்காத விளக்குப்போல் விளங்கு மா, லெப்பொழுதாங் கவனுணர்வி வுண்மை யிலே சென்றிசையு, மப்பொழுது பரமாநந் தத்தினையு மடையுமால். 15

யாதொன் றிந்தப் புலனறியா வளவி லின்ப மாயிருக்கும், யாதொன் றினைச்சென் றடைந்

தோர்கள் பின்னே யதனி னிரண்டாகார்,
யாதொன் றினைப்பெற் றவரிதனின் மிக்க
தொப்ப துண்டென்னார், யாதொன் றிந்த வறி
வுக்கே யறிவாய் நிற்கு மதினின்றோர். 16

வஞ்சர் வேல்கொடு மார்பினெ றியினு
மெஞ்ச வேதழன் மூடியெ ரியினு
நஞ்சி னாழ னுகந லியினு
மஞ்சி டாரது வாநந்த மாவதே. 17

போக மாய்த்துப்பு லன்களைப் போக்கறுத்
தாக மாமெய்ய றிவிடை யேயந்த
வேக மாயம நத்தினை மெல்லவே
யேக மாகவி ருத்திக லாதுநீ. 18

வாங்கி யைம்பொறி நின்றம நத்தினை
நீங்கி டாவகை நின்னுளி ருத்தியே
தீங்கி யாவையுஞ் சிந்தைசெ யாமையாம்
பாங்கி யாதது வேபயில் வாயரோ. 19

தேறு நெஞ்சின னுய்த்தன்செ யலலால்
வேறு கண்டறி யாமெய்ய றிவினு
னூறி விந்தவு டம்புடன் வேறுபெற்
றேறி நின்றவ னேயின்ப மெய்துவான். 20

இழியா திந்த யோகத்தை யென்றுந் தலைநின் றவனென்று, மழியா வின்பத் தினையின்பத் தாலே யடையு மதுநிற்க, வொழியா வெல்லா வுயிர்களுந்தன் னுள்ளே காணு மவற்றுள்ளே, கழியா தெங்குந் தானின்ற பரிசுந் தெரியக் காணுமால். 21

யாவ னொருவ னென்னையெல்லா வுயிர்க ளிடையு மென்னிடையே, மேவ வெல்லா வுயிர் களையும் வேறு காதே மெய்காண்பான், றேவர் பகைமுன் செகுத்தோனே யவன்யா தேனுஞ் செய்திடினு, மாவ வவனு இன்றேன்யா னதுநீ யேது மையுறேல். 22

இடரா னதுதா னின்பந்தான் யாவாக்கேனு மாயிடுமேற், படரா நின்ற வவைதானு முறு வான் பரம யோகியென்பான், சுடரா நின்ற வடிவேலோய் துணிநீ யென்று துழாயலங்க, லடரா நின்ற நெடுமுடியோ னருளிச் செய்ய வவனுரைப்பான். 23

எல்லா வுயிரு மொன்றாகப் பார்ப்பதியோக மெனவுரைத்தாய், மல்லார் தோளா யிதற்குநிலை

காணேன் மநமா கின்றவிது, நில்லா வியற்கைத்
தாய்ப்புலனைக் கலக்கு மதனை நிலைநிறுத்த,
லொல்லா தெனவுங் காற்றடக்கற் கொக்கு
மெனவு முணர்கின்றேன். 24

இவ்வகை விசயன் கூற மாயவ னியம்பு கின்று,
னைவகைப் புலனு னெஞ்சு மடக்குகை யரிதா
னுலு, முய்வகை யோக மியாவும் முயற்சியி னுலு
மொவ்வா, வைவகைப் புலன்செ யின்ப மனைத்
தையும் வெறுத்த லானும். 25

வெய்ய னெஞ்சம டங்கிடும் வேறிதற்
கைய மில்லையென் றேயறி யாதலாற்
பைய வேகா ணம்பதி னுன்கையுங்
கைக டந்தவர் யோகமுங் கைகண்டார். 26

என்று கூறவி சயனி யம்புவா
னின்று யோகத்தி லேநெடு நாளெலாம்
பொன்றுங் காலத்த யர்ந்துயிர் போயினுற்
சென்று நற்கதி யேயன்று சேருமோ. 27

யோக மேவவி னைகளொ ருவிஞன்
மோக மேவலின் யோகமு டிந்தில
னேக மேயிரு பாலும்வி டாகிற்க
மேக மேயென வீய்ந்துக ழியுமோ. 28

மையலி துவென்ம நத்தினின் மற்றிந்த
வையம றக்கவல் லாரில்லை நீயன்றி
யுய்யவி தனையு ரையென்ன யோகத்தின்
மெய்யனி தனைவி ரியவு ரைக்கின்றான். 29

பொய்ம்மைய டையாப்பு லனுடை மாந்தர்க,
ளிம்மையி டையும றுமையு லகத்தும்,
வெம்மைய டைகிலர் மெய்ம்மைவி டாரென்றுஞ்,
செம்மைதெ ளியின்னுஞ் செப்புதுங் கேளாய்.30

யோகமு டியாதி டையேயி றந்தவன்
யாகவி னைபல செய்தாங்கி சைந்திடுஞ்
சோகமி ஞடெய்தித் துன்பந்தொ டாரதே
போகநு கர்ந்துபல் காலங்கள் போயபின். 31

சிறந்தவ ரசர்தி ருக்குலத் தாத
லறந்தரு யோகிக டங்குலத் தாதல்
பிறந்துபெ றுவதெல் லாமெய்திப் பின்னு
மறந்தவி யோகம கிழ்வுட னெய்தும். 32

கொண்டுப யிலுங்கு ணமில ஞகிலு, முண்டுதெ ளிவென்று ணர்ந்தவி யோகந்தான், பண்டுப யின்றப யிற்சியி ஞன்றனைத், தண்டுத லின்றி முன் ருனே த லேப்படும். 33

அனையவி யோகத்தை யாற்றுவ னென்று
நினையு மவனுநெ றிபிற ழாமல்
வினைகள்ப லசெய்து வேள்விமு டித்தா
னணையுங்க திமேற்க திபெறு வானல். 34

நீடும நகிலே கின்றில ஞயினு
மோடும்வ கையால்வி டாதேயு ழன்றவன்
பாடும்பா வங்கள்ப லகடந் தாயினும்
வீடும்பெ றுமின்னும் வேறுஞ்சி லகேளாய் 35

எல்லாத்த வமுமி யற்றிநின் றேனினு
மெல்லாக்க லேகளுங் கற்றுணர்ந் தோனினுஞ்
செல்லாக்க ருமமெல் லாஞ்செய் தவனினு
நல்லான்வ லியோகி நீயிது நண்ணுவாய். 36

இருவகைய வினையறுக்கு மியோகிக ளெல் லார்களினு, மருவரிய மாத்திினையு மன்பையு மென் பால்வைக்கு, மொருவனுமே யானுவக்கப்

படுகின்ற னெனவுரைத்தா, னருவெனவன் றுரு
வெனமுன் பாராலு மறிவரியான். 37

6. யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 203.

---

## 7. மாயா ரூப அத்தியாயம்.

---

உய்ய வன்பினொடு மென்னை யேயடையு
மியோக மேபயிலும் யோகிதா, னைய மின்றி
யெனை யேய றிந்திடும தைய நீயுமறி வாயென,
வைய முண்டுமறை நீர்மை யுண்டிடையர் மாத
ருண்டிட மலர்ந்திடுஞ், செய்ய தண்பவள வாய்தி
றந்துதிரு மாது கேள்வனிவை செப்புவான். 1

மாயு மாயைமறை யாத னெஞ்சினிடை மற்
றெ னுண்மையினை வாய்மையா, லேயு மாறுறவ
றிந்து ளோர்களறி யாத தொன்றுமிலை யென்
னினு, மாயு மாநுடா நேகர் பாலொருவ
னென்னை யாயுமகம் வைத்துளா, ணுயு மாநுடா
நேகர் பாலொருவ னேய றிந்துமுடி வானையா. 2

மண்ணு நீருமெரி தீயும் வாயுவுமவ் வானி
னோடுமந புந்தியு, மெண்ணு நீர்மைகளில் யாதெ
னும்பதமு மென்னு மெட்டுமிவை யன்றியே,
பண்ணு நீர்மைகளின் மேல தாயுலகி லியாவை
யுங்கொடுப ரித்துடற், கண்ணு நீடுயிரு மாகி
யென்னுடைய மாயை நிற்பதுகை வேலினோய். 3

கண்ணி னூற்றெரிய லூற்று ணர்க்திடிலி
ரண்டி னூலும்வரு காரிய, மண்ணி னிற்பந
டப்ப வென்றபொருள் யாவு மற்றவிரு பான்மை
யே, நண்ணி நிற்பதல காத லாலுலகி னுச
வுற்பவமு நானலா, தெண்ணின் மற்றறிவ தில்லை
யெப்பொருளு மென்னி னந்நியம தில்லையால். 4

வேத மாகிநிகழ் யான லாதுலகி லென்னின்
வேறெனவி ளங்கிடும், பூத மானவைபொ றுக்க
வேறுபொறை யாள ரில்லையெது. போலெனி,
லோது மாமணிய நேக மூடுருவு கோவை நூலி
னொரு பான்மை போன்ம், பேத மானபொரு
டோறு நான்மருவி நின்ற வாறுநனி பேசுகேன். 5

திரியுமிரு கதிரினிடைத் திகழொளிநான்
திருமறையி, னரியமுத லெழுத்ததுநா னுடவர்

பா லாண்மையுநான், விரிபுனலிற் சுவையதுநான் மேதினியில் வாசமுநா, னெரியில்வரு வெம்மையு நா னுகாசத் தெழுமொலிநான். 6

ஆன்றவறி வுடையோர்பா லறிவுநா னடங் கினர்பால், வான்றவநான் வளர்நன்மை பூண் டார்பால் வண்புகழ்நான், றோன்றுமிகு திறலோர் பாற் காமமுறுத் தொல்வலிநா, னூன்றுபொரு ளனைத்தினுக்கு முயிராகி யுள்ளேனுன். 7

மூன்றுகுண வகையாகி முடிகின்ற பொருண் முழுதுந், தோன்றுவது மென்னிடையே யெனைத் தொடர்ந்தே நிற்பதுவு, மான்றவமற் றவற்றி னிடை யான்றோன்றே னவற்றினுக்குச், சான் றெனநிற் பேனல்லா லவைசார்ந்து வாழேனுன். 8

மைக்குணங்க ளெனமுனம்யான் வகுத்து நினக் குரைத்திட்ட, விக்குணங்கண் மூன்றூலு மயக்கப்பட் டறிவிழந்து, தொக்கிணங்கு கின்றவயி ரிவையெல்லாஞ் சுடர்வேலோ, யக் குணங்கள் கடந்தவெனை யறியுமோ வறியாவால்.

இவ்வகைய குணமூன்றி னியற்கைத்தா யாரா லுஞ், செய்வகைய தல்லாவென் மாயையினுற்

றிகைப்பொழிந்திங், குய்வகைய தரிதெவர்க்கு
மென்னையே யெப்பொழுது, மெய்வகையோ
டடைகின்ற மாமிலரேல் வேல்வேந்தே. 10

ஊழாலே வருமிந்த மாயையினு லேயுள்ளம்,
பாழாக வறிவிங்கே பறியுண்டு நெறிநின்றோர்,
வீழாத தீவினையே வினையாக விளைக்கின்றார்,
கீழானே ரெனையடையா ரடைவாருஞ் சிலருளர்
கேள். 11

செல்வம்வி ரும்பினர் செல்லல டைந்தோ
ரல்லல்கெ டுக்கவெ னன்புசெய் வோர்க
ணல்லத றிந்தமெய்ஞ் ஞானியிந் நால்வர்
வலலதி லென்னைவ ணங்குத வத்தோர். 12

இன்னவர் தங்களி லென்னொடும் வேறு
யுன்னலி லாமையின் ஞானியு யர்ந்தோ
னன்னவ னல்லனெ னக்கவ னுக்கே
நன்னல னுகுவ னுனுந லத்தோய். 13

ஒதரு ஞானியென் னுண்மையி னுள்ளே
யேய்தலி னுலவ னுனென வேயா
மாதலு மிங்ஙன நேகமெ னச்சொல்
காதலி றந்தப வங்களி னுலாம். 14

விரியவு ணர்ந்தவி ழுப்பொரு ளெல்லா
முரியவெ னன்றியி லாதவொ ழுக்கந்
தெரியவ றிந்தெனை யேசெறி கிற்பா
னரியன வன்பெறு தற்கயில் வேலோய். 15

மற்றவ ருந்தம நங்களில் வைத்த
பற்றதி லேபறி யுண்டறி வெல்லா
முற்றவை தந்திடு தெய்வவொ ழுக்கா
னற்றவ கின்றவை நண்ணுவர் வேலோய். 16

யாவனொ ருத்தனி யாதொரு தெய்வ
மேவவ ருச்சனை யன்பின்வி ழைப்பா
னுவல்ச விப்பறு மன்பவ னுக்கே
யாவது முற்றும ளித்திடு வேனான். 17

அளித்தவவ் வன்பொடு மத்தெய்வ நாளுங்
களித்துவ ணங்கினர் காதல வெல்லாம்
வெளிப்பட முற்றும ளித்திடு வேனா
னொளிப்பரி தாமுரு மஞ்சவு டன்றோய். 18

சிந்தையி னித்தெய்வ மெய்த்தெய்வ மென்றே
முந்தவ ருச்சனை செய்துமு டிக்கு
மந்தம நத்தர்பெ றும்பயன் வாளா
வந்தமு டைத்தத னித்தமு மையா. 19

தானந்த மிலியுவமை தரநின்று தாவரிய, வாநந்த வுருவமென வெனையொன்று மறிவதிலர், கோநந்தன் மகனரசர் குலமைந்த னிவனுமெழி, லாநந்த மிலியொருவ னிவனென்ப ரறிவிலிகள்.

மருவுற்ற பிரகிருதி யதிலுற்ற மறைவனெழி, லொருவர்க்கு மறியும்வகை வெளிநிற்ப திலையுல கில், வெருவற்ற பெருமயலின் மநமுற்று விழி மறைய, வருவற்ற வெனையுலக மறிகிற்ப திலையடைய. 21

போனவை யினிமேற் புகுதநின் றவையிப் பொழுதுபோ கின்றவை யனைத்தும், யானறிந் திருப்ப னியாவமா மென்னை யுலகின்மற் றியாவரு மறியார், மானவெஞ் சிலையாய் வேண்டல்வேண் டாமை தன்னிலே வருகுண மயக்காற், றூனமைந் திருவாய்ச் சநித்திடும் பொழுதே தந்தமெய் யறிவுசார்ந் திடலால். 22

வியக்கமேன் முயன்ற நல்வினை மாந்தர் விரும்பல ராகிமுன் செய்த, பயக்கமே வியதீ வினையெலா மறவே பற்றறப் பறிந்துமுன் போனற், றுயக்கமே புரியுஞ் சோகமே முதலாந்

துவந்துவ குணங்களிற் றொடர்ந்த, மயக்கமே வலாா யொழுக்கமே நிலைநின் றென்னையே மநத் திடை வைப்பார். 23

எறிவரும் பிணிமூப் பிறப்பொடு பிறப்பென் றிவைகெடுத் திடல்பொருட் டாகக், குறிவரும் பரிசு நினைத்துமற் றெனையே கூடுதன் மேவிநின் றவர்க, ளறிவரும் பிரமந் தன்னையு மதனை யறிவு மெய் யறிவையு மறிவி, னெறிவருங் கரும மனைத் தையு மறிவ ரறிந்தபின் னிகழ்வதுங் கேளாய். 24

தேடும் பழைய வதிபூத மதிதெய் வத்தோ டதியெச்சங், கூடும் பரிசு நின்றவெனை யறிவா ரிந்தப் புழுக்கூடு, வீடும் பொழுது மெனை மெய்யே யறிவா ரென்றான் யாம்வெவ்வே, றூடும் பழைய மாயக்கூத் தாட்டு விக்கு மம் மாயன். 25

7. மாயா நப அத்தியாயம் முற்றிற்று.
ஆகச் செய்யுள் 228.

## 8. எழு வகை வினை உரைத்த அத்தியாயம்.

அடைய ஞாலத்தை யார்த்ததி லார்ப்புண
திடையர் தாம்பிடை யார்ப்பவி ருப்பவ
னுடைய ஞகமுன் போதின வேகொடவ்
விடைய ஞனவன் மீளவி யம்புவான் 1

ஆயபிர மத்தொடத் தியாத்மமமை கரும
மேயவதி பூதமதி தெய்வமதி யெச்சங்
காயமதி லுள்ள ரி சுங்கெழுமு காயம்
வீயலுறு போழ்திலுனை மெயதெளிய மாறும். 2

விரியவுரை செய்தருள வேண்டுமென மீண்டவ்
வரியரவி லேதுயிலு மாயவனு ரைப்பா
னரியதழி யாமையத னைத்தினுமு ரைக்கிற்
பெரியதுமொ ழிந்தபிர மம்பிறவு நீகேள். 3

அந்தக் காரணங் களினின்ற வறிவத் தியாத்ம மாவதுதா, னிந்தப் பிறவி தனையாக்கு மியாகங் கரும மென்பதுதா, னந்தற் கமைந்த வுடம் பதனை நானென் கின்ற ததிபூதம், பந்தப் படுமிவ் வுடற்கமைந்த பருடன் றெய்வ மெனப்படுவான்.

எஞ்சு தலையி லதியெச்ச மாகின் றேனு னிறக்குங்கா, னெஞ்சு கவரு நெறிகளெலா மடைத்து நினையப் படுவதுநா, னஞ்சு புலனும்

பொறியைந்து மடக்கி யறிவென் பாலதாய்த், திஞ்சு மவர்க ளெனையடைவா ரெவ்வா றென்னிற் சொல்லக்கேள். 5

இந்த வுடலம் விடும்பொழுதி யாவ னியாதொன் றினைநினைந்தா, னந்த வளவே யந்தப்பா வனையா லதனை யடையுமா, லென்ற னியல்பே யெப்பொழுது மிதயத் திடைகொண் டென்பாலாஞ், சிந்தை யொடும்வா ளமர் தொடங்கி லதனா லெனையே சேருதியால். 6

நல்ல கரும யோகத்து ஞான யோக மதுதனிலுஞ், செல்லு மனனை மிகச்செலுத்திப் பிறிதொன் றினையுஞ் சோராதார், சொல்ல வரிய கதிரவன்மண் டலம்போற் றோன்றுந் தொல்லோனை, யல்ல தடையா ரவனியற்கை யடையும் பரிசை யறையகேள். 7

எல்லாப் பொருளு மறிவானை யெல்லாப் பொருட்கும் பழையானை, யெல்லா ரையுந்தன் னிலைநிறுத்து வானை யிரம்பச் சிறியானை, யெல்லாப் பயனு மீவானை யார்க்கு நினைதற் கரியானை, யெல்லா விடத்து மிருடீர்த்த விள வெங் கதிர்போ லெழுவானை. 8

மருவற் குரிய வன்புடையார் மயங்கா யோக மாத்தாலே, புருவத் திடையே தம்முடைய புரைதீ ருயிரைப் புகநிறுத்தி, யுருவத் தினை விட் டிடிலிந்த யோகத் தாலே யவனேடும், பொருவப் படுவ ரபபொருண்மே லின்னம் புகல்வன் பொருவேலோய். 9

யாதொன்றை மறைதெரிந்தோ ரழியாதென் றெடுத்துரைப்பர், யாதொன்றை யவாவறுத்த யோகிகடா மெய்திடுவர், யாதொன்றை யுற னினைந்தோர் காமமுத வியவிழப்பர், யா தொன்றப் பரம்பொருளா மதைச்சுருங்க வியம்பு வன்கேள். 10

அஞ்சுபலன் வழியவைய டைத்தயலு ருதே
நெஞ்சுதனை யிதயகம லத்திடைநி றுத்தி
யெஞ்சுதவி லுயிர்வளியை யுச்சியினி லேற்றி
யுஞ்சுபுகு நெறியிதென யோகுடனி ருந்தே. 11

ஓதலினி யற்கையிஞெ டோமெனுமெ ழுத்தை
வாய்தனிலு ரைக்கமர மானதுத னித்தே
மேதகுமெ னைத்தெளிய வாவிதனை விட்டோர்
வீதலினி யற்கையெனை யேயடைவர் மிக்கோய்.

இப்பரிசி ஞண்டொரறு திங்களள வென்ற,
தெப்பொழுது மென்றனியல் பேசினைய லுற்
றார், கைப்படுவ னியானெனியல் கைப்படவி
ருந்தோர், பொய்ப்பிறவி யானதும றித்தடைதல்
பூணர். 13

செய்யாமுன் சார்ந்தவினை தீர்ந்த போதே
திசைமுகனு டணைந்தோருந் திரிய மீள்வர்,
மெய்யாக வினையடையு மவரே கண்டாய்
மீளாத நெறியடைந்தார் வேறு கூறி, லையா
கேள் சதுர்யுக மீரைஞ் ஞூறு மொருபகலா
மாண்டொருநா றயற்கு முள்ள, தெய்யாதாங்
கவருக்கோர் பகலிற் றோன்றி யிராவிறக்குந்
தன்மைத்தாம் யோனி யெல்லாம். 14

நெறியில்வரு வியத்தமுட னவ்வியத்தங்
கூடாத நிலைமை யென்றும், பொறியழியு
மாக்கைதனி லழியாத புலமென்னும் புதிதன்
றென்று, மறிவரிய நெறியென்று மழியாத
பொருளென்று மடைந்தோர் பின்னைப், பிறி
வரிய நெறியென்றும் பெரியோர்கள் பேசுவ
தென் பெற்றி கண்டாய். 15

எப்பொருளு மியாவன்றன் னுள்ளடங்கிற் றெங்குமாய் நிற்கின் றூன்யா, ரப்பரம பரம் பொருளா யுள்ளவனை யன்பாலே யடைவ தையா, வெப்பரிசு வருங்காலத் திறந்தார்கள் பிறவாதார் பிறப்ப ரென்னி, லப்பரிசு வருங் காலத் தினையறிய வுரைக்கின்றே னதனைக் கேட்பாய். 16

அங்கியொளி பகல்வெண்மை யாங்கால தேவதைக ளவர்க ளோடுந், தங்குமறு திங்க ளிடை யுத்தரா யணஞ்சார்வார் மறுத்திஞ் சாரார், கங்குல்புகை கறுப்பென்னுங் காலதே வதையடைந்து பிறக்குங் கண்டா, யெங்குமறு திங்களிடைத் தெக்கணா யநத்திறந்த யோகி யென்பான். 17

எத மான தின்றியிவ் விரண்டு மாயுமி யோகி தான், வேத மோதி வேள்விதாந மெய்த்த வங்கள் செய்துளா, ரேது வாய நற்பதங்க

ளெய்தி வீடு மெய்துவா, ஞத லாலவ் வியோ
மேசெய் யென்று மாய ஞேதிஞன். 18

## 8. எழு வகை வினு உரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 246.

---

## 9. மாயா விகார அத்தியாயம்.

ஈர்வன்றுயர் களையும்பத மீதன்றுகொ லெனவே, யார்வஞ்செயும் விசயன் கொளு மாசங்கையை யறியாக், கார்வந்தென வவனன்புறு களிகொண்டெழ வெளியே, தேர்வெண்பரி குசைகொண்டெழு பாகன்றிரு மொழிவான். 1

அறையும்பொருள் களின்முன்பநு பவமொன்றிய வதனை, மறையும்பொருள் களின்முன்பற மறையும்பொரு ளினைமே, லிறையுந்துய ரது வின்றிமு னியைகின்றதை யிசைவோ, டுறையுந்துக ளறின்றதை மொழிகின்றன னுணர்நீ. 2

அழிவொன்றில தறனென்றிய தரிதன்றிய ததன்மேல், வழிவந்தமெய் யறிவன்பில ரெனை யெங்கணு மருவா, திழிதந்திடு சநநங்கொடு மரணங்கொடு மிங்ங, னுழிதந்திக பரமொன்றிய வுருவங்களி லுழல்வார். 3

யாரு மறியப் படாமையதே யெனக்கு வடிவா யுடையனா, ஞரு முலகங் களையடையப் பரப்பி நிற்ப ஞதலினற், சாரு முலகிற் சராசரங்க ளெனையே யவற்றை யான்சாரேன், சேரும் பரிசு நின்றுற்போற் றெளியா தார்க்குத் திகழு மால். 4

முன்னே யொன்றுங் கலவாதியா னிற்பன் முழுது மாய்நின்ற, வன்னேர் மையினு லுலக மெனே டங்கங் கலவா தாதலினு, லென்னே யென்ற னியற்கையினைப் பாரா யிந்தச் சக மெல்லா, மன்னே யென்றன் மாயைபெறு மாங்கா ரமுனுய்த் தருவன்காண். 5

என்னுருவிற் புணராதே யென்னைவிடத் தோன்றுதே, மன்னுயிர்க ளெனையென்றுஞ் சார்ந்துவரும் வகைகேட்கி, லுன்னுமிட மெங்கு

நிறைந் தொளிர்கின்ற வானெங்குந், துன்னி
யற்கை செறிகாற்றின் றேற்றம்போன்ஞ் சுடர்
வேலோய். 6

ஈண்டுபொரு ளிவையனைத்து மிறக்குங்கா
லென்னிடையே, மாண்டுபுகும் பிறக்குநாண்
மற்றவைதாம் வரன்முறையே, மீண்டுபுறப் படு
மென்ன லாதலினன் மெய்பார்க்கில், யாண்டு
முயிர் படைத்துக்காத் தழிக்கின்றேன் யானே
காண். 7

விலங்க லனையாய் பலங்களுடன் வேண்டல்
வேண்டா மையைவிட்டுச், சலங்கொள் வினைக
ளவைசெய்வ னதனு லென்னை யவைசாரா,
வுலண்டு வாயா னூற்றந்த நூலாற் கட்டுண்
பதுபோலப், பலங்க ணினைவா ரதனாலே
கட்டுண் டாங்கே பட்டுழப்பார். 8

ஊர்வன நிற்ப வாக வுலகையுண் டாக்கு
மென்னை, யேர்பெற வறியா தார்தா மக
னென்றே யிகழா நிற்பர், வேறென நெஞ்சத்
தாசை வினைகளை மிடையச் செய்வா, ராரெனி
லவர்க டாமு மரக்கரோ டசுராரவர். 9

அறிவிஞ லென்னை யாக வறிந்துகொண் டமைதி யாலே, பொறிவழி யடைத்தெப் போது மென்னையே போற்றி செய்து, நெறி யிஞல் வழுத்தி வாயா லென்னையே நினைந்து நெஞ்சாற், செறிதரு மிவர்கள் கண்டாய் தேவரிற் றெரியப் பட்டார். 10

காலத் தாலும் பொருளிடத்துங் கணித்தற் கரிதா கியவென்னை, ஞாலத் தார்கள் புகழ்வரிய ஞாந யாகங் களிஞலே, கோலத் தால்வே ருகவுமெய்க் குறியா லொன்ரு கவுங்கொண்டு, சாலத் தாழ்வா ரவருடைய தன்மை யினைநான் சாற்றக்கேள். 11

வேதமொழி வேள்விமிகு வேள்விபிதி ரர்க்கே
யீதலுறும் வேள்வியெரி நெய்சருவி வற்ருற்
காதலுறு வோர்கள்புரி காரியமி தெல்லா
நாதமுத லாயபொரு ளாயவையு நானே. 12

ஆயிலுல கங்களைய ளித்தொளிவ ளர்க்குந், தாயினெடு தந்தையவர் தந்தைதலை களுநான், போயினவி னைப்பயன ளித்தல்புரி வேஞ, னேயுமறை மூன்றினுட னேமெனுமெ முத்தி யான். 13

எல்லார்க்குங் கதியுநா னிருவினைப்பா ரகனுநா, னெல்லார்க்குந் தலைவனு னெப்பொருட்குஞ் சான்றுநா, னெல்லார்க்கு முறைவிடநா னியார்க்குமிடர் தீர்ப்பேனு, னெல்லார்க்கு நல்லேனு னெப்பொருட்கும் வித்துநான். 14

தாங்கிய நீரை யெல்லா மிரவியாய்த் தலத்து நின்று, வாங்குகின் றேனு மீள மழைகளாக் கொடுக்கின் றேனு, மீங்குமெய் யுணரில் யானே யாதலா வியாதொன் றேனு, மாகருச் சனை செய் கின்று ரென்னையே யருச்சிக் கின்றுர். 15

ஞானமா யொன்றாய் நின்ற வென்னையே நானா வாகப், போனதீ வினையின் மாந்தர் வேள்வியாற் பூசித் தத்தால், வானமா முலக மேறி வாழ்ந்துமண் ணிடையே வீழ்ந்திட், டீனமா மாசை யாலே யிறப்பது பிறப்ப தாவார். 16

மின்னையேய் வேலோ யென்னை மேவுவார் வேண்டிற் றெல்லாம், பின்னையே யென்னு தன்றே யளித்தவை காப்பேன் வானோர், மன்னையே முதலாந் தெய்வம் வணங்குகின்

ளுரு மற்றென், றன்னையே வணங்கு கின்றார்
தாமறி யாத தேகாண். 17

தேவரை யடைந்தோர் தேவ ராவர்கள்
பிதிர்க டம்மை, மேவவே யடைந்தோ ரந்தப்
பிதிர்களாய் விளங்கா நிற்பார், யாவர்க
ளியாவர் பாலா ரவர்களே யாவ ரென்று,
லாவவென் னடைந்தார் யானே யாவதற் கைய
முண்டோ. 18

போதல ரிலைகாய் நீரே பெற்றதே கொண்டு
போற்றிக், காதலாற் றூய வன்பர் தந்ததே
களித்துக் கொள்வ, னுதலா லீவ னோற்ப
வுண்பவென் றிவைக ளேகொண், டீதெலா
மெனக்காய்த் தந்தா லென்னையே யெய்த
லாமால். 19

எப்பொரு டனக்கு மியானேத் திருத்தலா
லெனக்கி யாரு, மொப்பர்க ளினிய ரின்னு
தாரென வொருவ ரில்லை, யிப்படி யறியு
மன்பர் பக்கலே யானு நிற்ப, னப்படி யவரு
மென்பா லங்ஙன மமர்ந்து நிற்பார். 20

ஊனேயே முதலா யென்பா லொருக்கியென் னுணர்வார் நாளு, நானேயே விட்டுத் தீமை புரியினு மவர்க னல்லா, ரேனேயேய் புயத்தா யென்றுங் கேடிலா வின்ப மல்லா, தானேயே யொருகே டில்லை யெங்கணு மவருக் கைய. 21

வணிகரு மற்ற வேளான் மாந்தரு மகளிர் தாமும், பணிவொடு மென்னைப் பேணிப் பற்றறுத் திடுவ ரென்று, லணிமுடி யரசர் மேன்மை யந்தண ரடைவ ராகிற், றணிவரும் பிறவி தீரச் சாற்றவேண் டுவது முண்டோ. 22

மின்னேயே யனைய வாழ்வி னின்றநீ விருப்பி ஞேடு, மென்னேயே வணங்கி யென்று மென் னேயே நினைதி யாகி, லென்னேயே யடைதி யென்றே யியம்பினு னிலங்கு வாட்கட், பின்னே யேய் முறுவ லோடும் பேய்முலை யுண்ட மெம் மான். 23

## 9. மாயா விகார அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 269.

# 10. விபூதி யோக அத்தியாயம்.

அரிய வெனது நிலைமையைமுன் பளவே
சொன்னே னதுகேட்டே, யுரிய மநனிற்
களிகூர வுவவா நின்ற வுனக்கதனை, விரிய
மொழிவன் கேளென்று வேதத் தலைக்கே
வீற்றிருக்குங், கரிய முகிலான் செவ்வாயாற்
காதல் கூரக் கட்டுரைப்பான். 1

தேவர்களு முனிவர்களு மசுரர்களுஞ் சித்தர்
களும், யாவர்களு மறியாரென் பெருமையை
யென் பழைமையினாற், சாவகையும் பிறப்புமிலா
வெனையறியத் தகுவாரப், பாவவினை யறவிட்டுப்
பாகதியை யடைகிற்பார். 2

புத்திபொறை தவஞாநம் புகழ்பழிதீக் கொலை
யொழிவு, சத்தியநற் சமைதமைநற் செபந்
தாநஞ் சாவுபிறப், பத்திகொடு நிறைவின்ப
மிடரஞ்ச லஞ்சாமை, யித்தனையுந் தோன்றுவ
தென் னிடைநின்றே யெனத்தெளிவாய். 3

எனைத்துவி தத்தத வத்தெழு வோரு
மனைத்தையு நிற்பந டப்பன வாக
வனைத்தம நுக்களு நால்வரு மென்ற
னினைப்பிலு தித்தன ரென்பது நேர்வாய். 4

இப்பரி சென்னைய றிந்தவ் ரென்பால்
வைப்பர்கள் சிந்தையை மன்னுயி ரோடு
மப்பரி சேயறி யாரையு மாங்கே
யுய்ப்பரு ளைப்பரு வப்பர்க ளிப்பார். 5

நிரந்தா மிப்பரி சென்னைநி னைப்பார்க்
கரந்தைகெ டுத்தெனை யாயும நத்தைப்
புரந்துகொ டுத்தவர் தேர்பொரு ளாயே
வரங்களு முற்றவ ளித்தவ ரத்தால். 6

மற்றவர் நெஞ்சின்ம யக்கிரு ளெல்லா
மற்றமின் ஞானவி ளக்கொளி யாலே
பற்றறு விபபனெ னப்பழை யோன்முன்
கொற்றவன் மற்றிது கூறவ லித்தான். 7

பேத முடைய பிறப்பகன்றுன் பிறழா நிரைவு பெருஞ்செல்வ, மாதி தேவன் பரப்பிரம மழிவில் லாதா ரணங்க, ளோத வரிய வுத்த மனிங் கெல்லா முயிர்ப்பா னெனவன்னை, நீதி முனிவ ருரைத்தவெலா நீயே யருளிச் செய் தனையால். 8

எல்லாப் பொருட்குந் தனிவித்தே யெல்லாப் பொருட்கு மீசனே, நல்லார் புகழுந் தேவர் கட்கு மூலகங் களுக்கு நாயகனே, யல்லா லறிவா ராரென்னை யானே யறிவ னென வருளுஞ், சொல்லா லுளவப் பொருளெல்லா மெய்யே யானுந் துணிந்தொழிந்தேன். 9

மெய்வகைய வுலகினிடை வேறுவே றுய்நிற்ப, தெவ்வகைய வுருவமுனைச் சார்ந்ததென வறி கில்லே, னவ்வகைய வெப்பொருளு மொளியாம லடியேனுக், குய்வகைய நெறியாக வுரைத்தரு ளென் றேயுரைப்பான். 10

பருகாநின் றேற்குனது திருவாக்காம் பாா மிருத, மொருகாலு மார்கின்ற திலையடியேற் குறையென்ன, வருகால நிகழ்காலஞ் செல்கால மென்றிவற்றிற், பெருகாத குறையாத பெரு மாயன் பேசுவான். 11

இறந்தவென் விபூதிக்கோ ரெல்லை யின்மையிற், பிறந்தன முடிவுறப் பேச வொண்ணுமோ, வறந் தரு மநத்தினு யவற்றி லேசில, சிறந்தன கூறுவ னென்று செப்புவான். 12

ஓதிற் பெருகும் பூதங்கட் கெல்லா மிதயத் துள்ளுயிர்நான், பேதித் திடுமிப் பொருட்கெல் லாம் பிறப்பு நிலைகே டாவேனு, ஞதித் தியரில் விட்டுணுநான் மருத்து வரின்ம ரீசியுநான், சோதிக் கதிரி லொளிரிரவி யென்று சொல்லப் படுவேனன். 13

சந்திரனு ஞண்மீனிற் சாமநான் மறைகளினி, லிந்திரனன் றேவர்களி லிந்திரியங் களின்மநநா, னெந்திரமா முருவுகளிற் சேதநநா னுருத்திரரின், மந்திரமாஞ் சங்கரனு னியக்கரில்வைச் சிர வணனன். 14

மலைகளின்மா மேருவுநான் வசுக்களிற்பா வகனுமியான், றலைவர்களி லறுமுகனன் சல நிலையிற் சாகரநா, னிலயமிலா யாகத்திற் செபயாக மாவேனு, னிலையுடைய வெனுமிவற்றி விமவானய் நின்றேனன். 15

பெருமுனியிற் பிருகுவநான் பரோகிதரிற் பீதக னன், மருவியவாக் கவற்றேநான் மரங்களிலே யாசதநான், பொருவரிய நாரதனன் புத்தேண் மா முனிவர்களிற், றிருவியல்கந் தருவர்களிற் சித்திரத்தே ரவனுமியான். 16

சித்தர்களிற் கபிலமுனி தேசிகனிற் கடற் பிறந்த, வுத்தமமாம் புரவியெனு முச்சைச்சி ரவனானே, யத்தமுடை விலங்குகளில் யானயிரா வதமாவேன், வித்தகமா நுடப்பிறப்பில் வேல் வேந்த ராவேனுன். 17

படைகளில் வச்சிரம் பாம்பில் வாசுகி
யடைவரு மநந்தனன் ஞகர் தங்களிற்
கொடைபயில் சுரபிகோ குலத்திற் கூறிய
வடைவொடு மிவையெலா மியானென் றேயறி.

வருணனு மியமனும் வரைவில் காமமும்
பெருமைசெய் யசுரரிற் பிரக லாதனு
மிருமையி னெண்ணலிற் காலம் யானெனச்
செருமவி தோளினுய் தெளியத் தேறுவாய். 19

பொராவருங் கருடனுன் புள்ளின் மாக்களில், விராவரு மடஙகனுன் வாயு வேகநா, னிராமனு னெறிபடை வீரர் தங்களிற், காராமுநான் மீன் களி லாற்றிற் கங்கைநான். 20

மிக்க சொற்றெுகையில் வாத நானறிய விச்சை யிற்பிரம விச்சைநா, னக்க ரங்களில காா நானழிவில் கால நான துவு மன்றியே, தக்க

தொந்துவச மாச நானிருவி னேப்ப யன்கடரு வேனுநான், மிக்க மன்னுயிர்க ளேக்கொல் வேனுமவை யுற்ப வஞ்செயு வேனுநான். 21

பெண்க ளிற்புகழ்தி ருசொன் மேதை பொறை திண்மை பேசுமினை வென்னவே, யெண்ப குத்தவெழு வோரு நானிருது வாறில் வந்தவிள வேனிலு, னண்ப நற்பெரிய சாம நானுரிய சாம மேழினுந லத்தினன், மண்க ளிப்பவரு திங்க ளிற்புகழ நிறை மார்கழியு மற்றுநான். 22

கல்லாருந் தோளுடையாய் கவிகளிற்கா யத்திரிநான், றெல்லாயங் களிற்சூது திணிவார் பாற் றுணிவதுநான், வெல்வார்பால் வெற்றியு நான் மிகுதிறலோர் பாற்றிறநா, னல்லார்பா னன்மையுநான் ஞானிகள்பான் ஞானமுநான். 23

கண்ணனுநா னியாதவரிற் கவிகளிலே யுசநா நான், றண்ணளிசேர் பாண்டவரிற் றநஞ்சயனு னுகின்றேன், விண்ணுலவு முனிவர்களில் வேத வியா தனுநானே, யெண்ணரிய மறைவுகளி லியம்பாமை யாவேனுன். 24

இரும்புவாக மனைத்தினுக்கும் வித்தநா னெனைப்போக்கி யாது மில்லை, வருந்தினுமென் பெருமைக்கு வரம்புரைக்க முடியாது வகுத்துச் சொன்னேன், பெருந்திருவை யுடையனமெய்ப் பெருமுயற்சி யனவென்று பேசு மிந்த, வரும் பொருள்க ளனைத்துமென தொளியினால் வரு வனவென் றறிதி நீயும். 26

பலவினி யுரைத்தென் னிந்தப் பல்லுயி ரனைத்து மெல்லா, வுலகமு மொடுங்கி நிற்ப தென்னிலோ ரிடத்தி னுள்ளே, கலவல னவற் றேடென்றூன் கஞ்சனு ருயிர்போய்த் துஞ்ச, வலைகடல் வளரா தேபேர்ந் தாயர்பால் வளர்ந்த பெம்மான். 26

## 10. விபூதி யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 295.

---

## 11. விசுவ ரூப அத்தியாயம்.

சுருளார் இன்ற துழாய்முடியாய் சொல்லு மநமுந் தொடர்வரியா, யுருளார் சகட மிறவுதைத்

தா யுயிர்கட் கெல்லா முள்ளுயிரே, யிருளார்
பவத்தே கிடந்துழைக்கு மென்பா லிரங்கி
நீயிசைத்த, வருளா ரமுதென் செவிகளா லாரப்
பருகி யயர்வொழிந்தேன். 1

தெரியா வகைநீ யெங்குமாய் நின்ற வந்தத்
திருக்கோல, மரியாய் மெய்யே யடியேற்குங்
காண லாமோ வெனவன்பாற், பரியா நின்ற
சிந்தையொடும் பார்த்தன் வினவப் பழமறை
தேர், கரியா னவனுக் கப்பரிசே காட்டவேண்
டிக் கட்டுரைப்பான். 2

எண்ணிலி யற்கைய தெண்ணினி றத்தது
பண்ணியொ ருத்தர்ப டைத்தறி யாதது
விண்ணினி யற்கைசு ருங்கவி ரிந்தது
கண்ணினை ளப்பரி தாயது காணாய். 3

மருத்துவர் சூரிய ரட்டவ சுக்க
ளுருத்திர ரென்னிடை யேயுளர் யாரு
மருத்திசெ யற்புத மாயவ நேகங்
கருத்தற வென்னிடை யேயுள காணாய். 4

என்றரு ளிச்செய்த வன்கணி ரண்டு
ளன்றறி யாவென ஞானம ளித்திட்

டன்றவ னுக்கருள் செய்வகை யேயாய்
நின்றவ ருக்கறி யாவகை நின்றான். 5

அங்கு மால்கொள் கோல மிங்க ளந்து கூற
லாகுமோ. கொங்குண் மாலை யாடை சாந்து
கொண்ட கோல மேவியே, யெங்கு மாகி யெல்லை
யின்றி யெண்ணில் கோடி பல்கதிர், மங்குல்
வானில் வந்து தித்த தொக்கு மற்ற தன்கணே. 6

எய்வகைய தாள்களொடு தோள்களும நேகஞ்
சாய்பெறவ ணிந்தவணி தானுமுன நேகம்
வாய்களும நேகமொளிர் வாண்முகம நேக
மாயுதம நேகமெழு மற்புதம நேகம். 7

அவ்வகைய மாயனமர் கோலமத னுள்ளே
யெவ்வகைய வாயபொரு ளியாவுமெதிர் காணா
வுய்வகைய னாயினனெ னாவுவகை கூறச்
செய்வதறி யாவிசய னிவ்வகைசெய் தானால் 8

மண்ணுறவ ணங்குமயிர்க் குச்சுடனி ரைக்குங்
கண்ணுமந முங்கரைய நின்றுகைமு கிழ்த்தே
யெண்ணுமுல கங்களையு மியாவரையு மேனாட்
பண்ணுமவன் முன்புசில நின்றுபகர் வுற்றான். 9

தேவரும் வணங்கு தேவ நின்றிருக் கோலத் துள்ளே, யாவரு மெல்லை காணுப் பொரு ளெலா மிசையக் கண்டேன், மூவரின் முதற்புத் தேனை முநிவர்க ளோடுங் கண்டேன், மேவரு நாகங் கண்டேன் விண்ணவர் குழாமுங் கண்டேன். 10

கண்களும் வயிறுந் தோளு முகங்களுங் கருதி நோக்கி, லெண்பல வுடைய வாய வுருவுக ளநேகங் கண்டேன், றண்கதிர் முடியுந் தண்டுஞ் சக்கரப் படையு மேந்தி, யொண்கதிர் கனலோ டொன்று யனையநின் னுருவி னுள்ளே. 11

இந்தவுரு வென்னவுரு வென்றறிய இல்லே
னந்தமறி யேனடுவு மாதியும னைத்து
நந்தலறி யாததனை நான்மறையு நாடித்
தந்தபொரு ளாயதனை மாயைதரு சார்வை. 12

என்றுமுள தாயதையி யற்றரும மெல்லா, நின்றுபிற ழாவகைநி றுத்துநெறி வாழ்வைச், சென்றுகுறை யாததனை யென்பழைய தேவைக், கன்றுதொட ராப்பரிசு நின்றெனெதிர் கண் டேன். 13

வலந்தருதி றத்தொடுவ ருங்கதிரி ரண்டே, யலர்ந்தெழவி ழிப்பதைய டுங்கனனெ ருப்பை, மலர்ந்தெழுமு கத்ததைம யங்கவுல கெங்குங், கலந்துசுட லுற்றதைவி யந்தெனெதிர் கண்டேன். 14

நிலத்தினொடு வானுறநி மிர்ந்துதிசை நேர்போய், விலக்கமற நீயுனது மேனியைவி ரித்தா, லலக்கணடை யாதவர்க ளாரடைய வையா, கலக்கமுறு கின்றவுல கங்களிவை காணாய். 15

வணங்கவிமை யோர்களரு மாதவர்வ ழுத்தக், கணங்கொடுவி யந்துபுகழ் சித்தர்தொகை கண்டே, னுணங்குமுயிர்த் தானவர்கள் கந்தருவருள்ளோ, ரிணங்கியின ரென்றறிகி லாரையெதிர் கண்டேன். 16

வானடைய விம்மிவரு ணம்பலவு டைத்தாய்ப் பேய்நடைய வாயபிறை போலெயிறு பேழ்வாய் தானுடைய வாயபன்மு கம்பலத ழைக்கும் யானடைய லாம்வகைய தன்றிவ்வுரு வெந்தாய்,

தஞ்சமிவ் வுலகுக் கெல்லா மாய்நின்ற தன்மை கண்டே, னுஞ்சின னெனினு மற்றுன் னுருவுறக் காணக் காண, நெஞ்சமு நடுங்கா நிற்க நிலையிலை திசையுங் காணே, னஞ்சலென் றருள வேண்டு மகிலமு மாய வெந்தாய். 18

நூற்றுவர் தாமுந் தங்கள் சேனையு மவர்கட் காக, வேற்றெதி ராசர் தாமு மென்படை தாமு முன்றன், கூற்றுற ழெயிற்றிற் பட்டுக் குறையுட லாகி நின்று, காற்றுறு தீயி னன்ன முகங்களில் வீழக கண்டேன். 19

ஓதரு நதிக ளெல்லாங் கடலடைந் தாற் போ லுன்னிற், போதரு பொருள்க ளெல்லா நின்னுளே புகுதக் கண்டேன், தீதனில் விட்டில் பாய்ந்தாற் போலநின் முகங்க ளுள்ளே, மாதவ வுயிர்க ளெல்லாம் வீழ்ந்துமாய் குநவுங் கண் டேன். 20

ஒளியினு லுலக மெல்லா மொழித்தவை யூண்போ தாமல், வெளியினு நீட்டி நீட்டி வெறுஞ் சுவை கொள்ளா நின்ருய், தெளிகிலே னுன்னை யுன்றன் செய்கையுந் தெரிக்க மாட்

டே, னளியினு லடியேற்குன்னை யுள்ளவா
றருளிச் செய்வாய். 21

என்றவன் வணங்கிக் கேட்ப யாவுமா யெல்லை
யின்றி, நின்றவ னுரைப்பா னுன்னை யொழியநின்
றவரை யெல்லாங், கொன்றுயிர் பருக லுற்றேன்
கடையுகங் குறுக லுற்ற, வன்றுல கடைய
மாய்க்கு மவனியா னறிநீ யையா. 22

இறந்தாரே யெனக்கருதிங் கிவர்களெலா
மென்னுலே, யறந்தானு மதுநீயே யாங்கவரைக்
கொன்றுயேற், சிறந்தாய வரசினையுஞ் செயத்தி
னில்வாழ் திருவினையும், பிறந்தார்கள் பெறாத
பெரும் புகழினையும் பேணென்றுன். 23

இவ்வகை மொழியக் கேட்ட விசயனென்
செய்தா னென்னிற், கைதலை மிசைய வாகக்
கட்டுரை குழறக் கண்ணீர், பையவே நெஞ்சிற்
சோரப் பயத்தொடும் பரிவி னேடு, மைவரை
யெடுத்த வள்ளல் பெருமையை வழுத்த
லுற்றுன். 24

ஞானமுத லிந்தியங்க ளனைத்திற்கு நாயகனே, யூனவினைத் தலையறுப்பா யுன்னுடைய புகழ் கேட்கில், வானவருஞ் சித்தர்களு மனங்களித்து மகிழ்வெய்தத், தானவரு மரக்கர்களுஞ் சாய் துயரப் படுவர்களால். 25

கையும் பதமுந் திருவாயுங் கண்ணுஞ் செய்ய கருமுகிலே, யையையம் பொருளு மறிவரியா யயனுர் தாயே யந்தமிலாய், மெய்யும் பொய்யு மில்லாதா யெல்லா மாகி விரிந்தாயே, யுய்யும் பரிசு நினைந்தவர்க ளுன்னை வணங்கா தவருள ரோ. 26

ஆதி தேவ னுவாய்நீ யாக்கைக் கமைந்த வாருயிர்நீ, யேது மறியப் படாதவனீ யெல்லாங் கடைக்காற் புகலிடநீ, யோதி னுணர்கின் றுயுநீ யுணர்வா லுணரப் படும்பொருணீ, நீதி யமனு யழிப்பாய்நீ நீருங் காற்று மாவாய்நீ. 27

எயும் பரிசிவ் வுலகெல்லா மென்றும் பிறப்பித் திடுகின்ற, தாயும் பிதாவு மாவாய்நீ தந்தை தந்தை தாதையுநீ, யாயும் படியே யல்லாத

வையா வுன்னை யடியேனென், மாயும் பிறவித் துயர்தீர நூறு யிரக்கால் வணங்கினேன். 28

என்பே ரிடும்பை கெடும்வண்ண மின்னந் தொழுதே னெந்தாயுன், முன்பே தொழுதே னுன்னுடைய பின்பே முறையால் வணங்கினனு, லன்பே யடியே னுருயிரே யகலா விந்தப் பெரும் பிறவி, வன்பே கெடவுன் றனையெங்கு மறித்து மறித்தும் வணங்கினனே. 29

தேவதேவ நின்னில்வேறு தேவரேது செய் திடும், பாவமேத றங்களேது பற்றியாது வீடேது, சாவதேது வாழ்வதேத னைத்துமாய தன்மைநீ, யாவதேது மொன்றுநான றிந்திலேனென் மாயனே. 30

நீதிவேதம் வானுளோர்நி லத்துளோர்நி னைந்துநைந், தோதியோதி யுட்கசிந்து ணர்ந்து முன்னை முன்னமே, சாதிபேத மாகிவாழ்ச ராசரங்க ளுக்கெலா, மாதிமூல மென்றுநான றிந்திலேனென் மாயனே. 31

சாயைபோலும் வாழ்வுமாடு வீடுதந்தை தா யெனும், பேயையேறி மாறியேபி றந்திறக்கு மீதெலாந், தூயையாகி யாதுமோர்தொ டக்கி லாது நின்றநின், மாயையாவ தென்றுநான றிந்திலேனென் மாயனே. 32

ஏறுமல்லு வென்றகுன்றெ டுத்தவண்ண மெண்ணியே, கூறுமல்ல நீரவும்பர் கூறுகின்ற கொண்டலே, வேறுமல்லை யொன்றுமல்லை மெய்ம்மைகூறு மப்பொரு, ளாறுமல்லை யென்று நான றிந்திலேனென் மாயனே. 33

யாதவாவென் மைத்துனவ டாவசோதை யின்னுயிர்க், காதலாய காலியாய கண்ணகண்ண வென்றுநா, ஞேதலாவ தன்றியேயு ரைத்ததீமை யாவையு, மாதகாத தென்றுநான றிந்திலேனென் மாயனே. 34

என்னுடைய தோழனென வேகருதியாது, முன்னுடைய மேன்மையினை யொன்றுமுண ராதே, வன்மையினி னின்மொழிம றுத்தெதிரு ரைத்த, புன்மொழிக ளானவைபொ றுத்தருளு கண்டாய். 35

உண்ணல்விளை யாடுதலு றங்குதலி ருத்தல், பண்ணலுறு போதுகளி லுன்பழைமை தன்னை, யெண்ணியறி யாமையினில் வந்தபிழை யெல்லாங், கண்ணகரு ணைகரபொ றுத்தருளு கண்டாய். 36

உண்டாய வுலகனைத்து மீன்றாய் நீயே யெவராலு முன்னுண்மை யுணர்ந்து கூறிக், கொண்டாடப் படுவாய்நீ மெய்ம்மை நல்கிக் குருவாகிக் குற்றங்க டீர்க்கின் றாய்நீ, யென்றாலு மறையனைத்து முன்னின் மிக்கா ரில்லையென நின்றேது வெடுத்துக் காட்டக், கண்டாலு நின்பெருமை காண மாட்டார் கண்ணிலா தவர்வேறு காண்ப துண்டோ. 37

அறியாத பருவத்து மகன்செய் குற்ற மருந்தாதை பொறுத்தெனவு மாவி போலப், பிறியாத தோழன்செய் குற்ற நட்பிற் பெரியோர்கள் பொறுத்தெனவும் பேதை யேனுய்க், குறியாது செய்துவருங் குற்ற மெல்லாங் குணமாகக் கொண்டருள வேண்டு மென்றே, வெறியாரு

மலர்ப்பதங்க ளிடையே வீழ்ந்து வேண்டிக்
கொண் டிவையின்னும் விளம்ப லுற்றான். 38

பண்டு கண்டறி யாப்பழங் கோலத்தைக்,
கண்டு நெஞ்சங்க லங்கிக்க ளிக்குமாற், றண்டு
நீண்முடி சங்கொடு சக்கரங், கொண்ட கோலத்
தை யேகொண்ட ருளுவாய். 39

என்றவனு ரைத்திடலு மெவ்வுருவு மொன்
றாய், நின்றவனு ரைத்தருளு வானிறையொ
ளித்தாய், முன்றருமு தற்பொருளு மாய்முழுது
மாய, வென்றனுரு வத்தினைமுன் யாவாறி
திற்பார். 40

வேதநெறி யாலுமிகு வேள்விகளி னாலு
மாதவம தாலுமகிழ் தானவகை யாலுங்
காதலர்கள் காணமுடி யாவடிவு கண்டா
யேதமறி யாவெனது யோகவலி யாலே. 41

இப்பரிசு ரைத்தருளி யீரிருகை யேயா
யப்பழைய கோலமது வாயருளி யங்கே
மெய்ப்பயம கற்றிவிச யற்கிசைய வேறே
யொப்புவரின் மிக்கவரி லாதவனு ரைப்பான். 42

கண்டவ ரில்லை நீமுன் கண்டவிக் கோலங் காண, வண்டரும் விரும்பா நின்றா ராதலா லன்பு கூருந், தொண்டரு மாகி யென்னை யன்றியோர் தொடக்கி லாமை, கொண்டவ ரடைவ ரென்றான் கோகுல மேய்த்த கோமான். 43

11. விசுவ ரூப அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 338.

---

## 12. பக்தி யோக அத்தியாயம்.

ஏயநா னெதிரே கண்ட வுருவமே யிசைகிற் பாரோ, தூயநான் மறைக்கு மெட்டாப் பொருளையே தொடர்கிற் பாரோ, தாயனுய் பெரியோ ரென்று தநஞ்சயன் வினவத் தானே, ராயனுய் நிரைகண் மேய்க்கு மாயன்வே றருளிச் செய் வான். 1

மன்னநீ காண நான்முன் காட்டிய வடிவை நெஞ்சா, லுன்னல்வாய் மொழியி னாலே யுரைத் தல்செய் பவர்க ளெல்லா, மென்னலாற் பிறி

தொன் றெய்தா ரியாரினு நல்ல ரிங்குச், சொன் னவ ரன்றி மற்றை யவர்கடந் தறையுங்கேளாய்.2

உரைசெயற் கரிதாய் நெஞ்சி னுணர்விடப் படாதா யெங்கும், புரையறக் கலந்து போக்கு வரவின்றிப் பொலிந்த தொன்மைக், கரைசெயற் கரிய வாய புலன்களைக் கடந்து காண்பா, னரச மற் றியானே யென்னி னந்நிய மென்ன லாமோ.3

காரண மிறந்தொன் றிற்குங் காட்சியிற் படாத தொன்மைச், சேர்பவர் வருத்தம் வேறு செப்பிட லாவ தன்று, லோர்வரி திதுதான் வாழு முயிர் களா லாவ தொன்றே, வாரவர் பெருமை தன்னை யளவறுப் பவர்க ளையா. 4

யாவர்கள் சிலவ ரெல்லா வினையுமென் கண் ணே விட்டிட், டியாவர்த மறிவென் பாலே யாக்கு வா ரவர்க டம்மைச், சாவது முதலா யுள்ள துயர்க்கட னின்றுந் தாங்கி, யாவர்க ளேனுங் காலஞ் சிறிதிலே யெடுக்கின் றேனுன். 5

மெய்யுற வுன்னை யென்னிலே வைத்தா லென் னில்வே றின்றியொன் றுதற், கையுற வில்லை

யதுசெய முடியா தாயினப் பியாசமே பயில்வாய், பொய்யற வதுவும் புரிகிலா யெனிலுன் வினைக ளென் பொருட்டினுற் புரிவாய், செய்யுமவ் வினைக ளப்படிச் செயாயேல் வினைப்பயன் தவிா வே செய்வாய். 6

அத்தி ஞானம்வி னையின தனினு
மெய்த்தி யாநமி குமதின் மேலதாம்
வித்தி னுயவி னைப்பயன் வீடுதல்
சித்த சாந்திய தற்பின்செ றியுமால். 7

இருவகை யுயிர்க்கு மினியனு யின்ப துன்ப மியா னென்னதென் றறியா, தொருபொரு ளாலுங் குறைவுபா டின்றி யுள்ளமு மொருவழிப் படாப், பொருவருந் துணிவுங் கருணையும் புரிந்து புலன்றெரி யுணர்வையென் பாலே, மருவினின் றெழுகு மியோகியென் பவன்காண் மன்னமற் றெனக்குவே றினியான். 8

உலகமுந் தானும் வேறிலா மையினுற் ருனொரு பொருட்குமஞ் சாதே, யலகிலா வுயிர் கட் கினியனு தவினு லவைகளுந் தன்னையஞ்

சாதே, புலவரா னவர்கள் புகழவே நிகழ்வான்
பொருளையு மயக்கமுங் களிப்பு, மிலகிடா நெஞ்
சத் தியோகியென் பவன்கா ணியாரினு மெனக்
குவே றினியான். 9

ஒன்றினு மாசை யின்றியிங் கியங்க டம்வழி
யொழுகிடா தொருக்கி, நன்றியி னேடு தீங்கினி
னைத்து நல்வினை தீவினை துறந்து, பொன்றினு
நோவுற் றழுதல்செய் யாதே பூரித்தல் வாடுத
லின்றி, யென்றுமுன் பிழந்த பொருட்கிரங்
காதே வரும்பொருட் கிச்சைசெய் யாதே. 10

இகழ்பவர் நட்டா ரென்ப தின்றியே யின்ப
துன்பங், கிகழவ மான மானஞ் சீதமோ டழலின்
றீமை, புகழ்பழி யிவற்று ளொத்துப் பொருந்தி
வா ழிடமொன் றின்றி, நிகழ்தரு மியோகி கண்
டாய் மற்றெனக் குரிய னீரான். 11

செயத்தகு வதவு மாகிச் சேர்ந்தவர் செல்ல
றீர, வுயக்கொடு போவ தாய பொருளையா
னுரைத்த வண்ண, மியற்பட வுணர்கிற் பாருக்

இயான்மிக வினிய னென்றான், மயக்கற வொருவ
ராலு மறிவரி தாய மாயோன். 12

## 12. பக்தி யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 350.

---

## 13. க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோக அத்தியாயம்.

---

விடம்படுப ணுமுடிய ரங்கின்மிசை யேறி,
நடம்பயிலு நாயகன்ம றித்தமிகு ஞானஞ்,
சடம்படுபி ணிப்பிறவி யென்றிவைத ரிக்கு,
முடம்பொடுயி ரானவையு ரைத்தருள லுற்றான். 1

உடம்பெனவு ரைப்பதுயி ருண்பவைக ளெல்
லா, மிடம்படவி ளைப்பதெதிர் காணலுறு மீதாற்,
றிடம்படவு மற்றிதுதெ ரிந்துணரு மெய்யைக்,
கடம்படுமு யிர்ப்பொருளெ னப்பகர்வர் கற்றோர். 2

மன்னவுடல் யாவையினு மன்னியறி வாய்நின்,
றன்னுமுயி ரியானிவையி ரண்டினையு மோர்

காத், றன்மையினி னியாதறியு மற்றதனை ஞாந,
மென்னவுணர் வாயிதுவெ னக்குமிசை வாமால்.3

மற்றிவுட றன்னின்வர வுங்குணமும் வந்தாங்,
குற்றமைவி காரமுமு யிர்த்தொகுதி தானு,
நற்றவர்கள் வேறுபட வோதினர்க ளனுஞ்,
சொற்றொகையி னுலிவைசு ருங்கமொழி வன்
கேள். 4

எப்பொருளி னும்பெருகி யெங்குமுள வாகு,
மப்பெரிய பூதமவை யைந்துமவை யீனு, மொப்
பரிய நானுமது வந்துமுனு திக்கப், பொய்ப்
பகையில் புந்தியவி யத்தமவை தாமும். 5

காதலிவ் வெட்டும்வினைக் காரணம
தொன்று, மோதலரி தாயபுல னைந்துமவை
யுண்ணு, மாதலறி யாதபொறி யைந்துமவை
யாலே, யேதவினை செய்கரண மூன்றினொடி
ரண்டும். 6

இற்றிவைய னைத்துமிட ரின்பமுதல் யாவுந்,
துற்றமைவி காரதைதொ டர்ந்ததொகை கண்

டாய், நற்றவவு டம்பெனவி யம்புவது நல்லோ,
ருற்றவுட லுக்குரிய ஞானமுமு வைப்பாம். 7

மானமும் பிறர்தனை மதிக்கப் பண்ணலு
மூனமும் பிறவுயிர்க் குறுகண் செய்கையும்
யானெனுஞ் செருக்குமிவ் விகப ரங்களி
லானபே ராசையோ டறுக்கு மாற்றலும். 8

பெற்றநன் மனையொடு பெண்டிர் பாலர்பா,
லுற்றெழு மவாவிட லுடம்பின் றூய்மையு, மற்ற
வைம் பொறிகளில் வாயில் வாழ்க்கையுஞ்,
செற்றமுஞ் சிறியவர் குழுவுந் தீர்தலும். 9

ஒருபெரும் பொருளையே யுளத்துள் வைத்
தலு, மிருவினை கடப்பவ ரிடங்க ளெய்தலுங்,
குருவினை வழிபடுங் குணமும் குற்றமி, லுறுவினை
யுள்ளவா றுணரு முண்மையும். 10

முன்றிகழ் பிறப்பொடு மூப்பி றப்பினுற்,
சென்றடை யிடும்பையைச் சிந்தை செய்கையு,
மென்றிவை யனைத்துமற் றிவற்றி னுவினிச்,
சென்றடை பொருளினைத் தெரிந்து கேளெனு. 11

ஆதியந்த மிலதழி யாதுநின்ற பெருமைய, தோதிலுண்ட திலையெனு மூனமின்றி யொளிர்வது, நீதியின்க ணகிலமு மாகியெங்கு நிறைதலி, ஞேதருங்கை செவிதலை கால்களெங்கு முடையது. 12

காணும் புலன்க ளனைத்தினுக்குங் கண்ணாய் நின்று காட்டுவது, பேணும் புலன்க டனக்கொன்று மில்லா தியன்ற பெற்றியது, பூணும் பற்றுத் தனக்கின்றி யெல்லாந் தானே பொறுப்பது, மாணுங் குணங்க ளின்றியவை மன்னி யநுப விப்பதது. 13

பூத மைந்தின கத்தி னேடுபு றத்தி னும் பொலி கின்றதிங், கேத மின்றிந டப்ப நிற்பன வாயி ருப்பத தின்னதென், ஞேத ரும்படி நுண்ணி தாகிய தொன்ற தாகியி ருந்துமெய்ப், பேதம் வந்தது போல நின்றுபி றங்க வும்படு கின்றதே. 14

அருவ மாயதி தூர மாயத ணித்து மாயத னைத்துமா, யுருவம் யாவும ளித்து மீளவொ ழிக்கு நாளிலொ ழிப்பது, பொருவி லாவொளி

கட்கு முள்ளொளி யாகி யேபொலி கின்றதிங்,
கிருமை வீடிய ஞான மோடதன் ஞேய மாகியி
லைசந்தது. 15

ஆன விப்பொருண் முன்பு ரைத்தவ வற்றி
ஞலறி யும்பொரு, ளூன மற்றம னத்தி ஞய்நலு
டம்பு மற்றவு டம்புசேர், ஞான முற்றம வற்றி
ஞலறி யப்ப டும்பொரு ணன்மையு, மீன மற்றதி
றத்தி ஞேடுசு ருக்க மாகவி யம்பினேன். 16

எள்ள லானதி கந்து யான்முனு ரைத்த விப்
பொரு ளீதெலா, முள்ள வாறென தன்பர்
தாந்தெரிந் துற்ப வங்களென் றோதிடுங், கள்ள
மார்தரு மாயை வேலைக டந்து காதல்செய்
யின்பமாம், வெள்ள மாமெனை யெய்து வாரென
வேறு கூறவி ரும்பிஞன். 17

ஓதிய வுடம்பிற்கு முயிர்க்கு முண்மையா
யாதிகண் டறிபவ ரியாரு மில்லையாற்
றீதிலிவ் விரண்டனின் செய்கை யென்னெனி
னீதியி னிவற்றையு நிகழக் கூறுவாம். 18

நண்ணிய குணத்தின்வே றின்மை நாட்டலாற்
கண்ணிய வினைகளுக் குடம்பு காரண
மெண்ணிய துன்பமோ டின்ப மென்றிவை
யுண்ணிய காரண முயிரென் கின்றதே. 19

இவ்வுயி ரிவ்வுடம் பிதனி லேயிருந்
தவ்வுடல் பயத்திடுங் குணங்க ளானவை
துவ்விடு மிறந்திடுந் தோன்று மிக்குண
மெவ்வநா னுடையன வென்றி ருத்தலால். 20

உண்பன யாவையு முண்கின் றானுமெய்க், கண்கொடெப் பொருளையுங் காண்கின் றானு மென், னண்பவெப் பொருட்குமொத் திருக்கு நாதனு, மெண்செய்திவ் வுடம்பிலே நின்ற வீசனே. 21

இப்படி யுயிரையு மியாக்கை தன்னையு
மெய்ப்பட வறிந்தவன் வேட்ட வேநுகர்ந்
தொப்புர வன்றியே யொழுகி வாழினும்
பொய்ப்படு பிறவியின் மறித்தும் போகலான். 22

செறியுமிப் பொருளினைச் சிலர்தி யாநமாங்
குறியினுற் றம்முளே காண்கு வார்சில

ரறிவருஞ் சாங்கிய யோக மாகிய
நெறியினு லெங்குமாய் நிற்பக் காண்பரால். 23

இருமையு மறிவதற் கிடமி லாதவ, ரொரு
மகன் றெய்வமென் றுரைத்த வொன்றையே,
யருமையி லருச்சனை செய்வ ராலதன், பெருமையி
லவர்களும் பிறவி மேவிடார். 24

போவன நிற்பவா மியாக்கை பூண்டுகொண்
டியாவருந் துயர்ப்படு கின்ற வீடெலா
மேவரு முடலுயிர் வேறு பாட்டினை
யாவகண் டறிவதோ ரறிவி லாமையே. 25

கெடுகின்ற பூதங்க டோறுங்கெ டாதே
வடுவின்றி நின்றம றைப்பொரு டன்னை
நடுவென்று கண்டவ னல்லன வெல்லாங்
கடுகின்று னையொழி யாவகை கண்டான். 26

ஒத்தெங் குமாய வொருமைப் பொருளினை
யத்தன் மையினு லறியு மவனே
செத்தும் பிறந்துந் திரியா வகைதனை
மெய்த்தன் மையிலே புகவிடு கின்றான். 27

உணர்வவி காரி யென்றும் வினையெலா முடம்பி னேடே, புணர்வன வென்றுங் கண்டான் பொய்யிலா மெய்யைக் கண்டா, னிணர் மலர் முடியா யெல்லா வினைகளுஞ் செயினு மாத்மா, குணமிலி யாத லாலே யவற்றொடுங் கூடி நில்லான். 28

உன்னிய வான மெங்கு மொழிவற நிறைந்த தேனுந், தன்னுடை நுண்மை யாலே பிறவொடுஞ் சார்த லுண்டோ, பன்னிய விதுபோ லெங்கும் பாந்துள னெனினு மங்கு, மன்னிய வீச னந்த வுடம்பொடு மருவ மாட்டான். 29

இரவிதா னொருவ னேயாய் நின்றிந்த வுலகத் தெங்கும், விரவிய விருளை நீக்கி விளக்குறு மாறு போலத், தாவியா வருமுன் னில்லாச் சராசர வுடம்பு தோறும், பாவியா னுரைத்த மாயோ னொருவனே பாந்து நிற்பான். 30

ஓரின்மே லாகி நின்ற வுயிரினே டுடம்புக் குள்ள, பேரினே டிறப்பு மூப்புப் பிறப்பெனு மிவற்றை வேறாய்ப், பாரின்மே லறிவார் வீடு

பற்றினு ரென்றான் பார்த்தன், றேரின்மே னின்
றே வேத சிரத்தின்மே லிருக்குஞ் சீரோன். 31

## 13. க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோக அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 381.

---

## 14 குணாதீத அத்தியாயம்.



செய்ய மாமலர் மேலுறை செல்வியும்
வைய மாமட வாளும கிழ்ந்ததோ
ளைய்யன் மெய்யையன் பாலடி யோமெலா
முய்ய மீளவு ரைக்கத்தொ டங்கினன். 1

நல்ல வாறறி வியாதினு நல்லது
வல்ல தீர்தவத் தோர்க்கறி வாவது
மல்லு லாவிய தோண்முடி மன்னயான்
சொல்லன் மேயவ தன்றுணி வாயதே. 2

இன்ன தன்மையின் ஞாநத்தி யற்கையா
லென்னை வந்தடைந் தாரிவ்வு லகினிற்
பின்னை வந்தடை யாரிற வாரிதன்
றன்மை யாதெனி லாங்கதுஞ் சாற்றுவாம். 3

மூத வாவென்கு ணம்மவை மூன்றினும்
பேத மாகும்பி ரகிர்தி தன்னிலே
காத லால்வைப்பன் யான்கரு வக்கருப்
பூதம் யாவும்பு லப்படு கின்றவே. 4

இந்த வண்ணத்தி னுலிவ்வு லகிடை
வந்த யோநியெ லாம்வரு வித்திடுந்
தந்தை யானவை யீன்றளிக் கின்றதா
யந்த வென்னுடை மாயைய தாகுமால். 5

என்று முன்னங்கு ணமென்றி யம்பிய
மூன்று மூலப்பி ரகிர்தி தன்னிலே
தோன்றி யுள்ளன தொல்லறி வைப்பற்றி
யூன்றி நிற்பவ வற்றையு ணர்த்துவாம். 6

சத்து வம்ரச சோடுத மசென
வுய்த்து வந்தபெ யரையு டையன

வெத்து வந்துவ முந்தரு கிற்பன
மெத்து வந்தவற் றின்செயல் வேறுகேள். 7

பற்று மாசின்மை யாற்பளிங் கொப்பது
வுற்ற நல்லறி வானதுண் டாக்குவ
தெற்று மின்பமல் லாற்றுன்ப மென்பது
சற்று மில்லது சத்துவ மாவதே. 8

3047

ஓது ராகவு ருவமு டையது
தாது கற்புரை யுண்ணிறஞ் சார்ந்தது
பேது செய்வினை யோடறி வைப்பின்னற்
கேது வாயதி ராசத மென்பதே. 9

குறியு நீலம யக்கமுங் கோதிலா
நெறிக டம்மையி கழ்தலு நித்திரை
செறித லானது மற்றிவற் றூற்றிண்ணென்
றறிவை மாய்க்கும துதம மாவதே. 10

உரைசெய் சத்துவ மின்பத் துய்த்திடு, மிராச
தம் வினைகளோ டறிவை யார்த்திடும், புரைசெய்
திவ் வழுக்கையே பொருந்திப் போர்த்திடுந்,
தரைசெறி புகழினுய் தமமென் கின்றதே. 11

வாழுஞ் சத்துவ மற்றைய விரண்டையு மறைத்துத், தாழு மற்றைய விரண்டுமத் தமோ குணந் தழைப்பின், வீழுஞ் சத்தவ தமங்களவ் விரசதம் விளவி, னூழின் மற்றிவை யிரண்டுந் தாழ்ந் தொன்றுமிக் குளதாம். 12

ஒத்துநல் லறிவு மிக்க தியாதொரு போதப் போது, சத்துவந் தழைத்த தாகுந் தாங்கரும் வினைக ளேகொண், டுய்த்துவந் தாசைகூா லோபம்வந் துற்ற போது, மத்திம குணமே சால வளர்ந்ததென் றறிநீ மன்னு. 13

தக்கது தகாதென் றென்றைத் தானறி யாத போது, மெக்கரு மங்கண் மாட்டு மிகழ்ச்சியோ டிருக்கும் போது, மொக்கமெய்ம் மயக்கத் தோடு முறக்கம்வந் துற்ற போது, மிக்கது தமமே யென்று விசயநீ யறிய வேண்டும். 14

தக்கசத் துவமே நிகழ்ந்தபோ திறந்தோர் தெய்வயோ நிகளிலே சார்வார், மக்களிற் பிறப்பா ரிராசத குணமே வளர்ந்தபோ துடம் பினைத் துறந்தோர், மிக்கெழுந் தமமே விளைந்த

போ திறந்தோர் விலங்குச்சா திகளிலே வீழ்வா, ரொக்கமற் றிவற்றின் பலன்களுந் தெரிய வுரைக் கின்றே னிவற்றையு முணர்வாய். 15

அருங்குண மாய சத்துவ பலமா மழுக்கற விராசத பலமாம், பெருந்துய ருழத்த றமோபல மாகும் பேதைமை பேசிய முறையே, பொருந் திய விந்தக் குணங்கண்மூன் றூலும் பூதசா லங் களுக் கெல்லாம், வருந்திரு வாய ஞானமோ டுலோப மயக்கமென் றின்னன வருமால். 16

சத்துவ மாந்தர் பாகதி யடைவர் தமத் துளோ ரதோகதி சார்வார், மத்திம குணத்தோ ராயினோர் நடுவின் மாநுடப் பிறவியாய் வாழ்வா, ரித்திற மாய வுருவமே விகாரி யானவி காரி யென் றிவற்றை, மெய்த்திற னுக வறிந்தவ னறிந்த பொழுதிலே வீட்டின்ப மடைந்தான். 17

உடம்புட னிருந்தே யுரைத்தவிக் குணங்கண் மூன்றையு முள்ளவா றறிந்து, கடந்தவன் பிறப்பு மூப்பிறப் பாதி யாகவே கட்டுரைக் கின்ற, விடம்புரை யிடும்பை யாவையுங் கடந்து வீட்

டின்பம் விளைபவ னென்றான், றடங்கட லிடையே வளர்ந்தவ னவற்கு வேறிது தநஞ்சய னுரைப் பான். 18

கண்ணிய வுலகிற் கடப்பரி தாய குணங்கண் மூன் றையுங்கடந் தயர்ந்த, புண்ணிய ரியல்புங் கடந்துறு நெறியுங் குறியையும் புகன்றரு ளென்ன, வெண்ணிய வுலகு முலகில்வா முயிரு மிருவினை யாக்கையு மாகிப், பண்ணியு மழித்து மேவிளை யாடும் பரமன்வே றிவ்வகை பணிப் பான். 19

வாய்மைய வல்லாக் குணமவை மூன்றின் காரிய மாய்வரு கின்ற, தூய்மையுந் தொழிலு மயக்கமு மென்று சொல்லிய துறையிவை மூன்றுஞ், சேய்மைய வென்று பெறுதபோ தவாவல் டெ்றபோ திரங்கல்செய் யாதா, ஞய்மொது மலன்போற் குணங்களோ டிருந்தே யவற்றினுற் சலித்திடா னன்றே. 20

மானமவ மானம்வரு மின்பமிடர் மண்பொன் னுனமகிழ் வப்பிரிய மன்பர்பகை யானே

ரூனவுரை யோடுபுக ழுற்றபொழு தொப்பா
னீனமுறு கின்றகுண மானவையி கந்தான். 21

இப்பரிசி னல்வருகு ணங்களைபி கந்தே
மெய்ப்பருவ மாயபெரு வீடுபெறு கிற்பா
ரொப்பரிசி னலுமிடை யின்றியெழு மன்பா
லொப்பவரி லாதவெனை யுன்னுமவர் கண்டாய்.

ஒழியா தென்று மியாவர்க்கு மியானே யுணர்த்தி வருதலாற், கிழியா வறிவுங் கெடா வீடுங் கேடி லின்ப மானதுவு, மழியா வறமு மென்னுள்ளே யுளவா காநின் றனவென்றான், சுழியா நின்ற பெருவெள்ளத் திடையே பண்டு துயில்கொண்டான். 23

14. குணாதீத அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 404.

---

## 15. பிரபஞ்ச அத்தியாயம்.



சாயை யன்னவென் வினைத்தளை யறுக்கவோ தகவில், பேயை யின்னுயிர் செகுக்கவோ பிள்ளை யாய் வளர்ந்தான், வேயை யொன்றிய வரிசிலை விசயற்கு மீள, மாயை தன்னையோர் மரமொக்க வருணிக்க லுற்றான். 1

வேர்மேலது தலைகீழது வீவில்லது வேதத், தேர்மேவிய விலைமேவிய தியாவும்புக றலினு, லார்மேவிய வசுவத்தம தெனவேயர சதனின், பேர்மேயது பெருமாயைசெய் பிறவிப்பெரு மரமே. 2

இவ்வாறித னியல்பாகிய வகையா வெனி வியாது, மொவ்வாவகை பெரிதாகிய பிரமத்துரு விடையே, வைவாள்வலி யுழவாவரன் முறையே வரன்முறையே, மெய்வான்முதல் வருமாதலின் மேலானது வேரே. 3

ஊழால்வரு மூலகாகியு மூபிராகியு மெழலாற், கீழானது தலையாவுறு முதலீறிடை கிளர்வாய்ச், சூழாகிய பிறவித்தொட ரொருகாலமு மடையப், பாழாம்வகை யழியாமையி லழியாததோர் படியே. 4

கருநாண்முதல் வினையாலது வளர்காதல் செய் தலினு, லருநான்மறை யவையேயிலை யவை யாமென வறிநீ, வருநாள்களி னொருநாள்பெறும் வகையின்மையி னாலே, பெருநாடறி யசுவத்தம தெனலாயது பெயரே. 5

மற்றிப்படி நிகழ்கின்றவிம் மாயாமர மிதனின், பெற்றித்திற மிதுவல்லது பிறிதின்மையி னாலே, யுற்றிப்படி யுணர்வார்பொரு ளெல்லாமுமு ணர்ந்தா, ரிற்றிப்பெரு மாத்தின்றிற மின்னுஞ் சில வுளகேள். 6

கண்ணேயெனை யனையாய்பல பிறவிக்கதி வழியே, மண்ணேமுதற் கீழாமுல கிடையேவளர் வனவும், விண்ணேமுதன் மேலாமுல கிடையே மிடை வனவு, மெண்ணேறிய பவமாகிய பணையா விசை தருமே. 7

நெறியால்வரு தருவேர்பல நிலமாமுல கிடை யே, யறியாமையொ டுறவீழ்தலில் வேர்கீழினு முளதாம், பிறியாதெழு குணமாகிய பெருநீர்மை யில் வளரும், பொறியாகிய விவைதாந்தளிர் போன்மேயது பொலிவே. 8

கனவுந்திகழ் கழுதாழியு மிருகந்தர்வ நகரு, மெனவந்தழி தலினுலுரு வதுவின்றிய தியாது, முனம்வந்திடு முதனுளொடு முடிவின்மையி ஞலே, தனதந்தமு முதலுந்தெரி தாவில்லது தானே. 9

மந்திர மாய விந்த மாத்திரைத் துறவென்கின்ற, தந்திர வாளால் வெட்டித் தற்பர மாகி நின்றே, யிந்திர சால மென்ன யாவையுங் காட்டு கிற்கு, மந்தமி லாத வென்னை யடைகையே யடுப்ப தையா. 10

துன்னிய வாசை கோபங் கடந்தவர் காணத் தோன்று, மென்னுரு வியற்கை கேட்கி லியாவையுங் காட்டு கின்ற, மன்னிய வொளிகள் காணு வகையதாய் வந்து சேர்ந்தார், பின்னியல் வேறென் ருகாப் பெற்றிய னென்று பேசும். 11

குடந்தொறுந் தோன்று கின்ற காயமுங் குலைதற் கேற்பத், தடம்புன ரூறுந் தோன்றுஞ் சந்திரன் ருனு மென்ன, வுடம்புக டோறும் வேரு யுயிரென நின்றே யந்த, விடம்படு புலன்க ளாறு மியல்பினி லியற்று வேனுன். 12

பூக்கமழ் நாற்றங் கொண்டு பொருவளி
போகு மாபோற், றீக்கனல் கின்ற வேலோய்
சீவனென் கின்ற சீரோ, ணுக்கையை யெய்தும்
போது மதனைவிட் டேகும் போதும், போக்கரி
தாய வாறு புலன்களைக் கொண்டு போமால். 13

மின்னே யனைய வுடம்பதனை விடுவ தடைவ
தாய்விடயங், தன்னே ரில்லா தான்றனே யார்
கின் றனத் தன்மையினை, யென்னே காணு
றறியாதா ரறிவா ரியோகத் தாலேதம், முன்னே
காண்ப ரிதனியற்கை தெளிநீ யின்னு மொழி
வன்கேள். 14

இந்தியங் களுக்குங் கண்ணு னிரவிநீ யிந்து
வின்பால், வந்தெழு கதிரு னானே மாநில மாகி
நின்றே, கந்தியன் றனைய தோளாய் கந்தமே
முதலாங் தன்மை, தந்தரங் தரித்தி தெல்லாந்
தாங்குகின் றேனு நானே. 15

முந்து வான்சுவை மூர்த்த மாகிய
விந்து வாகிநின் றுணவி யாவினுந்

தந்து சேர்சுவை தகவ வற்றிலே
நந்தி டாவகை வளர்க்கின் றேனுநான். 16

தின்ப நக்குவ சுவைப்ப வுண்பவாய்
நன்ப யன்செயு நால்வகை யுண்டியு
மின்ப மாம்வகை யாக்கைக டோறுமின்
றன்ப வங்கியா யறுக்கின் றேனுநான். 17

நல்ல மாந்தர்நல் லறிவு நன்கிலாப்
புல்லர் தங்கள்புல் லறிவும் போர்திகழ்
வில்ல மைந்ததோள் வீரர் வீரயா
னல்ல தில்லையென் றறிய வேண்டுமே. 18

அசைவி லுன்மறை யறிவ னுனதன்
வசையி லாதமெய்ப் பொருளும் வாய்மைசே
ரிசையி னுலெடுத் தோது வேனுநான்
விசைய கேளினும் வேறு மொன்றையே. 19

மருவு கின்றவிவ் வுலகின் மாய்தலே
யுருவ மாகமுன் புடைய தொன்றுமே
யருவ மொன்றினு லழிவ தின்மையே
பொருவ நின்றதோர் பொருளு முண்டரோ. 20

மொழிசெய் கின்றவிவ் விரண்டு முற்றவே
விழியு ளுலுற நோக்கின் மெய்ம்மையே
யழிவ தாக்கையாங் கழிவு பாடிலா
தொழிவ தென்னெனி னுயிரென் கின்றதே. 21

இவையி ரண்டையுங் கடந்தி யாதுமோர்
நவையு மின்றியே நாச மின்றியே
யெவையு மின்றியே யிழிவு மின்றியே
குவையி னின்றதோர் குறியி லின்பமே. 22

இந்த வின்பமா மென்னை யுள்ளவா
சிந்தை யின்கணே தெளிதன் மேயினர்
பந்த மொன்றிலார் பழைய விப்பொருட்
கந்த மாதிவே றறிய வொண்ணுமோ. 23

வேத நாலுநின் றுரைசெய் தாலுமொன்
றோத லாவதன் றுலக நிந்ததோ
காத லாலெனக் கினிய தோழனீ
யாத லாலுனக் கறிய வோதினேன். 24

கண்ணையோ ரிடத்து மின்றி யதனிலே வைக்கிற் காதற், பண்ணையோ டாக்குகின்ற வினை

யெலாம் பயக்கு மென்றான், வெண்ணெயோ
விதுர னிட்ட விருந்தையோ வேலை சூழ்ந்த,
மண்ணையோ வுண்டு முன்னாள் வருபசி தீர்ந்த
மாயோன். 25

15. பிரபஞ்ச அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 429.

---

## 16. தேவாசுர சம்பத்து விபாக யோக அத்தியாயம்.

---

மறந்தி ருந்தம னத்திரு ணீங்கிடத்
திறந்தி றப்படச் செப்புதன் மேயினா
னறந்தி றந்தெரிந் தாக்குதற் காகவே
பிறந்தி றந்துழல் கின்றபே ராளனே. 1

தெய்வ வாசுர ரென்றித்தி றத்தராய்
வைய மாந்தரெல் லார்களும் வாழ்வரிங்
கைய கேளவர் தந்திற மென்றுதன்
செய்ய வாய்திறந் திவ்வண்ணஞ் செப்புவான். 2

அஞ்சுத லின்மையு மறிவை யாக்கலு
நெஞ்சினை யடக்கலு நிலைகெ டாமையும்
வெஞ்சின மின்மையு மெய்ம்மை கூறலுந்
தஞ்செனு வேள்வியுந் தவமு மாக்கலும். 3

மறைபயி றலுந்தனை மதித்தி ராமையுங்
குறளைக டவிர்தலுங் கொல்கை மாற்றலும்
பிறர்பிழை பொறுத்தலும் பேரா ழுக்கமு
மறன்வலித் தானமோ டருளை யாக்கலும். 4

இருவகைத் தூய்மையு மிந்தி யங்களை
யொருவழிப் படுத்தலு முள்ளிட் டன்னவை
செருவருஞ் சிலையினுய் தெய்வத் தன்மையோர்
மருவிய தொழிலென மதிக்க வேண்டுமே. 5

தீமைசெய் யசுர ராஞேர் செய்கையைத் தெரிக்கி லொன்றை, யாம்வகை யெனமற் ருகா தனவென வறித லில்லார், தூய்மையுந் தூய வாய வொழுக்கமுந் தொடக்கு விட்டார், வாய்மையொன் ருனு மில்லார் மயக்கமே மருவா நின்ருர். 6

எண்ணிய வுலகமு முலகிற் கீசனும்
புண்ணிய பாவமும் பொய்யென் றேகொள்வர்
பெண்ணினே டாண்புணர் கின்ற பெற்றியா
னண்ணிய யாவையு மென்று நாட்டுவார். 7

விரும்பல ராகி யொழுக்கங்க டுறந்தார் மெய்ம்மையுஞ் செம்மையும் விட்டா, ரிரும்பய ஞன வறிவுமாய்ந் துள்ளா ரிடம்படா மநத்தினே டிசைந்தார், பெரும்பழி யான தொழில்களே புரிவார் பிழைப்புவாய்ப் பொன்றறி யாதா, ரரும் பகை யாயிவ் வுலகினை யெல்லா மழிப்பதன் பொருட்டவ தரித்தார். 8

நிறைவிலாக் காம போகந் தன்னையே நிறைக்க வேண்டி, மறைவிலா மாநத் தோடு மதங்களை மருவி நின்றுங், குறைவிலா மயக்கத் தோடு கோபத்தை யடைந்து நின்றும், பொறையிலா விரதம் பூண்டு பொய்த்தவம் புரியா நிற்பார். 9

இறந்துபோ மளவு மெய்தாப் பொருளையே யெண்ணு நிற்பார், மறந்துமோர் பொருள்வே றில்லை வருபய னன்றி யென்பார், சிறந்தபோ கங்கட் காகத் தீமையாற் பொருளைச் சேர்ப்பார்,

பிறந்துபே ராசையாய பாசத்தாற் பிணிக்கப் பட்டார். 10

இப்பொரு ளடைந்தோம் வேறு பொருளினி யடைவோ மென்று, மிப்பகை செகுத்தோம் வேறு பகையினிச் செகுப்போ மென்றுந், துய்ப் பவ ரெம்மிற் றுய்க்க வல்லவ ரில்லை யென்று, மொப்பவ ரெம்மின் மிக்கா ருளர்கொலென் றுணரா நிற்பார். 11

இனம்வலி யின்பம் பெற்றே மெம்மின்மிக் கார்க ளில்லைத், தநமிக வுடையே மென்றுந் தம்மையே வியவா நிற்பார், மகமகி ழியாகஞ் செய்வோ மழையெனக் கொடுப்போ மென்று, திநமவை தோறுஞ் சிந்திப் பதுவலாற் செய்வ தில்லார். 12

தொடக்கற வில்லா வினைவெனப் பட்ட சூழ லைப் பற்றியே சுழல்வா, ரடக்கரி தாய மயக்க மென் கின்ற வலைபுளே யகப்பட்டு நின்று, ருடற் குடில் வாழ்வாம் புன்னுனிப் பனிநீ ருலர்ந்திடி னுயிர்நடுக் கெய்திக், கடப்பரி தாய நரகமென் கின்ற கடல்களில் வீழவே கடவார். 13

வியந்துதங் களையே மேலாப் பார்த்துமெய்ம் மாந்தர் தம்மை, நயந்துகொண் டாட லில்லார் நல்லவை செய்தா ரென்று, பயன் றொடர்ந் துரைத்தற் காகப் பாடிய பழைய நூல்க ளியம்பிய படிசெய் யாதே யாகங்க ளியற்று கிற்பார். 14

மன்னிய களிப்பொடு வலியுங் காமமுந்
தன்னியா னெனும்பெரு மயக்கஞ் சேர்ந்துளா
ரென்னியல் பினைத்தமி லியாவர் மாட்டிலு
மன்னிய மெனக்கொடு பொறாமை யாக்குவார்.

மற்றவர் தம்மை யிந்த மாநட ராஞெ ரியார்க் குங், கொற்றவ கீழா ஞோைக் கொடுமையா லரவொப் பாரை, யற்றமி லிடும்பை சேரு மாசுர யோநி யாய, புற்றவை தோறு மியானே புகப் புக விழுத்து கின்றேன். 16

இவ்வகை யாசுர யோநிய டைந்தோர்
மெய்வகை யாமறி வின்மையி னாலே
னைவர்க டைநர கக்கதி தோறு
முய்வகை யின்றியு ழன்றுதி ரிந்தே. 17

ஒருவன சிக்கவி யற்றுவ தென்று
மருநா கத்தில டைப்பது தானும்
வரும்வழி மூன்றுள மற்றவை தம்மை
யொருமுறை கூறியு ணர்த்திடு வன்சேள். 18

காதலி னுகிய காமமு லோபங்
கோதற வேசுடு தீங்கர் கோப
மாதவி னுவிவை மூன்றும கன்றார்
வேதனை தீர்பெரு வீடுவி ளைந்தார். 19

கூறின நூல்வழி சேர்குறி பேணு
தேறின வாறுசெய் வாரிக லோகம்
வேறிய லார்பர லோகம்வி ளைக்கும்
பேறின வானவை பேறுபெ றுரால். 20

ஆதலில னைத்துமறி கைக்குவழி யான
வேதமுத னூலவைவி தித்தநெறி யாலே
யேதகினை யாதுன்வினை யேயிசைக வென்றுன்
பூதமுத லானவைபொ றுத்தருளு கின்றுன். 21

16. தேவாசுர சம்பத்து விபாக யோக
அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 450.

---

# 17. குண விகார அத்தியாயம்.

உண்டு மீளவொ ளித்துல கியாவையுங்
கண்டு காப்பவன் கட்டுரைத் திட்டதே
கொண்டு பார்த்தனக் கொண்டல்வண் ணன்றனைத்
தொண்டு கூறிப்ப ணிந்திது சொல்லுவான். 1

வேத மேமுத னூல்விதி யின்றியே
காத லாலுல கோர்செயுங் காரிய
மேத மாங்குண மூன்றினு மேதென
வோத மாக்கடல் வண்ணனு மோதுவான். 2

யாவர்க ளாசைப் பாடு மியம்பிடி வியம்பப் பட்ட, மூவகைக் குணமு மாகி யல்லது முடிந்து நில்லா, மேவரு மவற்றி னுய வேறுபா டவற்றை யெல்லாங், காவல தெரியக் கூறக் கேளெனக் கழற லுற்றான். 3

சாத்துவிகர் தேவரையே சரண்புகுவர் தாமதர்கள், காத்தல்புரி வனபேயும் பூதமுமாக் கடைப்பிடிப்ப, ரேத்தரிய குணமிவற்றி விராசதமாங் குணமுடையோ, ராத்தரென வியக்கரையு மரக்கரையு மடைகுவரால். 4

அடங்கிட லகங்கா மாதி யின்றியே
யிடம்படு நூல்களி னியல்ப தின்றியே
யுடம்பையு முயிரையு மாய்க்கு மாதவந்
தொடங்கின ரசுரயோ னியினிற் றோன்றினர். 5

உண்பன யாக மாரு முறுதவந் தாந மென்ன,
வொண்பட வுரைத்த நான்கு மோரொன்று
மூன்றாய் நின்ற, பண்படு குணங்க ளாலே
கேளெனப் பற்று வீடு, நண்பொடு பகையு
மில்லான் முறையினு னவிற்ற லுற்றான். 6

சத்துவ குணத்தோ ருண்டி யுரைத்திடி லழகு
சார்ந்து, தித்தித்த சுவைய வாகி நெய்த்துச்சிக்
கெனவு சேர்ந்து, வத்தித்து வலிநோ யின்மை
யறிவுநல் லாயு வின்பம், வத்திக்கச் செய்யு மிந்த
வுணவுகண் மடங்க லன்னாய். 7

இப்படி யன்றி வேறு மிராசத ருணவு கேட்கிற்,
கைப்பன புளிப்பு வர்ப்புக் கூர்ப்பன கடிய
வெய்து, நெய்ப்பயி னெருப்புப் போலச் சுடுவன
விவற்றி னாலே, மெய்ப்படு நோயு நெஞ்சத்
திடும்பையும் விளைவ வேலோய். 8

ஆசினை யடைந்த நெஞ்சிற் றாமத ருணவு
கேட்கி, லூசின பழஞ்சோ றெச்சி லும்பர்பூ
சனைக்கா காமை, யேசின வெந்தி லாத வினையன
விவற்றி னுலே, காய்சின முதலா யுள்ள துய
ரெலாம் விளைவ கண்டாய். 9

செயத்தகு வனவென் றல்லாற் சேர்பயன்
சிந்தி யாதே, தயக்கநூன் முறைசெய் யாகஞ்
சாத்திகஞ் சாரி யாகம், பயத்தையே வேண்டி
யாதல் பலர்புகழ் வேண்டி யாத, வியற்றுறும்
யாக மெல்லா மிராசத யாக மாமே. 10

நூற்படு நெறியு மின்றி நுனித்தவவ் வினையின்
மேலோர், தாற்பரி யமுமே யின்றித் தக்கமந்
திரமு மின்றி, யேற்பவர்க் கீத லின்றி யியற்றுறு
கின்ற யாகந், தார்ப்பொலி கின்ற மார்பா தாமத
யாக மாமே. 11

தீக்குலாம் வேலினய் தவத்தின் செய்கைதான்
வாக்கினுற் பேசுதன் மநத்தி னுக்குத
லாக்கையா வியற்றுத லாயி ருப்பது
நோக்கினு னிவற்றினை நுனித்துக் கூறுவாம். 12

தீர்த்த யார்க்குஞ்செ விக்கினி தாயின
வார்த்தை மாமருந் தேயென லாவதா
மோர்த்து மெய்ம்மொழி கூறுத லோதுதல்
வார்த்தை யாற்பண்ணு மாதவ மாவதே. 13

தெளிவி னெஞ்சைத்தெ ளியப்பி டித்தலுங்
களிசெ யும்முளத் தைக்களி மாற்றலுங்
குளிர்வி லாமையு ளத்திற்கொ ளாமையு
மெளிதின் மாநத மாதவ மென்பதே. 14

தலைமை யந்தணர் தேவர்கு ரவர்பான்
மலைத லின்றிவ ழிபடு வாழ்க்கையுங்
கொலைது றத்தலுங் காமங்கு றைத்தலுந்
தலைவ காயத்த வமெனப் பட்டதே. 15

தீத்தவமும் வடிவேலோய் செப்பியவிம் மூன்
றுலுஞ், சாத்துலக மகிழ்வெய்தச் செய்கின்ற
வருந்தவத்தி, லார்த்துவரும் பயன்வேண்டா
தாகின்ற வருந்தவந்தான், சாத்துவிக தவ
மென்று சாற்றுவது தக்கோரே. 16

வசையிறவ முடையரென மாநடர்கொண்
டாடுகைக்கு, நசையினொடு பொருள்பெறவுஞ்

செய்கின்ற நற்றவத்தை, விசயவுனக் குரைசெய்
தேன் மிகப்பெரியோர் செய்திடினு, மிசையவறி
மற்றிதனை யிராசதமாந் தவமென்றே. 17

பேதைமையை மிகவுடைத்தாய்த் தன்னுயிர்க்
கும் பிறவுயிர்க்கு, மேதமுறு பெருந்துயருங்
கேடுமே யியற்றுவதா, யாதவனும் பணியுமுழன்
றாற்றுகின்ற வருந்தவந்தான், றாதலரு நெடுமுடி
யாய் தாமதமாந் தவமாமே. 18

முன்செய்கா ரியப்பொருட்டு மின்றியே முடித்
திதனற், பின்பொருநற் பொருள்விளையு மென்
பதுவும் பேணாதே, நன்குடைய காலத்தே நல்லி
டத்தே நல்லவர்க்குத், தன்பொருளைக் கொடுக்
குமது சாத்துவிக தானமே. 19

கொண்டுசெயத் தகுங்கரும மெனுங்குறிப்
பொன் றின்றியே, பண்டுசிலர் செய்ததற்காப்
பரிவோடு பண்ணினவு, முண்டிதனன் மேல்விளை
வென் றுணர்வோடிச் செய்வனவு, மெண்டிசையு
நிறைபுகழா யிராசதமாந் தானமே. 20

வாயாத தொருபொருளை வழங்காத காலத்
தே, யேயாத நிலத்திடையே யிழிந்தகுலத்

தவர்களுக்கே, யாயாத வறிவிஞெடு மப்பிரியத் தொடுங்கொடுத்தல், சாயாத பெருந்திறலோய் தாமதமாந் தானமே. 21

ஒப்பரி தாய வுண்டியோ டியாக முறுதவந் தானமென் றுரைத்த, வப்படி யெல்லா மறிவகை யுனக்கு முரைத்தன னடையமற் றையா, மெய்ப் படி யாமற் றிவற்றினைச் செய்து வீடுபேற் றுயர் நெறி யாவ, தெப்படி யென்னி லதனையு முனக் குத் தெரிவகை யுணர்த் துவன் கேணீ. 22

ஓமென் கின்ற தனியெழுத் து முரைத்தற் கரிய தற்பதமுந்; தாமங் கமழுந் தார்மார்பா சத்தென் கின்ற தனிப்பதமு, மாமென் கின்ற விவைமூன் று மறிவின் பெயர்மற் றிவற்றாலே, யாமுன் புணரு மறைமறையோர் யாகந் தோன் றிற் றெனவறிவாய். 23

ஓமென் றுரைத்தே வினைசெய்வார் வீடுற் றவர்வீ டுறுமவர்க, டாமுன் புரைத்த தற்பதத் தை யுரைத்தே செய்வர் சத்தென்றே, யாமென் கின்ற யாகமுதன் மூன்றிற் றிதியு மவற்றினமுங், காமர் வினையின் மேலுமது கழறு கிற்பார் கதிர்வேலோய், 24

காதலா லிந்தப் பதங்கண்மூன் றினையுங் கற்று ணர்ந் தவர்கடங் கருத்தா, லோதலாம் வகையா லுரைத்தலாற் றவமுந் தாநமு முதலிய வொழி யா, ஈாதலா லிந்தப் பதங்களை யுரைத்தே வினை செயத் தருவதென் றுரைத்தான், றீதிலா வுலகந் தன்னுளே யுதிப்பத் தேவகி திருவயிற் றுதித் தோன். 25

17. குண விகார அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 475.

---

## 18. சங்க்ஷேப அத்தியாயம்.

ஏகமே கருதுவா ரிதயமே விளைவதோர், போகமே யுலகிலோர் பொருவிலா வொருவனே, நாகமே யமளியாய் நளிநமே மலர்வதோர், மேக மே பணியெனு விசயன்மேல் வினவுவான். 1

சந்நி யாச மாவதுந் தகுந்தி யாக மாவது, மென்னி யாய மாகவெம்பி ரானியம்பு கென் னவே, வந்நி வாயு வாநமாகி மண்ணுநீரு மாகி

யோன், றென்மை யாம்பொ ருட்டொகைத்தி
றஞ்சொலத்தொ டங்கினன். 2

காம மென்றி டும்ப லன்செய் கன்ம மான
யாவையுந், தாம டங்க வேயி கத்தல் சந்நியாச
மாவதிங், கேம மின்றி யெவ்வி னைப்ப யன்களான
யாவையுந், தீமை யென்ற றத்து டைத்தி ருத்தறி
யாக மாவதே. 3

தீங்கி யற்று கின்றதீவி னைத்தி றங்கள் போல
வே, யீங்கி யற்று கின்றநல்வி னைத்தி றங்க
ளியாவையு, மாங்கி யற்ற வின்றிவிட்டி ருத்த
லே யருத்தமாச், சாங்கி யத்தை யோதி டுந்த
வத்துளோரு ரைப்பரால். 4

ஞான கார ணங்க ளாத லாலி யாக நற்றவந்,
தான மோடி கத்த லத்த காமை கூறு வாருள,
ரான கார ணத்தி னல றிந்த டங்கி னர்க்கலா,
லீன மாகு மேனை யோர்க்கி வற்றை விட்டி
ருத்தலே. 5

தியாக மூன்றுவ கைப்படுஞ் செப்பக்கே
ளியாக முந்தவந் தானமு மென்றிவை

மயால றுக்கும நத்தினை யாதலா
லயாவு ரைக்கில்வி டுகைய டாததால். 6

என்ன செய்வதெ னிலிவ்வி னைகளாற்
பின்னை யெய்தும்பெ ரும்பய னுவது
தன்னை விட்டுச்செ யத்தகு மென்பது
முன்னை யோர்க்குமெ னக்குமு டிவரோ. 7

நித்த மாயவி னையினெ றியினை
மத்தர் போலவொ ருவன்ம யக்கினுற்
பித்த னுய்விடு கின்றவப் பெற்றியைச்
சித்த தாமதத் தியாகமென் கின்றதே. 8

மெய்வ ருத்தமுண் டென்றுவி டுவதிங்
கைய மின்றியி ராசதத் தியாகமாங்
கைவ ரும்பல மாசைகை மாறவே
செய்வ செய்வது சத்துவத் தியாகமே. 9

யாதின் மாட்டினு மையமொன் றின்றியே
தீதின் ஞாயியுந் தியாகியு மானவன்
கோதி லின்பமுந் துன்பமுங் கூர்வினை
மீது வேண்டல்வேண் டாமையும் வீடுமால். 10

யாக்கை யோடுமி சையிலி ருவினை
நீக்க லாவன வல்லநி லத்திடை
வீக்க மாயவி னைப்பயன் வீடினர்
போக்க லாவினை யாவையும் போக்கினர். 11

இன்னு தனவு மினியனவு மிரண்டுங் கூடி யிசைந்தவுமாய், முன்னு நின்ற வினைமூன்று மவற்றால் வந்த முடிபொருளும், பொன்னு னதுவும் பணியும்போ லிருக்கு மிந்தப் பொய் மெய்யை, யன்னு தவர்க்கே யுள்ளதிவை யுணர்ந் தோர்க் குளவா யுதியாவால். 12

ஓங்கிய வுலகினி லுயர்ந்த நன்மையுந்
தீங்கின வாம்வினை யாவுஞ் செய்தற்குச்
சாங்கிய நூலிலே யுரைத்த சாதந
மீங்கிவை யைந்தையு மெடுத்துக் கூறுவாம். 13

இருப்பிட மாமுடம் பியற்று மாருயிர்
கருத்தினை முதலிய காரணங் காற்றினல்
விருப்பொடு வருந்தொழி லிவற்றின் மேலரு
ளருத்தமாந் தெய்வமொன் ருக வைந்தரோ. 14

வாக்கினா லாதன்மெய்ம் மாத்தி னாதறம்
யாக்கையா லாதலிவ் வுலகில் யாவரும்
வீக்குவார் சிலையினாய் வினையி ரண்டிலொன்
றாக்குரா ளிங்கிவை யைந்தும் வேண்டுமால் 15

இவ்வகை யேவரும் வினையி ரண்டையு
மெய்வகை யாகயா னன்றி வேறிலை
செய்வகை யானெனச் சிந்தை மேயினா
னுய்வகை யுணர்கிலா னுணர்வு மாய்ந்துளான்.

யாவ னொருவன் றன்னுடம்பை யானென் றிருக்கு மியல்பொழிந்தான், யாவ னொருவன் றன்கரணம் யாதொன் றோடும் விழைதவிலா, னாவ னவனிவ் வுலகத்தை யடையக் கொன்றா னாயினுமோர், பாவ மில்லை யவன்கொன்ற பழியு மில்லை பார்மன்னா. 17

அறிவு மறியப் படும்பொருளு மறிவா னொருவன் றானுமாய், நெறியில் வினைகள் விதிக்கின்ற விதியி னிலைமை நிற்பதுதான், செறியுங் கருமஞ் செய்வானுஞ் செய்தற் குரிய காரணமுமாய்க், குறியில் வினைகண் முடிவிருப்ப தின்னுஞ் சில யாங் கூறக்கேள். 18

ஆன்ற வறிவுங் கருமமுமக் கருமங் களையாக் கிடுவானு, மூன்ற வுணரும் புத்தியொடு திருதி யென்ன வுரைப்பனவுந், தோன்ற விளையு மின்பமு முன் சொன்ன குணத்தின் றொடர்பாலே, மூன்று வகையா மொரோவொன்றிங் கவற்றின் றிறநான் மொழியக்கேள். 19

நன்றாய் ஞானத் திரளாகி நானா விதமாய் விரிந்தெங்கும், பொன்று நின்ற பூதங்க டோறும் பொன்றாப் பொருளாகி, யொன்றாய் நிற்ப தொன்றினையப் படியே யுணரு முணர்வதனை, யன்று மென்னார் சாத்துவிக ஞான மெனவே யமைப்பாரால். 20

ஊனப் படுமிவ் வுடற்றேறு முள்ள பொருளை யுணராதே, யீனப் படக்காண் கின்றதிரா சதமா ஞான மதுவன்றி, ஞானத் திரளாய் நின்றதை யோ ருடம்பி னிடையு நாட்டிடையோர், தானத் திடையு மடங்கக்காண் பதுதா மதமா ஞானமே.

வீதலிற் பற்று மேலோர் வினைப்பயன் வேண் டல் வேண்டாக், காய்தலொன் றின்றிச் செய்யுங் கருமஞ்சாத் துவிக கன்ம, மாய்வரும் பலத்தி

ளேடு மகங்கா மத்தி ளேடு, மேய்தருங் கரும
மெல்லா மிராசத கரும மாமே. 22

குலேபெறும் பற்று மேலோர் கூறிய நீதி
யோடுங், கலேதெரிந் துணர்ந்து மெய்ம்மை
கடைப்பிடி யாமை யார்க்கு, மலேவுறுங் கேடு
நாசம் வலியிவை யவிவே கத்தாற், றலேதவச்
செய்வ தெல்லாந் தாமத கரும மாமே. 23

பற்றுமாங் காரந் தானும் பழுதறத் துறந்தி
யாவு, முற்றெழு முயற்சி யோடு நிலேமையி ளேடு
மொன்றி, யெற்றுமோ ரிழவு பேற்றிற் றுன்பமீ
தின்ப மென்று, சற்றுமோர் சலிப்பி லாத
தலேவன்சாத் துவிக னென்பான். 24

விளேப்ப யன்றனே வேண்டலும் வேட்கையு
மெனேத்தி டாமையுந் தூய்மையி லாமையு
நிளேப்பின் வாட்டமு நீடும கிழ்தலு
மினேத்தின் வாழ்வரி ராசத மாந்தரே. 25

மநமொ ருக்கலும் வான்கலே நூல்களேத்
தநமெ னக்கொடு கற்கலுந் தக்கவ
ரினம கிழ்த்தலு மின்றிமு டிப்பதோர்
திநமு டித்திடார் தாமதஞ் சேர்ந்துளார். 26

ஈன மற்றது றவற மில்லற
ஞானம் பற்றொடு நல்வினை தீவினை
யான வஞ்சுவ வஞ்சத்த காவெனத்
தான றிந்தது சத்துவ புத்தியே. 27

தருமம் பாவந்த னக்குச்செ யத்தகுங்
கருமஞ் செய்யத்த காதக ருமங்க
ளருமை யாலறி யாதவ றிவதே
யிருமை யாயவி ராசத புத்தியே. 28

பாவ மாகத்த ருமத்தைப் பார்த்தலு
மாவ தாமென்ற டாதது நோக்கலுந்
தீமை செய்கின்ற சிந்தனை தீங்கிலே
போவ தாவதுந் தாமத புத்தியே 29

மநஞ்செ யுந்தொழின் மன்னுயி ரின்றொழி
லினஞ்செ யிந்தியஞ் செய்தொழி லென்றிவை
கனஞ்செய் தேறிலுங் கண்டுபொ றுத்தலுஞ்
சினஞ்செ யாமையுஞ் சாத்திக திருதியே. 30

பண்ணிக் காமந்த ரும்பயன் கைக்கொள்வா
னெண்ணித் தாங்குந்தி ருதியி ராசதங்
கண்ணிற் சோகங்க ளிப்புறக் கம்பய
நண்ணித் தாங்கும்பொ றைதம நாளுமே. 31

துன்ப மாய்விடம் போன்றுதொ டக்கத்தி
லின்ப மாகிவி ளைவிட மியாவர்க்கு
மன்ப வாரமு தேயென லாவதா
மென்ப சாத்துவி கந்தரு மின்பமே. 32

பொருத்த மாய்ப்புல னோடுபொ றியிலே
யருத்த மாயெழுந் தாரமு தென்னலாய்
விருத்த மாய்முடி வில்விட மாகியே
யிருத்த லாகுமி ராசத வின்பமே. 33

தொடரு றக்கம யக்கொடு சோம்பினாற்
படவு தித்ததாய்ப் பண்ணும்பொ ழுதினுங்
கடன்வி ளைந்துமு டிந்தகா லத்தினு
மிடர்வி ளைப்பது தாமத வின்பமே. 34

இந்தவியற் கையினுமிக் குணங்களைவிட் டவ
ரில்லை, யந்தணர்க்கு மரசர்க்கும் வணிகர்க்குஞ்
சூத்திரர்க்குந், தந்தமியற் கையவாய குணமூன்
றின் றன்மையினில், வந்தவினைத் திறமவற்றை
யுரைப்பன்கேண் முடிமன்ன. 35

கறைசெயைம் புலன்களைக் காண நான்குடன்
றுறைதுறை யடக்கலுந் தவமுந் தூய்மையும்

பொறையொடு கல்வியும் பொருந்து ஞானமு
மறையவர் தொழிலென வகுக்கப் பட்டதே. 36

தலைமையுங் கொடையொடு தறுக ணண்மையு
நிலைமையுங் கீழ்ப்படா நெஞ்சி னீட்டமுங்
கொலைபயில் போர்களிற் புறங்கொ டாமையுஞ்
சிலைமலி தோளினு யரசர் செய்கையே. 37

உழுதொழில் பசுக்களை யோம்பல் வாணிகம்
வழுவறச் செய்கையே வணிகர் வாழ்க்கையாம்
பழுதற விவர்களைப் பாது காத்தலே
விழுமிய தொழில்கள்வே ளாளர்க் கென்பவே. 38

தீரா வலைகதஞ் செயலே செயவே
நாரா யணனு முதனு யகனுக்
காரா தனையா மதனு லவனே
வாரா வழியாம் வரமே தருமால். 39

அல்லா வினைதா னழகாய் வரினுஞ்
செல்லார் பெரியோ ரவைசெய் வதனிற்
றெல்லார் குலமே தொடருந் தொழிலே
பொல்லா வெனினுஞ் செயலே பொருளே. 40

கனையெரி புகையோ டன்றிக் காணமுன் படாமை போல, வினைகளுங் குற்றந் தன்னை விட்டிரா வாத லாலே, யனையவென் றிகழ்த லாகா தடுத்தகா ரியங்க டம்மை, நினைவருந் தரும மென்று செய்கையே நீதி யெல்லாம். 41

வெல்லப் பட்ட மநத்தினனுய் வேறொன் றினையும் வேண்டாதே, யல்லற்படுக்கு முடற் பற்று மறவே யறுத்தான் வினையடையச், செல்லச் செல்ல வறுத்தானு மதனுற் சித்த முடிவாகச், சொல்லப் பட்ட காணங்க ளுன்குந் தூய்தாய் விடுமன்றே. 42

சொன்ன கரண மவைநான்குந் தூய்தாய் விடவத் தூய்மையினு, லுன்ன வரிய பெரும் பொறையை யுடைய ளுரு மப்பொறையா, லின்னல் செய்யும் பொறியைந்து மிராகத் துவேஷ மெனுமிரண்டு, மன்ன தன்னை நலி யாமை மாற்று மவற்றை மாற்றினுல். 43

காடு மலையு மலைமுழைஞ்சுங் கடுமா முதல நலிவில்லா, வோடும் புனலா றுள்ளிட்ட விடவே யுறையு ளாக்கொண்டு, தேடும் பொருளொன்

றின்றியே சிறிதே யுண்டு சென்றெங்கு, மாடு மாவாய் மொழியாக்கை யடங்கப் பெறுமா லவனையா. 44

சொன்ன விவைபோ யடங்கிடவே தோன்றுங் களிப்புங் காமமுமுன், பென்ன தியானென் கின்றதுவு மெரிபோல் வெகுளி யொடுவலியு, முன்ன றவிர்ந்து சாந்திபெறுஞ் சாந்தி பெறவே யோரிடத்தும், பின்ன மடையா தொன்றாகி நின்ற பொருளின் பேருருவாம். 45

அந்த வுருவா னவன்பின்னை யாதே வரினு மழிவுறா, னிந்த வுலகத் துயிர்க்கெல்லா மொத்தே யிருக்கு மீங்கிவனும், பந்த மறவிட் டெனை யறியும் பத்தி பெறுமப் பத்தியினாற், சிந்தை யிடையே யெனைத்தெளியு மதனா லெனையே சேருமால். 46

என்னைப் பற்றிக் கொடுநின்றே யெல்லா வினையு மியற்றினாற், பின்னைப் பிறவாப் பெரும் பதமென் னருளி னாலே பெறுங்கண்டாய், நின்னைத் தொடரும் வினையெல்லா மென்னை

நினைந்தே செயில்வினைக, டன்னைக் கடத்தற்
கருந்துன்ப மெல்லாங் கடக்கத் தகுதியால். 47

ஒன்றிய மாத்தி ஞலே யானுரைக் கின்ற
வுண்மை, நன்றிதென் றுணரா யாயி ஞசமே
யடைதி மற்றீ, தன்றியு மாசர்க் கெல்லா மடுத்த
கா ரியமா யுள்ள, வென்றியை யடையா நிற்கு
வேறினி வினை வ கேளாய். 48

விரைசெய் தார்மன்ன வேண்டலை யாயினுங்
கரைசெய் மாயையுங் காலுற வாழ்த்திடு
மாசர் தங்குண மாகிய வாண்மையே
புரைசெய் வாளமர்க் கேபுகு விக்குமால். 49

பொறிக ளுண்ணின்ற வற்றின்பு ணர்ப்பெலா
மறிய வாட்டினன் போலாக்கை கடொறு
மறைவி னின்றுதன் மாயையி ஞல்வினைக்
குறிகள் செய்விப்ப னீசனென் றேகொள்வாய். 50

வேறப் பாலொரு வர்க்கும்வி ளம்புதன்
மாறப் பட்டபொ ருளின்வ கையெலாங்
கூறப் பட்டது னக்கிக்கு றிகளை
யேறப் பார்த்துனக் கேறிய வாசெய்வாய். 51

தீதகலா தெனவுளவோ விவன்வேண்டி
லெனத்தேறி, யோதலிஞ னினைத்தலிஞ
லெனைப்போக்கி யொன்றறியா, யாதலிஞல்
யாவர்களு மறியாத வொருபொருளைக், காதலிஞ
லுனக்கின்னு முரைக்கின்றேன் கடைப்பிடிநீ. 52

என்னையே நினைந்தெழவுன் மநத்தினையென்
னிடையேவை, யென்னையே நினைந்திருநீ மற்றெ
னக்கே பூசனைசெ, யென்னையே குருவாக்கொள்
ளெப்போது மிதுசெய்யி, லென்னையே வந்
தடைதி யிதுமெய்யே யிதுமெய்யே. 53

இருவேறு வகையாய வெவ்வேறு வினைகளையு,
மருவேனென் றறவிட்டு மாயையிஞன் மறைப்
பரிய, வொருவெனையே பற்றுதியப் பற்றிஞ
லுனைப்பிறவிக், கருவேலை கடந்தேறக் கைதரு
வேன் கதிர்வேலோய். 54

மற்றுனக்குச் சொல்லியவிம் மறைப்பொருண்
மா தவமிலர்க்குங், குற்றமறுத் தறிவருளுங்
குருவழிபா டிலாதவர்க்குஞ், செற்றமநச் சழக்
கர்க்கு மெனைநினையாத் திறத்தவர்க்கு, மற்ற
மறத் தெரிந்துரைக்கை யடாதென்றே யறி
கண்டாய், 55

எல்லாப் பொருட்கும் பரமாமிப் பொருளை யென்னன் பர்க்கிசையச். சொல்லாற் றெரிவிப் பவரென்பா லன்பு துன்னி யெனையடைவர், நல்லார் களின்மற் றெனக்கினிய நன்மை செய் இன் ருருமவ, ரல்லா தவரிப் பொழுதுமிலை மேலு மவர்க ளுளராகார். 56

ஏய விருவோம் பேசியவிவ் வறனு வினையே யெடுத்துரைப்பா, ஞய ஞான யாகத்தா லெனை யே யாரா திக்கின்றான், மேய பொருமை தனை விட்டு விருப்பா விதனைக் கேட்பானுந், தீய வினைக ளறவிட்டுத் தேவ ருலகஞ் சேருமால். 57

என்னது மொழியி னுவியா னியம்பிய ஞானத் தாலே, மன்னவ வுனக்கு வந்த மயக்கெலாங் கெட்ட தோயான், சொன்னவிப் பொருள்க ளெல்லாந் துணிந்தனை கொல்லோ வென்று, நன்னகை கூர நின்று நாயக னருளிச் செய்தான். 58

மன்னவவென் மாயமது சூதமறை நாலின்
முன்னவமொ ழிந்ததிரு வாய்மொழிக ளாலே
யென்னகுறை யுண்டினியெ னக்கெனவி யம்பித்
தன்னகம கிழ்ந்திவைத நஞ்சயனு ரைப்பான். 59

வையமுழு துண்டதிரு வாய்மலர்தி றந்திட்
டுய்யவடி யேன்முனுரை செய்தவுரை யாலே
யையமொடு மோகமற விட்டெனறி வுற்றேன்
செய்வதினி யுன்றனரு ளின்செயல்க ளன்றே.60

பையரவி லேயினிது பள்ளியமர் வோனே
வையமுமிவ் வையமதின் மன்னுயிர்க ளியாவுஞ்
செய்யும்வகை யுற்றதுசி தைத்தலது தானு
மெய்தெரியி னீமுன்விளை யாடும்வகை யன்றே.

அணித்தகைய சோதியம லாவுனரு ளாலே
கணித்தலரி தாயபிற விக்கடல்க டந்தேன்
பிணித்தபெரு மாயைமயல் கெட்டதுபி ரானே
பணித்தபணி யல்லதுசெ யத்தகுவ துண்டோ.62

பிணித்த பிறவிப் பெருந்தளையைப் பெயர்த்தென் பெரும்பே தைமைநோயைக், தணித்த வரசே யெனக்குத்தான் றகுமே யாகத் தகா தாகத், துணித்த திறல்வான் போரினையே தொடங்கு கென்று நீயிங்குப், பணித்த பணியான் செய்வனெனப் பார்த்த னவனு முடன்பட்டான்.

மாதவனுந் தனஞ்சயனுந் தங்களிலே மகிழ்ந் துரைத்த, வோதரிய பொருளினைநீ யுணர்ந்த

வா றெங்ஙனெனில், வேதவியா தன்னுடைய மெய்யருளை மிகவுடையே, ஞுதலினு லறிந்தனன் வே றறியலாம் வகையுண்டோ. 64

அப்பொருளை நினைதோறு மற்புதமா மக மகிழ்வு, மெய்ப்புளகும் வருமவன்று னிருக்கின்ற வகைவிரித்த, வொப்பரிய திருக்கோல முணர் தோறு முணர்தோறுஞ், செப்பரிய பெருங்களிப் பென் சிந்தையுளே திகழுமால். 65

எஞ்சவிலாப் பொருளனைத்து மிப்படியே புகுந்தனெனச், சஞ்சயனன் றெடுத்துரைத்து நூற்றுவர்க்குந் தாதையோய், வஞ்சனையே கண்ணுக வாழ்கின்ற மற்றவர்க்குப், பஞ்சவரே வலியவரென் றிவ்வண்ணம் பகர்வுற்றான். 66

திருவற நீதிசெ யம்புக ழெல்லா
மருவரு மாயைசெய் மாதவன் வாய்மை
தருமம்வி டாதத நஞ்சய னென்னு
மிருவரு நின்றவி டத்தன வென்றான். 67

என்றபொ ருட்டிற மிப்படி யேயாக்
குன்றமெ டுத்தருள் கொண்டல்ப ணிப்பான்

வென்றபு லத்துவி யாதன்வி ரிப்பா
னின்றவ ருக்கிது நேர்பட வற்றே. 68

வேத நூல்களின் முடிவினை வியாதனிற் பின்னு, ளோத மாக்கட லுலகிலுண் டாக்கிய வரவோன், கோதி லாநெறி யுணர்ந்தகோ விந்தமா முனிவன், பாத தாமரை பற்றிவீட் டின்பமே படைத்தான். 69

ஆற்றியல் வழுவிய புலன்க ளைந்தையும்
பாற்றிய சங்கர பகவற் பாதனென்
றேற்றிய பெயரினு னருளி னுலியான்
சாற்றின னிப்பெருந் தரும நூலையே. 70

18. சங்க்ஷேப அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 545.

பரமார்த்த தரிசநம் என்னும்

பகவற் கீதை

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# பகவற் கீதை 545 பாட்டு முதற் குறிப் பகராதி.

ஐ



ஒ



ஓ



க

மா



மி



மு

பகவற் கீதை பாட்டு முதற் குறிப் பகராதி

முற்றும் ஆக அத்தியாயம் 18. கவி 545.

ஆக எழுத்து 69.

சுபம்.



# பகவற் கீதை.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 32 | 7 | வகையினை | வகைவினை |
| 55 | 10 | பலன் | புலன் |
| 69 | 12 | வலலதி | வல்லதி |
| 73 | 8 | மெய தெளிய மாறும் | மெய்தெளியு மாறும் |
| 74 | 15 | யறையககேள | யறையக்கேள் |
| 78 | 2 | வியோமே | வியோகமே |
| 86 | 4 | களிப்பாா | களிப்பார் |
| ,, | 11 | பற்றறுவிபப | பற்றறுவிப்ப |
| 88 | 7 | மறைகளிளி | மறைகளினி |
| ,, | 10 | சஙகாரு | சங்காரு |
| 91 | 17 | கொல்லு | சொல்லு |
| 96 | 10 | வீழககண்டேன் | வீழக்கண்டேன் |
| 128 | 9 | ணீ | ணீங்கிடத் |
| ,, | 10 | | மேயினு |



திருப்பூவண மடாதிபதி, சத சாஸ்திர கர்த்தா,

## ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றியன.

| | | | |
|---|---|---|---|
| 1. | விசார சாகரம் வசநம். | ஹிந்தி மொழி பெயர்ப்பு ரூ. | 2—4 |
| 2. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா. வசநம். | ,, | 2—8 |
| 3. | கதா சரித் சாகரம். வசநம். | சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு | 2—4 |
| 4. | நைஷ்கர்ம்ய சித்தி. வசநம். | ,, | 0—8 |
| 5. | வியாச தாத்பரிய நிர்ணயம். வசநம். | ,, | 0—8 |
| 6. | வேதாந்த சித்தாந்த முக்தாவலி. வசநம். | ,, | 0—8 |
| 7. | வேதாந்த பரிபாஷை. வசநம். | ,, | 0—7 |
| 8. | ஸ்வராஜ்ய சித்தி. வசநம். | ,, | 0—4 |
| 9. | மண்டல பிராஹ்மண உபநிஷத் - ராஜ யோக பாஷ்யம் | ,, | 0—4 |
| 10. | ஈசாவாஸ்ய உபநிஷத் - சங்கர பாஷ்யம். வசநம். | ,, | 0—4 |
| 11. | ஹரி மீடே - ஹரி தத்வ முக்தாவலி. வசநம். | ,, | 0-12 |
| 12. | வேதாந்த சஞ்ஞா. வசநம். | ,, | 0—2 |
| 13. | பகவற் கீதை 15-வது அத்தியாயம் சுலோகம் உரை தமிழ்க் கவி உரை. மூர்க்க சதகம். பத உரை | | 0—8 |

| | | |
|---|---|---|
| 14. | நாநா ஜீவ வாதக் கட்டளை-சத்யார்த்தப் பிரகாசிகை உரை | 2—0 |
| 15. | கீதா சாரத் தாலாட்டு - லகு சந்திரிகை உரை | 2—0 |
| 16. | மகா ராஜத் துறவு - மநப் பிரசாதிநி உரை | 2—0 |
| 17. | பக்தி (வைராக்ய) சதக பத உரை பொழிப் புரை | 1—8 |
| 18 | வைராக்கிய தீபம். பத உரை - பொழிப் புரை. | 0—8 |
| 19. | சீடாசாரம் - பால போதிநி உரை | 0—8 |
| 20. | கீதா சாரத் தாலாட்டு - குறிப் புரை | 0—4 |
| 21. | பக்தி சதகத் தோத்திரம் - தோத்திரப் பிரகாச உரை | 0—3 |
| 22. | மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி | 0—8 |
| 23. | மந்திரோபதேசம். 8 மந்திரங்கள் உரை [கட்டாரி புச்சம்) | 0—4 |
| 24. | தாந்திரீக த்வைத சைவ கண்டநம். (சூட்டுக்கோல் | 1—0 |
| 25. | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி. 9 சேர்ந்தது | 3—0 |
| 26. | பஞ்சதசி கவி 0–10. 27. வாசிட்டம் கவி | 2—4 |
| 28. | விவேக சூடாமணி-அஞ்ஞ வதைப் பாணி கவி [கீதை கவி) | 1—0 |
| 29. | கீதாத் திரயம் (ஈசுவர கீதை. பகவற் கீதை. பிரஹ்ம | 3—0 |
| 30. | திருக் களர் வீரசேகர ஞாந தேசிகர் சரிதம். வசநம். | 1—0 |
| 31. | கைவல்ய நவநீதம் கவி 0—9. 32. ஈசுவர கீதை கவி | 0—4 |

உ 3047

ஸ்ரீ வியாச பகவான்
சம்ஸ்கிருதத்தில் இயற்றிய
ஸ்காந்தப் புராணத்துள்ள
சூத சம்ஹிதையில்
(சொரூபாநந்த சித்தி)

# பிரஹ்ம கீதை.

இஃது
இறும்பூதூர்
ஸ்ரீ தத்துவராய ஸ்வாமிகளால்
தமிழில் செய்யுள் வடிவமாக
மொழிபெயர்க்கப்பட்டு.

திருப் பூவண மடாதிபதி
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்
அவர்களால்

மதுரை, கருணாநிதி பிரசில் பதிப்பிக்கப்பட்டது.

 1958 [விலை ரூ. 1/-

உ

# முக வுரை.



மக்கள் யாக்கையைப் பெற்ற ஜீவர்கள், பந்தம் நீங்கி முத்தி பெற வேண்டும் என்னும் கருணையினால், ஸ்ரீ வியாச பகவான் 18 புராணங்களைச் செய்தனர். பின்னர் உப புராணம் பதினெட்டுச் செய்தார்கள். உபபுராணத்தில் அடங்கியது, ஒரு லக்ஷம் சுலோகம் உடையதாய், ஆறு சம்ஹிதை உடையதாய், உள்ள ஸ்காந்தம் என்னும் புராணமாம். அதன்கண், சூத சம்ஹிதை என ஒரு சம்ஹிதை இருக்கின்றது. அதில், யஞ்ஞ வைபவ கண்டம் என ஒருகண்டம் இருக்கிறது அதனுள் பிரஹ்ம கீதை என 12 அத்தியாயத்தில் 1058 சுலோகத்தில் பிரஹ்மா தேவர்கட்குபதேசித்ததாக ஒரு நூல் இருக்கின்றது. அவை பூராவும் வேதப் பொருளை விளக்குவன ஆம்.

இந்தச் சூத சம்ஹிதையில் வியாச பகவானது அபிப்பிராயம் யாவும் சூத முநிவரரால் விளக்கப் பட்டிருக்கின்றது என கூறப்படுகின்றது.

இந்தச் சூத சம்ஹிதையை, சிவ அவதார ஜகத் குரு ஸ்ரீசங்கராச்சார்ய ஸ்வாமிகள் வியாச பகவானது உள்ளக்கிடக்கையை அறிந்து கொள்ளும்பொருட்டுப் பதினென் முறை மீண்டும் மீண்டும் பார்த்தார்கள் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

இவ் வித அருமை வாய்ந்த பிரஹ்ம கீதை என்னும் நூலை, இறும்பூதூரில் சமாதி யுற்றிலங்கும் ஸ்ரீ தத்துவ ராய ஸ்வாமிகள் 547 கவிகளில் தமிழில் மொழி பெயர்த்திருக்கின்றார்கள். இதனை தமிழில் இயற்றி முந்நூறு வருடங்கட்குமேல் இருக்கலாம்.

இத் தமிழ்க் கவிக்கு, கோடக நல்லூர் சுந்தர சுவாமிகள் ஓர் உரையும், சிதம்பரம் ஸ்ரீ பொன்னம்பல ஞாந தேசிக ஸ்வாமிகளவர்கள் வியாக்யாந ரூப ஓர் உரையும் செய்திருக்கின்றார்கள்.

இக் கவியினை மட்டும் படிப்பவர்கட்கு உபயோகமாகும் பொருட்டு டப்ள் கிரௌன் 1×32 பேஜ் சைசில் சிறிதாகப் பாக்கட்டில் வைத்துக் கொள்ளும்படியாக அச்சிட்டிருக்கின்றோம்.

திருப் பூ வணம், வேதாந்த மடம்.

உ

சிவமயம்.

# பிரம கீதை

## 547 பாக்களின் தலைப்புக் கவி-14.

## 14 சீர் ஆசிரிய விருத்தம்.

1. சொல்-இரவி கண்-முன்னை நித்த-மயல் தாரு-மன் வான்-சந்தே அன்பி, தாதா-சூதனு வேத-இன் மறை-பண்டு பாவ-சக ஐம் - இந்துவளமா-பூர்ண, பல்-சித்தி வெடி-மேவி மத்த-கற் பக ஆர நித்த-தம கஞ்ச ன-அழுத் பரம-அடை அகி-வேத தோத்-ஈச அன்-பத்தி யா-முப்பா னென்ப தாகும், நூல்-மறைகள் சிந்-அந்த பர-வானி தத்-காத வான்-பொருள் வேத மோதி-சொல்லுரு கனவிற்கற் போதக்கண் கனவிற்கண் வேதநெறி தண்ணளி வேதம், அல்-மைய காது-தருமம் முன்னை துட்டரு அவத்த-இரு பத்திரண்டாம்-அமர் ஐத ரேய-உப நிஷதார்த்தம் உரை அத்தி யாயமிரண் டாவ தோவே.

2. ஓவ-ற்றன் றுவ(து)தற் பர-சான்ற உலகெலாம் பானரு உலகு தொல்லை ஓது நெறி நிகிலலோ தெரி-விலா அன்றியநு ஆதலால் சிலவர் தாமி, வாவ-யா

தையு-பிர மன்-ஏனை மையலொன் அந்த அஞ் ஞான
மாயா-வாயுவென் பரமனு யாதொன்று அன்னிய
சச்சிதா னந்த இன்பம், விவ-யா தொரு-தானெ
வெளி-அங்கம் தந்தமளபருதிநெஞ் உருத்தி ரன்மான்
விளம்பும்வா யாதொன்றின் அன்புறுகு செய்வான்
செய் தூய்க்கு மவன் றுன்-கடபட, ஆவ-மே ரும-
வான்மு வினைமிகுவி தீதெனும் பேதமாம் தனன
தொளியால்-அயல்-அன்பின் உலகி-அறை யும்-கீதம்
ஆதலால் நாற்பத்தெட் டேபின் சதுவே.

3. சது-வான்ஞெரு தானேயுள் நாவுரை இந்தியம்
தன்னில்-வாக் வாக்கு ஆன-தனக்கு-பித் தாஞான
தர்க்க-ரோக் குரு-விச்சை ஆதலான் ஆதல் வேறில்,
அது-ஓது இந்தப்ப இந்தவா தங்களி-தன் னில்-
ஒருஜா தத்வ எப்ப-அன்னியமா பேதமும்
எப்பொருளு பெருமை-இது வே-ஐயன் உவமை
சாற்றி, புது-பரம சத-தேவ கல-திருவ இய-அனலன்
அத்தனங் அவன தியல்பை-புரந்தரன் அங்கவே
உமை-தன்னே அத்தன்-அன் றுமால்-சம்பு ஒழிவி
மொழியும், இது-ஓதி செப்பி-பர கதி-ஆதல் சாக்கி-பர

ஆரணத் தொல்லை நல்வி—ஈசனு ஒப்ப-சதுர் ஏறு-ஆதல்-ஓதி சுரரிலுத் தமரே சாந்தோ

4. சாந்தோக்கி யம்ஜுந்தா வதுஅர்த்தம் மறை-யாதொன் மண்—உலக காரிய மெல்லாம் சத்தாயே காரண சத்தைதான் சத்தையில் லாத-கா ரணசத்தையே ஈந்து-சத் தாய்க்கொண்டே காரியம் இன்ன தோர் இதற்குநீர் கார ணத்தோ இரண்டுக்கும் உண்மையில் எல்லாவி காரணம ஆமென்றெ கூறும் பொருள் காந்து-அயல் பேதங்நெறி மண்ணும்வனை வனைகின்ற வன்·தோன்ற லால சித்து காரணமே உண்மைசித் அறியாதார் அசத்துத்தன் அசத்தின் கண் அசத்தின் றன்சத், தாந்து-அசத் துத்தன்சத் பூதத்தால் எல்லாமுன் காலமுங்கன் பார்த்த பின்முன் தன்மாத்தி அறியாமை ஈசனும் அனலினில் ஆதித்தன் அறிவொ டு-அப.

5. அப-பூதம் ஊனிந்தி ஊானுதி கடையப்ப அன்னத்தா நிறை-தே கேந்தி-அப்போது ஆதலால் காண்பவன நீ யென்கி சொல்லிய உடம்பா தற்ப, துப-அதுவென் தத்துவம் இப்படியன் அறியாமை

நோக்குமிட பிரமா அறியா-தோன்றுகூட் உருவமா அன்னியத் பின்னமென் பாராத எல்லா மஞ்ஞா, பப-இப்ப கேட்பவன் இத்தாலி சுகமொடு எல்லாம் பொய் ஓது கின்ற-பரமாயுள் சாதனம் சகமொடுசீ ஈசன்ச இத்தன்மை எப்ப டிப்பொ, செப-யாதொ ருபடியில் யாதொரு படியினுல் எப்படிப் பூத போதம் சிவனிதுவன் எல்லாமு எப்பொருள் சகரூப ஆனதா பிறப்பி ஆகி.

6. ஆதி-ஈ சன்றனருள் சுத்தமா சிவனேயுள் ஆதரமு பத்த ராயுள் - அன்பராய் இவ்வணம் அப்பொழுது நீடொளி அளவிலா நித்த ராயுள், ஊதி-கடு கியுமுயர் வானவர் அன்பிலம் தலையினுல் ஓடி ஞர்சி - உவமையோ சத்தியம் உலகம்யா- அப்பாலா பூதமா கூறு மோஸை நாதி-தோன் பாடும்- அள வை-தேவர் கரண-நா தம்-யாதொன் யாதின்- அகமெ-நானே-இப் பொருள்-பாச மோ-சாந்தம் உலகம்-தே வர்க்கு-மே லாய பேரா, யாதி-அரி யும்- அயனும் மாநுடர் தாஞகும் யாவஞெரு அருளி ஞல்யா யாவரொரு வர்--தன்னி லே--எல்லாப் பொருட்குமேல் நூற்றுநாற் பத்துப் பாவே.

7. பாவ-ஆ ருவது சாந்தோக்ய தாற்பரியம் பங்கய புகல தெரிவி-பகர் அறிவின் அளவில்-இல தெனு-மெய்யின் பொற்பொ-விதம் சுழுத்தி-இது பரம்ப ஆதல், தேவ-செப் பிய-தற்ப உடம்-அப்ப இந்தம-பின் னக-உளவா சிவனே பரையா-திவகரன் புரண- ஆ கம-நானும் எறிக-ஓ தலு-இதச திண்ணி தாக, காவ-பா முப்பதே ஏழாவ தாம்முண்ட கம்-நீண்ட எப்பொ இங்கு-காண-சிலந் தியு-பன்னு யாது-அக் கர-கரும தொலே-சுருதி எங்கும் அங்கி, ஈவ-அர்க் கன்-மெய்ம்மை வரக்-மருவி அக்க-தா ரம்-அரணி பரம்பொர்-இதயம் இலங்க-ஓ ரொளி-இந்த தற்பரன் பன்னு மறை திதமா-சின் மயமா-கும்மே.

8. கும்-பாவ உடம்-எப்ப சீவன்-வே தம்-வாக்கி அருளி-எத் தைப்பெ எண்ணி-கூ-அயர்ச் இப்பரம் அந்த-வீ டிலா-மிக்க சோகமோ அச்ச மாகி, மும்-பாக்கள் நாற்பதா றே-எட்டா வது-கைவல் லிய-அர்த்தம் நனிவே ஈசன்-முத்தியின் திரமாம தக்கஞா பத்தியால் உரியநால் தெரிவ ரியசிற், மம்-ஓழந் ததொ-இன்ன தாக்கரும் உறங்குமவ் சொல்லிடும்

ஆத லால-மா லுரு புறங்கண்மூன் விழுமிதா சிவனன் இந்தப்பு ஈன மாகி, செம்-நீயென் ஆதரத் முகலுமுப் அறுவிநுக் கண்ணுஞ்செ ஒது வேதம்-சிறப்புடை எணையொழி கைவல்லிய பண்டைநான் முப்பதே கவிகள் ஒரே.

9. ஒர்-ஒன்ப தாவது பிரகதா ரணியபொருள் துன்பமா ஈச னுக்கு-உயர் -வேதி யார்-மத்த பின்ன- அல் லாமறை அத்துவித வேத மாக, ஊர்-கிருமி உள்ளபே ஆதலால் வேதநூல் கனகமத பலவ தேசி-ஒழிவிலா இப்படி உரையாடு இருபதே மயித்ரேய பிராம ணர்த்தம், ஏர்-பத்தா வது-பிரக தாரணிய அந்தர்யா மிப்ராம ணர்த்தம் நாத-எப்பொ-இந் தப்-உடம் வினவு-பா ரிலே-அந்தர் அரசாகி உருத்தி ரவுல, மேர்-உடைய காண்டல்-சித் தம-பின்ன இது-தற்ப நிலே-பூத குறி-சத்தி வேள்-மெய்-மேவு மாயதே சிக-ஆதல் ஒருவரால் இருபத்து ஏழு கவியே.

10. கவி-பதினொ ராவது கடவல்லி சுவேதாசு வதர-உப நிஷத அர்த்தம்-கா பன்னு குகை-தருமா அந்தப்ப பொன்ற-அண் ணிய-நின்று இகழு, ஏய,

பிவி-தேசின் மோக-வருத் தம்பொருந் அருள-இந் தியபுருடன் வாக்-ப ரப்பி-பேதம்-சுத் தப்ப-மூன் றுகி-பர மிக-வன்னி எல்லாம்வ யாவன் இதுவ. சுவி-அரச எச்ச-உண் ஒருவர்-முப் பத்தொன்று கடவல்லி பின்-அ தனெடு-சுவேதாசு வதரம்-வித் தம-மெய்ய பெரியதா அறிவனு நாசம் ஈசன். அவி-மேவி தீமரம் உலத்-ஆகு மிக்க சித் அரியமா பன்னி ரண்டு-ஆகக்-கட வல்லி-சுவே தாசுவத ரம்மொத்தம் நாற்பத்து மூன்று பன்னே.

11. பன்னிரண் டாவதுமுன் சொல்லிய உபநிஷ தங்களின் மொத்த அர்த்தம்-பா-வகுத் பாடுகின் மாசதில் பத்தியால் ஊனிலொரு செறிவா யெங்கும், அன்-அடைய மாயையென் யாதொரு ஆசையால் மெய்யைநா யாதொ ருபடி-அப்படி அம்பிகா ஞானமா நேசநெஞ் தேசிகன் அருவெ னுமம, புன்-உறுவ இந்தவி உண்டுபோற் காட்சியை வருபிறப் பறவே எல்லாம்-போதவடி ஆதிவே தேவரும் போற்றியே மாலுமவ் தெரியி லந்த, பின்-அமையா தொல்லைவே பரமமா பிரமனு மாலுமா உத்தம இனி-பிரமகீ தைச் செய்யுள் ஆகமொத் தம்பகரின் ஐந்நூற்று நாற்பத் தேழே.

# பிரஹ்ம கீதை.

## பாயிரம்.

இரவியு மதியும் வானும் வாயுவு மனலு மப்பு, முரவிய மண்ணு மற்றை யுணர்பவன் றானு மாகிப், பரவிடுங் கரணம் பன்னுன் காயுமன் றுயு நின்றே, யுரைமன மிறந்து வோங்கு மொளியினை வணங்கல் செய்வாம். 1

கண்முதற் புலன்க ளந்தக் கரணங்கள் விளங்கு மெத்தாற், றண்மதி யருக்க னங்கி தாரகை விளங்கு மெத்தல், விண்முதற் பூத மியாவும் விளங்கிடு மெத்தா லந்த, வுண்மையைச் சிவப்பிர காச வொளி யினை யுளத்துள் வைப்பாம். 2

முன்னைநற் சுருதி யோதி முடிவுறற் கரியதாக, வின்னமத் தேவர் மூவ ரெய்துதற் கிடரே மேவத், தன்னையிப் படியே காணத் தாளளித் தெனக்கோர் வார்த்தை, சொன்ன நற் சொரூபா நந்தச் சோதி யைத் தொழுதல் செய்வாம். 3

நித்த னிர்க்குண னின்மல னிடொளிச்
சுத்த னேகன்சு ருதித்தொ டர்பிலா
னத்த னென்னையு மாண்டவ ருளினன்
றத்து வன்றிருத் தாளைவ ணங்குவாம். 4

மயலில் வானவர் கேட்பம யக்கற
வயன்மு னுட்சொன வாரணத் துட்பொரு
ளியலு மாசொரு பாநந்தச் சித்தியென்
பெயரி னற்றமி ழாலிங்குப் பேசுவாம். 5

தானு காதி யாவையுமாந் தன்மைத் தூய வொரு பொருளை, யூறு மென்றன் வாக்கதனு லுண்மை யறிய வுரைத்திடுதன், மாநா கந்தான் மலர்தலையில் வையந் தரிப்ப மற்றதுபோற், பூநா கந்தான் பொறுப்பனெனும் புன்சொற் போலும் புகலுங் கால். 6

மன்னிய கமலத் தோன்றுள் வானவர் வணங்கி யெல்லாம், பன்னரு மறைய ருத்தம் பகரென வினவு மாறு, முன்னதின் மொழிந்து பின்னர் முளரியந் தவிசின் மேலோ, னின்னிய லிருக்கி லேத ரேயம

தியம்பு மாறும். 7

வான்முன் முதலா மனைத்துலகும் வானோர் முதலாம் வருபிறப்பு, மீன்று ளிருக்கிற் றைத்திரிய மியம்பும் பரிசை யியம்புவார், மூன்று மோத்தி லுரைத்தாதி மூலப் பிரமந் தனைத் தேடச், சான்றோர் சொன்ன நெறியைவிடாச் சதுர்த்தத் தாலே சாற்றியபின். 8

சந்தோ கத்திற் சட்டந்தா னுரைக்கும் பரிசைச் சதுர்முகத்தோ, னைந்தா மோத்தி லுரைத்தாறி லேழு மெட்டு மாங்கறைந்தான், மைந்தார் முண்டங் கைவலிய மறையின் பொருளை வையமெலாந், தந்தான் சத்த மத்தாலு மட்ட மத்துஞ் சாற்றிய பின். 9

அன்பினு லகில லோகம் படைத்தவ னமரர் தங்கட், கின்பமா ரணுபி ரகதா ரணத்திசை மயித்ரி யத்தை, யொன்பதா லுரைத்துப் பத்தா லுடத்த முங் கார்க்கி தானும், பின்பதா யந்த ரியாமிப் பிராமண விடயம் பேசி. 10

தாதா வேகா தசந்தன்னிற் றக்கோர் சொல்லுங் கடவல்லி. சுவேதா சுவதர மெடுத்து ரைத்துச் சொன்ன தெல்லாந் தொகுத்தொன்றுய்த், தூய்தா யருளிச் செய்தத்தி னிரா ரேத்தாற் சொல்லின்பப், போதா லபத்தோன் புகன்றபொரு ளியானுந் தமிழாற் புகல்கின்றேன். 11

## பாயிரம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் - 11

---



# பிரஹ்ம ஸ்துதி.

## 1. தேவர்கள் பிரஹ்மாவைத் தரிசித்து வேதார்த்தம் வினவும் அத்தியாயம்.

---

சூதனை முநியை நோக்கித் தொல்லைமா முநிவர் சொல்வார், மாதவா வினவிற் றெல்லாம் வகுத்துநீ தொகுத்துச் சொன்னை, யாதி நான் முகத்தோன் கீதை யறியவா தரித்தோ மின்றன், சுருதிமா முநிக ளெல்லா மீளவு முரைக்க லுற்றார். 1

வேதநூ றெரிந்தோ னேலே விஞ்சையும் விளங்கப் பெற்ற, யாதலா லியாது முன்னை லறியலா காத தில்லை, மேதையான் மிக்கா யெங்கண் மேலுனக் கன்புண் டாகி, லோது வாய் போதோன் சொன்ன வுபநிடப் பொருளை யென்றார். 2

இன்ன பரிசை முநிவரெல்லா மியம்பக் கேட்டங் கிமையவர்கண், முன்ன மொருநான் மறையோதி முடிந்த பொருளோர்ந் துணராம, லன்ன மிசையோன் றனைக்கேட்ப வண்டத் தவர்கட்

கவனருளாற், சொன்ன பரிசைக் கேளுமெனச் சூதன் சொல்லத் தொடங்கினனுல். 3

பண்டொரு கற்பந் தன்னிற் பழமறைப் பொருளை யெல்லா, வண்டருங் கூடி யாய்ந்தங் கறியலா காமை யாலே, யெண்டரு மாதவத்தை யெய்தியே யிதனைக் கேட்பப், புண்டரீ கத்தில் வாழும் புனிதனை நோக்கிப் போனுர். 4

பாவவே ரறுக்குந் தீர்த்தமென் றெண்ணப் பட்டன யாவையும் பரப்பித், தேவரோ டியக்க ரரக்கர்கந் தருவர் சித்தர்சாத் தியர்களுஞ் செறிந்து, நாவினு லறியு மறுவகைப் பட்ட விரதமு நலம்பெற வுடைத்தா, யோவிலா தொழுகு மருவிக ளுடைத்தா யொருபொரு ளொழிவற வுடைத்தாய். 5

சகல யோகிகளு மேவவினி தான தனிசேர்
குகைகள் கோடிபல கூடியுள கோடி பலவாஞ்
சிகர மேவுநவ மாமணிகள் சிந்தி யுளதாய்
நிகரி லாமனிகழ் மேருகிரி நீண்மு டியின்மேல். 6

ஐம்பதிற் றிரட்டி யோசனை நீளத் தைம்பதிற்

திரட்டியே யகன்று, கம்பநற் கரியை முதல்வரு மிருகக் கணங்களா லாகுலங் கனத்துச், செம்பொருள் கொழிக்குந் திர்த்திகை யுடைத்தாய்த் திரண்டபுள் ளினங்களு முடைத்தாய்ப், பைம்பொழிற் செழுந்தே னருந்திய வறுகாற் பறவையி னொலியினுற் பரப்பி. 7

இந்து பாநுவென் றிருவரு நிலவினே டிள வெயிற் பாரிப்பக், கொந்து பாய்தரு சோலையின் கிழங்குகாய் கொழுங்கனி வழங்கத்தண், சந்த நாடவி புகுந்துவண் டுலவுதண் டாமரைத் தடந்தோய்ந்து, மந்த மாருதந் திரிதரு பிரமமா வநமுள ததன் கண்ணே. 8

வளமாமதி லொன்பதோ டெண்பது வாசலாகி, யிளநாயிறு போலவி ளங்கியி லங்குமொள்வாள், வளைநேமிகொ டுஞ்சிலை தண்டும முக்கள்வல்லோ, ரளவோ தவி லாதவர் காப்புடைத் தாகியெங்கும். 9

பூரண கும்ப மெங்கணு நிறைத்துப் பொன் றிகழ் நித்திலம் புணர்ந்த, தோரண முயர்த்துத் தூய்மலர் துதைந்த சுகந்தமா லைகள்பல தூக்கி,

யேரணி தீப மேற்றியெம் மருங்கு மேழிசை யாழி
லெங் கெங்கும். வாரணி கொங்கை மடந்தையர் பாடு
மாடமா ளிகைவரம் பிலதாய். 10

சித்திர மமைத்த பித்திகோ டிகளாற் சீர்பெற
விளங்கிமா ணிக்க, வுத்திரம் வயிரப் போதிகை பவள
வொளிமணித் தூணிரை பொதிந்து, நித்திலத் தாம
மெங்கணுந் தூக்கி நித்தில விதானமே யெங்கும்,
வித்தரித் தோங்கி வியனெடுங் கொடிகள் விண்ணள
வெறிந்துமீண் டுளதாய். 11

வெடிபட வுச்ச மந்தமத் திமமாய் விளங்குகா
களவொலி யொருசா, ரிடிபடு முரச முழக்கொலி
யொருசா ரியம்புவாச் சியவொலி யொருசார்,
வடிவுடை மகளிர் கூத்தொலி யொருசார் மறையவ
ரோத்தொலி யொருசார், முடிவறு மிருதி புராணவா
கமங்கண் மொகுமொகென் றெழுமொலி யொருசார்.

மேவிய சகலா கமங்களின் பொருளும் விருப்புட
னுய்ப்பவ ரொருசார், காவிய மென்னும் கனியினை
நுகர்ந்து களித்திடு முளத்தவ ரொருசா, ராவியோ

டாக்கை யுறவறி விருநா லங்கத் துயோகிய ரொருசா,
ரோவியம் போல விருந்துணர் விறந்த வுணர்வு
கொண் டுறங்கின ரொருசார். 13

மத்தநற் களிறும் வயிரநற் றேரும் வாசியும்
வரம்பில தாகி, யத்திரத் தாலுஞ் சத்திரத் தாலு
மளவறு வீரர் காப் புடைத்தாய், மெய்த்தவர்க்
கெளிதா யல்லவர்க் கரிதாய் வேண்டிய பொருளெலா
மீண்டி, யித்தகைத் தான விடத்திலா யிரக்கா
லிலங்கிய விரத்நமண் டபத்தே. 14

கற்பக தருவு மகரதோ ரணமுங் கவின்பெற
வமைத்துள தாகி, யற்புத மான வரிமுகத் தறுகா
லாசநத் தம்பஞ்சி யணைமேற், சொற்பத வடிவாந்
தோகையோ டெல்லாப் பொருளுமாய் விளங்கிய
தோன்ற, லுற்பவ மறுப்பா ஞகவீற் றிருந்தா
னும்பருங் கோயிலுட் புகுந்தார். 15

ஆரமணி குண்டலமொ டாழிகட கங்கே
யூரமபி டேகமுத லொப்பனைக ளுஞ்செய்
தாரமகி ழுபிபனி நீரொடள வுங்கர்ப்
பூரமது கொண்டுதிரு மேனிநனி பூசி. 16

நித்த மானதன் ஞெளியிஞ லனைத்தையு நிகழ்த்துநின் மலனேடை, வைத்த செம்பொ னிற்றிகழ் திருமேனியின் மாலிகை பலசாத்தி, யுத்தரீகம்வெண் ணெக்ஞோ பந்திக மூதரபந் தநத்தோடு, சுத்த மானவெண் கலிங்கமுஞ் சாத்திநற் சுராசுரர் தொழுதேத்த. 17

தமத்தை யப்புறங் கடந்துநின் றறிவுறு சான்ற தாய் மதனெல்லா, மமைத்தொ ருத்தரா லமைத் திடப் படாதுள வமூலஞ யிருப்பானை, யிமைத்தி டப்படா விழியிஞ லிமையவ ரியாவருங் கண்டிந்தச், சுமைக்கி னைத்தன மென்பவர் போலவன் றுணையடி தனில்வீழ்ந்தார். 18

கஞ்ச நற்கழல் பணிந்தம லனைமிகக் கண்டுகண் களிகூர்ந்து, மஞ்செ னச்சொரி தரமயிர்ப் புளகிதம் வரமகிழ்ச் சியினேடு, நெஞ்ச நெக்குக நிமலரா யவாவெலா நீங்கிநீண் முடிமேலே, யஞ்ச லித்தகை யினர்களா யாநந்த வாரியிற் படிந்தாடி. 19

அழுத்த மிக்கதி பத்தி யாலவ சத்த ராயுள

வண்டர்தங், குழுப்பு விக்கண்வி ழுந்து மீளவெ ழுந்து தங்கள்கு ரல்களுந், தழுத்த முத்தெம துற்ப வங்கட விர்க்கை யேதக வென்றுதாம், வழுத்த வுற்றனர் வல்ல வாமறை சொன்ன வா று த ம் வாய்மையால். 20

பரம ஞானமாம் பாற்கடல் பண்ணிய பரமனே யடியோற்றி, கரத லாமல கத்தினேர் பரவொளி காட்டிடுங் கழல்போற்றி, யொருப ராபர மன்றிநீ யொருவனு மாகிய வொளி போற்றி, பிரம நாரண சங்கர போற்றியெம் பெருமநின் பதம் போற்றி. 21

அடைய நீயறிந் தொருவரா லுன்னையிங் கறிவரி யாய்போற்றி, தொடைய தா முல கனைத்தையுந் தரித்தொரு துவக்கறு சுடர் போற்றி, முடிவு மாதி யுங் கண்டுநீ முதன்முடி வின்றிய முதல்போற்றி, வடிவி யாவையு முடையையா யுனக்கொரு வடிவிலா தாய்போற்றி. 22

அகில மா ய கி லத்தினுக் கதிபனு யகிலமு மொன்றின்றி, நிகழு ஞானமா நிமலனே போற்றிநீ

நினைத்திடு மிடமெல்லா, முகம தாயொரு முகமுனக் கின்றி யே யிருக்குநான் முகபோற்றி, திகழு முன்னொளி யாற்றிகழ்ந் திலங்கிய சின்மய வொளிபோற்றி. 23

வேத மோதிய விமலனே போற்றிவே தாந்த மெய்ப் பொருள்போற்றி, காது மாபிற விக்கடல் கடத்துநின் கழலிணைப் புணைபோற்றி, சாத லான தும் பிறப்புமற் றிருந்துள சம்புவே கழல்போற்றி, யேது மாயினும் போற்றியோ ரளவிலா வின்பமே கழல்போற்றி. 24

தோத்தி ரஞ்செயப் படுபவ னாகியத் தோத்திரந் தானாகி, யேத்தி நிற்பவ னாகியே யிருந்துள விறை வனே கழல்போற்றி. காத்தி ரந்தனை யெடாவகை மெய்யினைக் காணவே நினைவோர்க்கு, நேத்தி ரங் கொடுத் தருளியங் கவர் துயர் நீக்குநின் மலபோற்றி.

ஈசனுக் கன்ப ரானர்க் கன்பனா மிறைவ போற்றி நாசமற் றிருப்பாய் போற்றி நாரணற் கினியாய் போற்றி, யாசையற் றவர்க்கு ஞான மருளுவாய் போற்றி யல்லாப், பாசமுற் றவரை வெய்ய பவத்

திடும் பகைவ போற்றி 26

அண்டருக் கதிப ராலு மறிந்திடற் கரியாய் போற்றி, பண்டுடைப் புவந மெல்லாம் படைத்திடும் பரனே போற்றி, கண்டிடப் படாதே யெல்லாங் கண்டிருக் கின்ருய் போற்றி, புண்டரீ கத்தில் வாழும் புனிதனே போற்றி போற்றி. 27

பத்தியா லிமையோ ரிங்ஙன் பங்கயத் தவனைப் போற்றிச். சுத்தவே தங்க ளோதித் துணிந்தமெய்ப் பொருளை யெங்கட், கத்தனே யருள்செய் கென்ன வவர்களா தரத்தைக் கண்டே, புத்தியாற் போதோ னுண்மைப் பொருளையே புகல லுற்ருன். 28

1-தேவர்கள் பிரஹ்மாவைத் தரிசித்து
வேதார்த்தம் வினவும் அத்தியாய முற்றிற்று.
ஆகச் செய்யுள் - 39.

---

# வேதார்த்த விசாரம்.

## 2. ஐதரேய உபநிஷதார்த்தத்தை உரைக்கும் அத்தியாயம்.

---

மறைகளோதுபொருடன்னை யெவ்வழியி னுலு மெக்கலையும் வல்லரா, மறிஞராலுமறை யப்ப டாதறிய வாதரிக்குமிகு மன்பினீர், செறிதலாலதனை நான்வி ளங்கவுரை செய்ய வொன்றுபடு சிந்தையா, னெறிய தாகவிது கேண்மி னென்றயனு நேர்மை யானபொருளோதுவான். 1

சின்மாத் திரமா யுள்ளவெறுஞ் சிவனே திகழ்வா னியாதுக்கு, முன்மாத் திரமும் வேறில்லை முற்று மவனே மொழிவுற்ற, நன்மாத் திரமா யாந்மாவென் றுரைக்கு நாமத் தினையுடையான், றன்மாத் திரமே யாகியவத் தன்மை யான சங்கரன்றான். 2

அந்தத்தள தன்சத்தியை யடைவுற்றுள தாமிச், செந்துக்கள்செய் கருமந்திகழ் காலம்பரு வஞ்செய். தெந்தப்பொருள் களுமாக்குவ னெனவே யிறை யுன்னுப், பந்தப்பட முன்போற்பல வுலகங் கள்ப டைத்தான். 3

பரமன்செய லறியாதுப டைத்தானுல கெல்லா, மரனென்பவ ரரியென்பவ ரயனென்பவர் சிலரிந், திரனென்பவன் முதற்றேவர்கள் செயலென்பவர் சடமா, மருவுங்குண வடிவென்பவ ரணுவென்பவர் மயலால். 4

வானிலா வோசையென்பர் வங்தொரு கணத்திற் றோன்றி, யானியாம் புந்தி யென்பா ரடையவுங் கெட்டு நின்ற, சூநிய மென்பார் பூதத் தொழிலெனச் சொல்லா நிற்பா, ரானவா றுருவ ராலன் றடையவு மியல்பே யென்பார். 5

தத்தமா லான பெத்தவா தியர்தாங் தங்களிற் றுங்கடர்க் கங்கள், கத்திடா நிற்கும் பரிசெலாஞ் சுருதி மிருதிகள் கருதிய தழிக்குஞ், சுத்தமா விருத்த மாகுமென் றேயென் றுணிவுதொல் பிறவியிற் சுழல் வார், சித்தமா னதுபோ யிவற்றிலே காதல் செய்யு முன் செய்ததீ வினையால். 6

காதலாற் றத்தங் கடவுள ரருளாற் காலபா கத்தினு லறத்தாற், போதரா தலினுல் வேதவா

தத்தைப் பொருந்துவர் புகன்றவவ் வடைவே, வேதாவா தத்தை மேவுநல் வினையால் விருப்பினு லன்றிமே வினருஞ், சாதலா னதுவும் பிறத்தலு மில்லாத் தற்பதந் தன்னையே சார்வார். 7

வான்கரு தியமறை வழியை விட்டுமேற்
ருன்கரு துதல்சது ரன்று தன்கையிற்
றேன்கமழ் திரளையைச் சிந்திச் சந்தியாக்
கூன்கையில் விழுந்துளி கொண்ட தன்மையே. 8

பொருள்கொண்ட மறைநின்று புகல்கின்ற துணரா, மருள்கொண்ட சமயங்கண் மதிகொண்டு கதியா, யருள்கொண்ட பரவின்ப மடைகின்ற வவர்போ, லிருள்கொண்டு பொருள்கண்ட வவரன்றி யிவரார். 9

வேதமோ தியதே மெய்ப்பொருண் மற்றைப் பொருளெலா மித்தையே வேத, மோதமே வுற்ற பொருளிரு வகையா மதனிலொன் றென்றுமுண் மையதாய்ப், போதவா நந்த மாகிய சிவனும்

பொருளது மற்றதப் பொருளி, லேதமே வாமற் கற்பித மாகு மற்றத னியல்பையு மிசைப்பாம். 10

சொல்லுறு நின்ற கற்பிதப் பொருளிற் சொல்லள வுள்ளதா யுண்மைக், கில்லையா யிருக்குஞ் சில பொருள் சொலவு மில்லையாஞ் சிலபொரு ளவைதா, னெல்லைதீர் வான திகளுஞ்சுத் திகையி லிரசதா திகளுமா முன்னைத், தொல்லையாம் பொருளுங் கற்பிதத் துண்மைப் பொருளையுஞ் சொல்லுநற் சுருதி. 11

கனவிற் கற்பிதப் பொருள்போல் வாதக் கலக்கங்க, ணனவிற் கற்பிதப் பொருளை நவிலா ரினியச்சிற், கனவத் துவிதத் தினையென் கண்ணுற் றவர்கண்ணுற், சொனவத் தகமு மெய்யே மெய்யிற் றோன்றுதே. 12

போதக் கண்ணிற் பூதம் பொய்யே மெய் யேயாம், பேதக் கடகுட் டியமா நிகழ்விற் பேதந்தா, னேதப் படுசுத் திகைவெள் ளியின்மெய் யுணர்

காலஞ், சேதப் படுமக் கனவிற் பெரிதும் திட முண்டோ. 13

கனவிற் கண்ட பொருணனவிற் காணும் பொருளைக் காட்டலா, னினையிற் சமய நெறிவேத நெறிக்கு நிமித்த மானினைமின், வினவிற் சமய வெறி விட்டு மேலாம் வேத நெறிநின்றேன். பினையச் சமயத் தவர்க்குறுகிற் பிராயச் சித்தஞ் செய வேண்டும். 14

தண்ணிய சமயிக டங்கள் பந்தியி
லுண்ணுத லவங்களோ டுறவு பண்ணுதல்
புண்ணிய மறிந்திடப் புகுதல் செய்திடிற்
பண்ணுக சாந்திரா யணம்ப கர்ந்தவா. 15

வேதஞ்சொன படியொழிய வேறுஞ்சில கலை களினை, யோதுந்திற மருவிமறை யோதுஞ்சிவ னிருகமலப், பாதந்தொழ நினைவிலர்கள் பாசண்டிக ளெனவறிக, தீதொன்றிய வவர்களொடு சேருங்கலர் களுமவர்கள். 16

மையறு வேத மார்க்க மறந்துபா சண்ட மார்க்கக், கையரான் மயக்கப் பட்டுக் கலியுகந் தன்னி லுள்ளோர், மெய்யுணர் வநந்தா நந்த மேனியாஞ் சிவனைப் பூசை, செய்யவா தரியார் செய்வார் தம்மையுஞ் செய்ய வொட்டார். 17

காதும்வா தியர்க ளாலே கலியுகத் துள்ளோர் கெட்டு, வேதமோ தியவா செய்யார் மிருதிசொல் லுவதுஞ் செய்யார் பூதியு மணியார் ஞாந சாதந பூத மாக, வோதுவ தொன்றுஞ் செய்யா ரொழிந்ததே யுகந்து செய்வார். 18

தருமம தறிவில்பா சண்டர் தங்களை
மருவலால் வேதமா வாக்கி யப்பொருள்
கருதிடா ரதுகர மணியிற் காட்டிடுங்
குருவையும் வழிபடார் குதர்க்க மேவலார். 19

முன்னைநான் மறைக ளோதி முடிந்திடும் பரம மான, சந்நியா சத்தைச் சாரார் சார்ந்தவர் தமக்குந் தீங்கு, பன்னிடா நிற்பர் வேறு பலபல சொல்லி யென்னை, மன்னுவீ டெய்தா தான வழிகளே மருவா நிற்பர். 20

துட்டரா மார்க்கர் நூலிற் றுவக்குணுப் பெரிய ராகிச். சிட்டராய்த் தீர ராகிச் சிவனரு ளுடைய ரானுர். கட்டமாம் பிறவி தீரக் காதலால் வேதஞ் சொல்லப், பட்டதே செய்யா நிற்பார் பரமமாம் பதத்தை யுன்னி. 21

அவத்த மேபிதற் றப்படும் கலையெலா மல்லற். பவத்தை வேரறுத் திடுவது பழமறைப் பொருளே, யுவப்பி ஞெலொரு கணத்திலப் பொருள்பெற வுரைப் பான், சிவப்பிர காசனே யென்றனன் றிசைமுகன் றெளிய. 22

2-ஐதரேய உபநிஷதார்த்தத்தை

உரைக்கும் அத்தியாய முற்றிற்று.

ஆகச் செய்யுள் - 61.

---

## சாக்ஷி சிவ ஸ்வரூபம்.

## 3. ஐதரேய உபநிஷதார்த்த சேஷமும், தைத்திரீய உபநிஷதார்த்தமும், உரைக்கும் அத்தியாயம்.

---

தற்ப ரன்றனு ருவுஞ்ச யம்புவா
முற்ப வமது ருவையு முண்மையி
லற்ப முமதி லங்கிய மின்மையும்
பொற்ப மைந்தநற் பூமக னேதுவான். 1

சான்றதே யெல்லாப் பொருட்குமெல் லாமாஞ் சங்கரன் சான்றிலா தாயிற், றோன்றிடா துலகந் தோன்றிடா வாறு தனக்கெனத் தோற்றமின் மையினாற், றான்றனக் குலகந் தோற்றமில் லாமை சடத்துவத் தாற்சடமாகை, யேன்றுதா னறியா தொன்றினா லறியப் படும்பொரு ளாகிய வியல்பால்.

உலகெலாம் விளக்க முறுமொளி யுணர்வி லுற்பவ மெனச்சிலர் சொல்வ, ரலகில்பே ரொளி தான் பிறக்குமேற் சடமா மாதலாற் பிறக்கைகூ டாது, கலவரு நாச முள்ளது சடங்க ளாங்கடா

திகடமக் கேயா, மூலவிலா வொளிவிஞ் ஞாநமுண் டாக வாக்குகை யுள்ளவா றன்றே. 3

பாந ரூபத் தான்ஞாநம் பரிணா மத்தை யடை யாது, ஞாந ரூப மவிகாரி யாத லாலே விஞ்ஞாநந், தானும் விகாரப் படுமேற்பா றன்னை முதலாஞ் சடப்பொருள்போ, லாநி யாகி யறிபொருளா மறிவு மறியும் பொருளாமோ. 4

அறிவு பாநந் தனக்குத்தா ரைம் பழுமா கக் கூடா, தறிவு தானே ரறியவுறும் பொருளா யிராத வதனாலு, மறிவைக் குணமா கப்பிறரு மங்கீ கரித்த வதனாலு, மறிவிங் கசத்தாம் பாநத்துக் காரம் பகமு மாகாதே. 5

தொல்லை யசத்தாம் பாநத்தைத் தோற்று விப்ப தொருஞான்று, மில்லை யில்லாப் பொருளுக்குப் பண்டின் றென்ன வியம்பவருஞ், சொல்லு மில்லை யாதலினாற் றேற்றப் படுதல் விஞ்ஞாநத், தில்லை யெல்லாப் படியானு மென்று முள்ள திவ்வொளி தான். 6

ஓதுநெறி யாலுணர்வு முற்பவமு ருதே
பேதைமைய தேயதுபி றக்குமெனு மாறிங்
கோதிவரு பாநமதி லுற்பவமு மற்றே
நீதிபிற வாமலுள தாலவ்வொளி நித்தம். 7

நிகில லோகந் தனைநிகழ்த்து நித்த வொளியே தவ்வொளியே, சகல லோகந் தனக்கென்றுஞ் சான்றாய் நின்ற சங்கரன்றான், றுகளி லிறையிற் கற்பிதமாஞ் சம்பந் தத்தாற் றோற்றமுறுந், தகவி லஞ்ஞா நமுமன்றித் தானுய்த் தோற்றந் தாராதால்.

தெரிவி லாமையிற் சநித்திடுஞ் சித்தமுஞ் செற்ற மார் வமுமெல்லாந், தெரிவி லாமையைத் திகழ்த்திய சேதநச் செறிவினுற் றிகழ்கின்ற, புரிவ தாம்பிரா ணன்றிகழ் வதும்புறக் கரணங்க ளுடலந்தான், விரிவ தாம்விட யங்களெல் லாஞ்சித்த விருத்திசே ருணர்வாலே. 9

அன்றியது மாநமுத றன்னிலறி யறிவு, நின்று சில சில்பொருணி கழ்த்தியிடு மதனு, லென்றுமிறை

யெப்பொருள்க ளியாவுமிகழ் விப்பா. ஞென்றுமவ னுலொழிய வென்றுமிக ழாதால். 10

ஆதலா லுருவங் காண்பது மொலிதா னழகுறக் கேட்பது மொருவன், காதலாற் கந்தங் கொள்வது மினிதின் னுதென விரதங்காண் பதுவு மோதலாம் பரிச முணர்வது மிறையா லுரைத்தசங் கரனெனு முணர்வை, மேதையான் மிகுத்தோர் வேறுவே ருக விளம்புவா ரதுவிளம் பிடுவாம். 11

சிவவர்தா மிதய மென்பர்கண் மனமே யென் யர்கள் சிலவர்தாஞ் சிலவர், நலமதா ஞாந மென்பர்க ளெல்லா நாடிடு ஞாநமென் பர்களா, மிலகுவிஞ் ஞாந மென்பர்கண் மிகுத்தே யிலங்கிய ஞாநமென் பர்களாஞ், சொலவரு மேதை யென்பர்கள் வேறு சொல்லிடும் பரிசையுங் கேண்மோ. 12

யாதையுங் காணுங் கண்ணென மொழிவா ரெழின்மிகு திருதியா மென்பார், சூதிய தென்பார் மிருதியென் றுரைப்பார் சொல்லுஞ்சங் கற்பமென் றுரைப்பார், நீதியாங் கிருது காமமே யென்பார்

நிகழ்வுறு வசமென வுரைப்பா, ரோதிய விந்த நாமதே யங்க ளுணர்வதாஞ் சிவனுடை யியல்பே.

பிரம னிவனே யிந்திரனும் பிரசா பதியு மிவ னிவனே, யுரம துடைய வும்பர்கள்பூ தங்க ளுலகங் களுமெல்லா, முரைசெய் திடுமண் டசமுதலா மியோநி பேதங் களுமிவனே, குரக தங்கோ மாநு டருங் குஞ்ச ராதி களுமிவனே. 14

ஏனை மற்று மியம்பாத வியங்க நிற்கப் படு வவெலா, ஞாந கநமா மிறையவனே நலமாஞ் சிவனு மரனுமுத, லான நாமங் களையுடைய யாவு மறிவு மெய்ப்பரம, னின மில்லா வறிவுருவே யெல்லாப் பொருட்கு மிறைபேறும். 15

மையலொன் றறவிவ் வறிவினை யறியின் மாநு டன் முத்தனு மன்றித், துய்யகன் மத்தான் மைந்த ரான் மற்றுேர் பொருளினு லுற்பவந் துடையான், வையகம் பிரம வேதநந் தன்னின் மாத்திரத் தாற்பிர மந்தா, னையமொன் றறவே யாமென முக்கா லாணை யிட் டறைந்தன னலரோன். 16

ஐதரேய சேஷ முற்றிற்று.

## தைத்திரீய உபநிஷதார்த்தம் ஆரம்பம்.

அந்தவிச் சைக்கு விடயமாஞ் சச்சி தாநந்த மாம்பிர மத்தைப், பந்தமாங் குகையின் மாயையஞ் ஞாந மென்பகிற் பரவியோ மத்தி. லந்தவங் கத்துப் பிரமரூ பத்தை யறிந்தவ னவனொரு காலே, சிந்தை செய் காம மியாவையும் பெற்றுத் தீரவே சீவன்முத் தனுமாம். 17

அஞ்ஞாந மாயா சத்திக்குச் சான்று யகத்துறை யசலவாந் மாவை, மெய்ஞ்ஞாநப் பரத்தில் வேறறக் காணு மவன்பிர்ம பீசனின் மிக்கான், மெய்ஞ்ஞாநப் பரத்தில் வேறறுஞ் சத்தி மிச்சிர மித்தவாந் மாவிற், பைஞ்ஞாக மாலை போலவே தோன்றப் படுமபஞ் சீகரித் துளவான். 18

வாயு வென்று பெயருடைய பரிசம் வாநத் துண்டாயத், தேயு வதிலே தோன்றிற்றவ் வநலி லப்பு முண்டாயத். தோய மதனி லவநியாய்ச் சூக்க மைந்தும் பஞ்சிகரித், தூய விறைவ ளுக்கிணையாற் றால பஞ்ச பூதமுமாம். 19

பரமனுக் கிணையி னாலே பஞ்சபூ தங்க ளாலே, பிரமாண்டம் படைத்தே னந்தப் பிரமாண்ட மத்தி னுள்ளே, திரமுறு முலகுந் தேவ சாதியுந் தாந்தாம் பண்ணுங். கருமரூ பத்தால் வாந வாதியும் பிறவும் கண்டேன். 20

யாதொன் றெலும்பு நரம்புமுத லிந்த வுடம்ப தந்நமய, னோது பிராண மயனத்துக் குள்ளாய் வேறா யேயொளிரு, மோது பிராண மயற்கயலா யுள்ளா யொளிரு மனோமயனன், னீதி யுறவிஞ் ஞாநமய னவனுக் குள்ளாய் நிகழுமால். 21

அன்னியமாய் விஞ்ஞாந மயனுக் குள்ளா மாநந்த மயனந்த மயன்ற னுள்ளாய், மன்னியவப் பிராணமய னாலே பூர்ணன் மனோமயனாற் பூர்ணன் மனோம யன்றா, னன்னவகை விஞ்ஞாந மயனாற் பூர்ண னாநந்த மயனாலே யவன்றான் பூர்ணன், றன்னிகரற் றனைத்தினுக்கு முள்ளாய் வேறாந் தற்பரத்தாற் பூர்ணனது தானே பூர்ணம். 22

சச்சி தாநந்த மாகியொன் றாம்பரப் பிரம,

புச்சி மென்றுரைத் திடப்படு மிரதமப் பொருளே, யிச்ச தாநந்த மெய்திய யாவனெவ் விடத்துந், துச்ச வாக்கையின் றுயரறுத் தவன்சுகம் பெறுமால். 23

இன்ப மாம்பர மிலதெனி லேவனுண் டாகுமே தெவன்செய்வான், றுன்ப மேதனக் கியல்பதாய்த் துயர்க்கட லிடைப்படு முயிர்தன்னைத், தன்பரம்பெருங் கருணையா லிரதமாய்ச் சாந்தவ னுனத் தேங்கின், றின்ப மேவுற வளித்திட லிறைவனுக் கியல்பதெப் படியாலும். 24

யாதொரு பொழுது காட்சி முதலில தாம்பரத்திற், பேதம தறவு ணர்ந்தா னப்பொழு தபயனுகிக், கோதிலா வமிர்த மெய்துங் கூடுமேற் சிறிது பேதஞ், சாதலும் பிறப்பு மச்சஞ் சார்தலுஞ் சங்கையில்லை. 25

தானெ லாவிடத் திலுமுள தாகிலுஞ் சாங்கரியஞ்சேர்ந்த, வீந சாதியைக் குறித்தது வெளிப்படா திருக்குமே யெப்போதும், ஞான மேமுயல் பவர்க்குநற் பரம்பர நற்பரம் பதமேதா, ஞன வாறறிந் திடும்படி கேவல மருளினுல் வெளியாமால். 26

அங்கமா றுடனே வேதநான் கினையு மறியினு மநநமில் லவனுக். கெங்குமெப் பொழுதும் பயத் தினுக் கேது வாயிடு மிறைவனிங் கிரன்கால், செங் கதிர் வாரி தியமன் றத்தஞ் செய்தொழில் களிலொரு காலும், பங்கியா தொழுகும் பரிசது பரனைப் பற்றி யுண்டாகிய பயத்தால். 27

தந்த மளவி லரியாதி தம்ப மீருய்ச் சகத் தெல்லா. மிந்த விறைவ ஞநந்த லேசத் தாலே யின்புறுமா, லந்த வந்தப் பதத்தாசை யற்றோர்க் கருளா லுள்ளபடி, தொந்த மறுதன் சொருபமதா மின்பந் தானே தோன்றுமால். 28

பருதி நெஞ்சினு மொழிந்தவர் நெஞ்சினும் பரனே, கரிய தாகிநின் றறிபவன் காயமே முதலாம், பொருளை மாய்வுறத் தத்துவ விவேகத்தாற் போக் கிக், கரிய தாகிய வீசனைக் கண்டவன் கண்டான். 29

உருத்திரன்மான் முதலாகத் தம்ப மீரு யுள பொருட்குஞ் சான்ருகு மொருவன் றன்னைக், கருத் துறத்தர்க் கத்தாலு மாகத் தாலுங் கண்டவன்கண்

டவன்றர்க்க மாந ஞாநங், கருத்துறவுள் ளவனுலகி னின்றுந் தன்னைத் தன்னாலே வேறுபடக் கழற்றிக் கற்றோ, னுருத்துவரு மந்நாதி கோச மெல்லா முள் பகிரு மிறைவனரு ளொன்றி னாலே. 30

விளம்பும் வாக்கு யாதொன்றின் பக்கற் செல்லா தேமீளும், விளம்பும் வாக்குத் தான்விளம்ப விசேட மொன்றும் பெருமையினால், விளம்பல் வாதஞ் சிறிதில்லை விசேடம் பெறிலே விசேடமாம், விளம்ப லாவ தறுஞ்சிவனை யுரையால் விளம்பும் பரி சென்னோ. 31

யாதொன் றின்பா லெங்குங்கோ சரமா மீந்த மநஞ்செல்லா, தியாதொன் றின்பாற் செவிமுதலிந் தியங்கள் விடயங் களுஞ்செல்லா, வோதுஞ் சச்சி தாநந்த வொன்றும் பிரம மதுதன்னைப், பேத மறத் தன் வடிவாகப் பெற்றா னச்ச மற்றானால். 32

அன்புறு குரவ னருளினா லிங்ங னறிந்தவ னயர்ந்திரு வினையாற், றுன்புறுன் றுன்பஞ் செய் வதுந் துன்பந் துய்ப்பது மாகிய தோற்ற, முன்ப

தாம் வேத முடிவுவாக் கியத்தான் மூலைத்தஞா நத்தினுன் முற்று, மின்பமாங் தன்ன துருவமா யிலங்கு மிறைமிகு திருவரு ளதனுல். 33

செய்வான் செய்விப் பவன்செய்யும் பொருள் செய் கருவி செய்தொழிலென், றைவாய்ப் பொருளும் வெறுமாங்மா வாகித் தோன்று மிறையருளா, லெய்யா மாந மறிவுபொரு ளறிவோ னென்னப் படும்பேத, மெய்யா மிறைவன் றிருவருளா லெல் லாங் தானுய் விளங்குமால். 34

துய்க்கு மவன்றுன் றுய்ப்பிப்பான் றுய்க்கும் பொருடான் றுய்த்தருன், கைக்கொள் பொருள் கொள் பவன்கொள்கை கடவு ளருளாற் றுனேயா, மைக்கொண் ஞாந மொன்ருென்று மாறு ஞாந மையமுறுங், துய்க்கு ஞாந முற்றுமிறை யருளாற் றுனே யாய்த்தோன்றும். 35

கடபடகுட் டியமுதலா மிதின் ஞா நங்கள் கடமதகுட் டியகுதூல படம தாகுங், தடமலைபா தாளமுத லுலக மற்றைச் சத்தியமே முதலான வுலக

மெல்லா, மிடவியமா மலரவன்ற னண்ட மீதிற் கற்பிதமா மெல்லேயிலண் டங்க ளெல்லாங், கட றடமா றுகண்மற்றுங் கண்ட வெல்லாங் கடவுளரு ளதனுலே தானுய்க் காணும். 36

மேரு மந்தர முதலதா மிகுத்தமால் வரைகள், சாரு மெல்லேயின் றியவநம் வநத்தினுள் ளவைதான், ருரு வந்தமில் விதங்கள்புற் புதலெலாந் தானு, யேத மின்றிய விறைதிரு வருளினு லிலங்கும். 37

வான்முதலாம் பூதங்கள் பௌதி கங்கண் மன்னுமொலி பரிசமுருச் சுவைநாற் றங்க, ளூன் மருவு கிருமிகீ டம்ப தங்க முலவுபசு விதமோடு மொட்டை யானே, கான்மருவு பரிகரப மநுடர் சித்தர் கந்தருவ ரரக்கரியக் கர்கடா மிக்க, வான் மருவுந் தேவகண மெல்லா மற்று மாப்பரம னருட் டனது வடிவாய்த் தோன்றும். 38

வினேமிகு விண்ணேர் விண்ணவர் விண்ணேர் வேந்தனும் விராட்டுடன் சுராட்டு, மெனேயடைந் தவரென் செல்வமியா னெடுமா லுருத்திர னீசனற்

சிவனென், றனைவர்தம் பதங்க ளவர்களை யடைந் தோ ரவர்கடா மந்நிய மின்றித், தனைநிக ரில்லா விறையவ னருளாற் சகலமுந் தானெனத் தோன்றும். 39

தீதெனும் பொருள்க ணன்றெனும் பொருள்கள் செய்யலா வனசெயப் படாத, வேதமா முடல மிந்தியம் பிராண னிசைமநம் புத்தியாங் காரந், தீதுறு காமங் கோபமே முதலாந் தியன சாந்திதாந் திகளே, யாதியா நலங்க ளடையவுந் தானே யாகியே தோன்றுமெய் யருளால். 40

பேதமாஞ் சீவ பரங்களு மவர்கள் பேதமும் பேதிக்கு மதுவும், போதமில் சடசத் தியுமதன் பிதையும் போதசத் தியுமதன் பிதையு, மோதுமுண் டில்லை யெனவெழு முரையி லுள்ளதாம் பொருள்களு மிலாதும், யாதுமவ் விறைவ னருளினுற் றன்ன தேகமா முருவமா யெறிக்கும். 41

தன்ன தொளியாற் றுன்விளங்கப் படுவா னுந்மா வெனத்தகுவா, னன்ன வணையே நானீயென் றறியா

கின்ற வவ்வுளத்தே, யுன்னவரிய வவன்றன்ன துண்மை யுணரா ரொருவர்களும், பிங்க மில்லா மையிலறிவார் தாமு மறியப் பெற்றிலரால். 42

அயரு னின்றித் தன்னைத்தா னுங்மா வாக வறிவுற்ருே, னியல்பா லிந்தப் பொருளினையே யென் றும் பாடி யிருக்குமா, லியல்பா ராலு மறிவரிய வீச னடம்போ லியாவர்க்கு, நயமார் ஞாந விநோதன்றன் கீத நலமே நல்கிடுமால். 43

அன்பி னுலெம் மாதிகுரு வாகு மிறைவ னருள் கீதை, யின்ப மேசெய் திடலுலகுக் கியல்பா மெவ்வா றவ்வாறே, முன்பு பரமன் றிருவாக்கான் மொழிந்த கீதைப் பொருளான, பின்பிக் குரவ னருள்கீதை பேரா வின்பம் பிறப்பிக்கும். 44

உலகியல்பாங் கீதைக்கு முவந்தருளு மிறை யென்று, லிலகியவை திகக்கீதைக் கேன்செய்யா னிறையதனு, னலமிகுத்த பொருள் வேண்டி னலமிகு பத் தியினேடும், பலமிகுநற் கீதைகளே யெப்பொழு தும் பாடுவான். 45

அறையு மறையா லாகமத்தா லறியா ஞகின் மற்றுந்தா, னறிவ தொருபா டையினுலே யறைவா னென்று மமையாதே, யிறையை யடைதற் கேது விது விதனுற் பரம யோகெய்தும், பிறிவொன் றறவே சிவன்றன்னை யோகத் தாலே பெறலாமால்.

கீதஞ் செய்தோ னியோகத்தாற் கீழ்ச்செய் வினையின் பெருமையினுற், பேத மில்லா விறைகூடப் பெருதே விடினும் பின்சென்று, மாத லாலே யிறை கீத மல்லா தெல்லாங் கைவிடுவான், பேதை மையி னுற் செய்தானேற் பிராயச் சித்தஞ் செயவேண்டும்.

ஆதலாற் பிறவி யறுக்கவா தரிப்போ னருமறைப் பிரமாணத் தாலுங், தீதிலாத் தர்க்க நெறியத னுலுஞ் சிவனுடை யுணர்வுபெற் றதுவே, கீதமே செய்வா னுபநிட மதனிற் கிளத்திய பொருளிதைப் பொருளைத், தீதிலாச் சிவநற் பத்தருக் குரைக்க வல்லவர் தமக்குரை செய்யா. 48

3-ஐதரேய உபநிஷதார்த்த சேஷமும்,
தைத்திரிய உபநிஷததாத்பரியமும்,
உரைக்கும் அத்தியாய முற்றிற்று.
ஆகச் செய்யுள் - 109.

## 4-கேநோபநிஷதார்த்தம் உரைக்கும் அத்தியாயம்.

---

வான்ெறு டங்கிம லர்ந்தன யாவைக்குஞ், சான்ற தாமறி வைத்தன்ன ருளினும், ரேன்று சோதியைச் சொல்லுவ னென்றெலா, மீன்ற வன்னிமை யோர்கட்கி யம்பினன். 1

தானே யுள்ளா யெப்போது மெல்லாப் பொருட் குஞ் சான்ருகி, யூனே பவசா கரத்துற்றோர்க் குடன்ரு ரகமா கியவும்பர், கோனே நியமித் திடமந முங் குறித்து விடயங் களிற்செல்கை, தானே சேட்டை செய்யாது பிராண னிறைவன் தன்னலே.

நாவுரைப் பதுவுஞ் செவியுரைப் பதனை நலம் பெறக் கேட்பது நயந, மேவுருத் திகழக் காண்பது மற்றும் வேறுள விந்தியங் களுமத், தேவனூற் றத்தம் விடயமேற் செல்லப் படுவதிங் கிவைசெலுத் திடுமத், தேவைமா யையின லன்றியுண் மையிலத் தேவனுக் கில்லையே தெரியில். 3

இந்தியங் களுக்குச் சத்தை யில்லையே யிவற்றின் சத்தை, செந்தழ லயம்போ லுள்ள தேவனு லுள்ள சத்தை, தொந்தமில் பரன்றன் றன்னிற் சோத்திரந் தன்னைக் கற்பித். தந்தவத் தன்மை யுண்டா வளிக்கு மங் கநுவே சித்து. 4

தன்னிற்கற் பிதமநத்தை யநுவே சித்துச் சத்துவத்தி னின்றுமநத் தன்மை நல்கு, நன்னுற்ற கற்பிதமா நாட்டந் தன்னை நாட்டமாந் தன்மை பெற நல்கா நிற்கு, மன்னுற்ற பிராணனுக்குப் பிராண னுகை வாக்குக்கு வாக்காகை மற்று முண்டாய்ப், பன்னுற்ற கற்பிதமாங் கருவி கட்கப் பரி சநுவே சித்தளிக்கும் பரமன் றனே. 5

வாக்குமந முங்கண்ணு மற்றுளவிந் தியங் களுமே, நோக்கரிய பரஞ்சுடரை நோக்கியிவை செலமாட்டா, தாக்கில்பரம் பரனறியிற் றன்வேரு மறியாதே, போக்குபொழு தினும்வேரும் பரனரிய பொருளன்றோ· 6

வாக்குமநங் கண்செவியான் மன்னிநின்ற

பிராணனினு, னிக்கியுள கரணத்தா னின்மலன்கோ சரிக்கவுருன், பாற்கரனுக் குருவம்போற் பகர் பொருளெ லாந்திகழ்வ. தாக்கதனைச் சநாதநமாம் பரம்பிரம மெனவறிமின். 7

ஆனதர்க் கத்தான் மாநத்தாற் குரவ னருளினு லநுபூதி யதனுன், ஞாநமெய்ப் பொருளை யறிந்திடு மவரே நலம்பெறு முத்தரா னவர்க, ளூனமற் றந்தத் தற்பரம் விளங்க வுணர்ந்திடப் பட்டதென் றுணரிற், றுனனைத் தினுக்குஞ் சாட்சியாம் பிரமந் தானறி பொருளுமா யசத்தாம். 8

தனக்குமெய்ப் பிரமம் விடயமா யிராமற் றுனதன் சாட்சியா யிராமற், றனிற்பிறி தறத்தா ளுகவப் பரத்தை யறிந்தவன் றுனறிந் தவனுந், தனிற் பிறிந் தறியா தவனறிந் தவனு மறிந்தவன் றுனறிந் திலனு. முனற்கரும் பிரம முணர்ந்தவர்க் குணர்வின் றுணர்வுறுர் தமக்குணர்ந் ததுவாம். 9

பித்தா ஞாநங் கடஞாநம் பிரம ஞாந மெனு மிவற்றிற், கர்த்தா வன்று பரப்பிரமங் கர்மந் தானு

மன்றுவெறுஞ், சித்தா மிதனைத் தெரியாமற் கர்த்தா வாகச் சிந்தித்தல், பித்தா மகர்த்தா வாயறியப் பெற்ற னறியப் பெற்றானும். 10

தர்க்க மாநந் தானொழியத் தான யுள்ள பேரொளியை, மிக்க கர்த்தா வாகுதலும் விடய மாகு தலுமொழியப், பொக்க மறவே றறக்கண்ட பொழுது புரைதீர் பொருளான, தக்கபிரம தத்து வத்தைக் கண்டா னகுந் தானகை. 11

நோக்கு ருதமெய்ஞ் ஞாநமுங் காட்சியாய் நோக்கவும் பட்டுத்தான், சாக்கி யாயறிந் திடுபவ னெங்ஙனே தத்துவ வித்தானன், ருக்கி லாப்பர விச்சையுஞ் சநிக்குமேற் சடமதாங் கடம்போலப், பார்க்கி லந்தவிச் சையின்புணர்ப் பாலுணர் பொருளதாம் பரன்றானும். 12

விச்சை யுள்ளவன் விசேடவா னும்பர தத்துவ மவிசேடம், விச்சை யுள்ளவ னதலாற் றத்துவ வித்தலன் விச்சைக்கண், டுச்ச முற்றுள தாகுதல் விடயமாய்த் தோன்றுதல் செய்யாது, சச்சி தாநந்த

மப்படி யிராதெனிற் றற்பர மாமோதான். 13

ஆதலால் விஞ்சை யாலறி வுறுதற் காவதன் றுகிலப் பரந்தா, னேதிஞ லறியப் படுமறி வுறுதற் கேவனு லாமிமை யவர்காள், காதலாற் பரத்திற் கற்பித மாயை கழியுமேற் பரம்பரன் கண்ணே, ரேதமா மாயை யில்லையுண் டாகி லிருக்குமோ விரவிமுன் பிருடான். 14

ஆதலான் மாயை தர்க்கமா நத்தா லாநுபா வத்திறுற் றுனே, சோதிஞா நச்சிற் கநச்சுடர் முன்னர்த் தோன்றிடா தவிச்சைவிச் சைகடா, மோதுமாத் திரமா முலகுரை வழக்கத் தள்ளன வுண்மையி வில்லை, யேதமா முலக வழக்கமு மொளியா யிலங்கலா லபேதமே யென்றும். 15

வேறிலத் துவித மென்பது மொளியில் வேறிலா மையிலுள தொளியே, கூறலற் றிடலே யிப்பொருள் கூடிற் கூடுவ தளவையி னுலு, மூறிறர்க் கத்தான் மறைகளாற் குரவ னுபதேசத் தாலிறை யருளா, லீறின்மா தவத்தாற் காலபா கத்தா லப்பொருள் புருடனுக் கெய்தும். 16

ஓது மிப்பரம் பெரும்பொரு ளுணர்ந்தவன் செய்வ, தேது மில்லைஞா னமுமிலை யிரண்டிலா மையினு, னீதி வர்ணவாச் சிரமமு நிடேதமும் விதியுஞ், சாது நல்வினை தீவினை சகலமு மிலதே. 17

இந்தப் பரமாம் பொருளிறைவ னருளாலியாவன் பெறுமவன்று, னந்தப் பரம னேயென்றென் னறிவிற் றிகழ்வ தவன்பெருமை, சிந்தித்திடவொண் ணுதென்னுற் செய்யப் படுமத் தேவர்களாற். சந்தப் படுமா லாலரனுற் சாற்றுந் தன்மை சாராதால். 18

இந்த வாக்கையி லியம்பிய பரம்பொரு ளறியி, னந்த மாநுடன் மெய்யதா யபேதமா கியபிர்த்தொந்த மாம்பர மடைந்திடுந் தோன்றிடா தாகிற், பந்த மாம்பவக் கடற்படும் பரகதி யடையான். 19

தங்க ளியாக்கையிற் சகலயாக் கையினிலுந் தத்துவ மதுதானே, யெங்கு மொன்றெனக் காண்பவ ரியாவரிங் கிறந்திடார் பிறவாராற். பங்கு பட்டறிந் தவனறி யாதவன் பந்தமுத் தமதென்றே,

யிங்கொ ருத்தனே நிகழ்பவ சேதந னிவைகன வியல் பொக்கும். 20

தன்னில் வேறிலா மையிற்பர முத்தியிற் றனது புத் தியி ஞலே, யங்நி யங்களாய்த் தோற்றுமா பாசர்க்கும் பரபத மறிகின்ருன், முன்ன மெப்படி மூடமாந் தசையிற்றன் மோகத்தா லெலாம்பெத்த, மென்ன வுற்றனன் முத்தியு மப்பரி சிருக்கும தியல் பேயாம். 21

ஒருகால முன்செய்வினை யளவு மி யோ கி யுயிருலகா தியைக்காண்பா னெருகாற் காணு, னெரு காலிற் ரேற்றமெல்லாம் பரமாய்க் காணு முள பரிசே யாயொருகா லொன்றுங் காணன். றுரிசான சகரூபந் தோன்றும்போது துக்கசுகங் களுமாபா தித்துத் தோன்றும், பரமாகத் தோன்றுபொழு தாபா தித்துத் தோன்ருது துக்கசுகம் பரமே தோன்றும். 22

தத்துவ ஞாநி காணிலுஞ் சகத்தைக் கண்டிலன் றத்வமே கண்டான், வத்துவே யாக வல்லவே யாக

மற்றொரு பொருளிலை யானு, லித்தில்லே றென்றை யெங்ஙனங் காண்பா னியாதொரு படிசகத் தாகத், தொத்தர வில்லாத் தோற்றமெப் படியோ வப்படி நிகழ்வது பரந்தான். 23

எப்படி யெப்படித் தோற்றமப் படியா யிலங்குவ துண்மையே யோகிக், கப்படி யப்படி யுண்மையே யாக வறிவதே யாந்மவே தநந்தான், செப்புநாமத்தா லுண்மையா லெல்லாத் திகழ்வுமா தேவனே யாகி, லிப்படி யறிந்த ஞானிகைக் கொள்வா னெத்தையன் றெனவெதை விடுவான். 24

அந்நிய மாக விடுதல்பற் றுதலுண் டாகுமேற் பூரண னுகப், பன்னிய பெருமைக் காயா மந்தப் பரமன தியல்பமு துருதே, தன்னில்லே றின்மை யான்மகத் துவந்தன் மமதிலைத் தந்மதந் மிகளாம், பிந்நவா சகமு மிப்பரம் பொருளிற் பேதமுண் டாகிலே பிறக்கும். 25

பேதமு மபேதந் தானும் பேதாபே தமுமுண் டல்ல, வோதிலப் பரத்துக் கென்று முள்ளது பிரமந்

தானே, தீதாக நன்றே யாகச் சிவனலா தில்லை ஞானி, யேதாகு மென்று கொள்வா னேதாகா தென்று நீப்பான். 26

எப்பொருளு மாயையினு லெனச்சிலவ ரியம்புவர்கண், மெய்ப்பரமன் றனையொழிய வேறொருமா யையுமில்லை, யொப்பரிய பரனொழிய வொருமாயை யுண்டாகி, லப்பரமன் றன்பெருமைக் கதுநேரே யழிவன்றோ. 27

பெருமையினிற் சங்கோசம் பிறவாது பிறக்குமெனி, லருமறைவாக் கியம்பொய்யா மப்பிரமா ணமுமாகும். பொருவில்பரா நந்தபரி பூரணமெய்ச் சுடராகுந், தெரிவருமா தேவனல்லாற் றிகழ்வதொரு சிறிதுமில்லை. 28

இதுவே முடிந்த நிலமெல்லாத் தர்க்கங் களுக்குங் காட்சியே, முதலாம் பிரமா ணங்களுக்கு மொழியும் வேதாந் தங்களுக்கும், விதமாம் புராண மனைத்தினுக்கு மிருதி களுக்கும் வேதத்தின், மதமாம் விச்சை யனைத்தினுக்கு மன்னு மாபா ரதத்துக்கும். 29

ஐயன் சைவா கமங்கட்கு மாரியா கமத்துக் கும் மெனது, பொய்யின் றியவா கமத்துக்கும் புத்தா கமங்கட் கும்மருகன், செய்யு மாக மத்துக்குஞ் சித்த ரியக்கர் கந்தருவ, ருய்யும் பரிசு மற்றுள்ளோ ருரைத்த வாக மங்கட்கும். 30

உவமையிற் பரமாத் துவிதமா மிந்த வொண் பொரு ளுலகின்மா நுடரி, லெவரிது பெற்றோ ரன்றி விண் ணவரி லேவரே பெற்றவ ருடையான், சிவ னொரு வனுமிப் பரம்பொருள் சுபாவ சித்தமாஞ் சிவனுக்குஞ் சிவைக்கு, மவரரு ளாலே யரிக்குமிப் பொருளுண் டப்படி யெனக்குமுண் டருளால். 31

சாற்றிடப் பட்ட விராட்டுடன் சுராட்டு சம் பிராட் டெனுமிவை யிவர்க்கு, மேற்றம துடைய தேவரா முமக்கு மியக்கரோ டரக்கர்கந் தருவர், சீற்றமில் சித்த ரிவர்முத லான தேவசா திகளனை வர்க்குந், தோற்றிய மநுடர் விலங்குசா திகட்கு மருளினு லிப்பொரு டோன்றும். 32

பரமன தருளுண் டாயிடிற் கீடம் பதங்கமா

நுடவரோ டசுரர், சுரரனை வர்க்கு ஞானமுண்
டவனே சுடர்மிகு ஞானமிங் களிப்பா, னரியி னு
லென்னு லவனரு ளொழிய வளித்திடப் படாதொரு
பொருளுஞ், சுரர்களே தரவும் வாங்கவு நாங்கள்
சுதந்தர ரன்றுமெய் சொல்லில். 33

சுதந்தரன் சிவனே யிவனன்றோ பிறவிச்
சூழனின் றெடுப்பவ னவன்றன், பதங்களா லன்றி
யெங்களா லெடுக்கப் படாதொரு செந்துவு மெங்
கண், மதங்களா லொழிய வருளினுற் பிறவி மாற்ற
வும் வல்லமற் றெருவன், றிதம்பெற வழங்கும்
போதுதான் வழக்குஞ் செய்யுமத் தருவியே போல.

தேவ தேவன் சிவன்பெருமை தானு மவன்றன்
றிருவுருவு, மேவ ரறிவார் தானுதை லில்லை யாகிற்
றவறுதலே, யாவ ரருளா லின்றியவிர் பெரியோர்
தமக்கு மறிவரியன், கோவி னறிதற் கருமையைத்
தான் கூற மிகவுங் குறிக்கொண்மின். 35

கலக்குறு மோகத் தாலிமை யவருங் கடுந்திற
லசுரரும் பகைத்து, விலக்கரும் பூசன் முன்பொரு

காலம் விளைந்துவிண் ணவர்தலை சாயப், பெலத் திஞன் மிக்க வசுரர்கள் வெல்லப் பெருகிய வருளிஞ லிறைவ, னலத்தகு மிமையோர் வெல்லவு மசுரர் நசிக்கவுந் திருவரு ணயந்தான். 36

திருவரு ளதஞ லசுரரைத் தேவர் செயித்துமா தேவன்றன் செயலென், ஞெருவரு மறியா ரும்பர்தா னவரை யோட்டினர் தாமென வுவந்து, பெருகிய வகந்தை செய்திடத் தேவர் பிழைக்கவும் பிரான் றனை யறிதற், கருமையு மறிய வியக்கரூ பங்கொண் டமலனங் கருளிஞ னின்ருன். 37

இயக்கரூபஞ மிறையவன் றனைக்கண் டிமையவ ரியாவ ருங்கூடி, வியக்க வுற்றிது வேதெனத் தங் களில் விசாரித்து விளங்காமன், மயக்க மற்றிட வறிந்தெமக் குரையென வங்நியை விடுத்தார்க, ணயக்க வுற்றிது தன்னியல் பறிந்துநா னவிலுவ னெனச்சென்ருன். 38

அநல னைக்குறித் தியக்கஞ மிறைவஞ ரென்று, வினவ வங்கிநா னென்றவற் குறித்தவன் விளம்ப,

வுனது வீரிய மேதென விறையவ னுரைப்ப. வெனது பூமியி லுளதெலாஞ் சுடுமியல் பென்றான். 39

அத்த னங்கொரு திரணத்தை யெடுத்தந லவனை, யித்தை நீதகி யெனக்குற முறுவல்கொண் டிசைப்ப. வெத்தன் வேகமுங் கொண்டது சுடவொரி யவனுஞ், சத்த னன்றினா ணிப்பயங் தமரரைச் சார்ந்து. 40

அவன தியல்பை யென்னலிங் கறிதற் கரிதென் றநல்சொல்லப், பவந னறியென் றிமையவர்கள் பகர வவனு மப்பரிசே. சிவன லபசெ யப்பட்டுத் தேவர் தம்பாற் செல்லுதலு, மவனை நானே யறிகுவனென் றகந்தை யுற்று னமரேசன். 41

புரந்தர னறியச் சென்றிடும் பொழுதிற் போக்கற வவ்விடந் தனிலே, கரந்திட மிகவுங் கலங்கியுள் வெதும்பிக் கருதுபு கருணையே வடிவாய், வரந்தரும் விஞ்சா வல்லியா முமையை வைதிக நெறியினல் வழுத்தா, வரந்தைதீர் வுறவே புகழ்ந்தனன் புகழ்ந்த வளவிலங் களவிலா வருளால். 42

அங்கவே தத்தின் மயமதாய்ச் சிவனுக் கபி ணேயா யாநந்த மாகிச், சங்கரன் றனக்குந் தானளித் தின்பங் கருணேயா லுயிர்க்கெலாந் தாயாய்த், துங்க மால் வரையி னிச்சையாற் ருேன்றுந் தோகையீ சனதுவல் லபமு, மங்கவ னறிதற் கருமையுந் தோன்றத் தோன்றிஞ ளவ்விடந் தனிலே. 43

உமையையர்ச் சித்தங் கும்பர்கோ னியக்க ரூபமா யிவ்விடத் துண்டா, யெமதுகட் புலத்துற் றிவ்விடந் தனிலே மறைந்ததீ தென்னேயென் றியம்ப, மமதிருக் கொழுந னருளிஞற் ருேன்றி மறைந்தனன் மாலுக்கு மயற்கு, மிமையவரெவர்க்கு முனக்குமா தேவ னியல்பறி யப்படா தென்றும். 44

தன்ணேயறி தற்கருமை தன்னேயறி வித்தற்
குன்னிநிகழ் வுற்றதுமொ ளித்ததுவு மும்பன்
வென்னதற வானவரு நீயும்விச யத்தே
மன்னவவ னேயசுரர் மாயவருள் செய்தான். 45

அத்தனே சரண மாக வடையுமென் றருளிச் செய்து, பத்தர்கள் பாசந் தீர்க்கும் பரமகா ருணிகை

யாகிச், சித்துரு வாகிச் சான்ருய்த் திகழ்ந்திடுந் தேவி யுந்தன், சுத்தமாஞ் சொரூபந் தன்னிற் கரந்தன டோன்று வண்ணம். 46

அன்றுமா லொழிந்திங் கிமையவ ரீச னறிகிற வருமையு மருளுந், துன்றுபுத் தியுநன் முத்தியு மளிக்குஞ் சுதந்தரந் தன்னையுந் துணிந்து, நன்றியே யுற்று ரருள்பெறி லெளிய னுதனிங் கறிவுறு மருடா, னின்றியே யொழியி லொருவரா லுந்தன் னியல்பறி யப்படா தென்றும். 47

சம்புவி னருளா லன்றிமா னுனுஞ் சகலதே வதைகளு மந்த, வும்பனை யுணரோ மருள்பெறும் பொருட்டே யோதிய யாவையு முளவாஞ், செம் பொரு டன்னை யருளினு லொழியத் தெரிவினுற் றெளிகுவ ராக, நம்புமா நுடவர் கையினு னுற்ற மறிவரோ நாசியா லொழிய. 48

ஒழிவிலா விறைவ னருளுரு வுணரி லொத்திடும் வினையினிற் குரவன், விழியினுல் விளையப் படுவதா யுளதோர் மிக்கதோ ரதிசய மதனை, மொழியுமா

றென்னுன் முகுந்தனு லரனுன் முடிந்திடா கண்முகப் படாதே, யழிவிலாச் சிவற்குஞ் சிவைக்குமாற் கெனக்கு மறிவதுஞ் சிலவறி குறியால். 49

மொழியுமக் குறிதான் மிக்கபே ருவகை மொழி தழுத் தழுகையங் கூத்தும், விழியிலும் விகாரம் பிறக்கைகம் பிக்கை மெய்விதிர்த் திருக்கைமெய் விழுகை, சுழல்கைமற் றெழுகை வானிலே யிருத்தல் சுடரொளி யாகியே தோன்ற, லொழியுமிவ் வுடலங் கண்டிடா திருத்த லும்பர்தே காந்தரத் துறைதல்.

ஓதிடா துணர்தல் கலைமலை முதலி லுள்ளபே தந்தெற லுரைத்த, லாதியாங் குறிக ளிறைவனு ருளுக் கறிகுறி யாவன வருடன், னீதிதா னெவர்க்கு மொருபடித் தாகி நிகழ்வுரு தந்தநின் மலன்றன், பாதமே வுறுவார் பக்குவந் தோறும் படுதர மாகியே நிகழும். 51

செப்பிய விந்த வருள்சிவ னுலுஞ் சிவையினு லுஞ்செயப் படுவ, தப்பெருந் தன்மை யரியினு லென்னு லொருவரா லளிக்கலா காதே, யிப்பவங்

தனிலே முத்தியிச் சிப்பா னியம்புமெத் தேவையும் விட்டுச், சிற்பர னுதஞ் சிவனொரு வனுமே சரணெனச் சென்றுசேர் வுறுவான். 52

பரகதி சிவன்பால் வைத்திடப் பட்ட பத்தியா லுறுமது வன்றி யுரகணைத் துயில்வோன் பாலுமென் பாலு முற்றபத் தியிலுள தாகா, திரமுறு சிவபத் தன்றனு கந்துத் திருவரு ளொளிமிகத் திகழும், பரிசரி பத்தர்க் கெனதுபத் தர்க்கும் பரமுற நிகழ் வுறப் படாதால். 53

ஆத லாலரியை யென்னை யாதரவு செய்தி டாதரன்ம கேசனைக், காத லாலடைகை முத்தி சித்திகடு கக்கி டைக்குமரு ளெய்துமப், போதி லேயரிய ருகி லுந்தனது பூரணப் புரண மானசிற், சோதி யேமுழுது மாகி நின்றபடி தோன்று மாறு வெளி தோன்றுமால். 54

சாக்கியா மெல்லாப் பொருட்குமீ சனையெப் பொருள்களுஞ் சாக்கிமாத் திரமாய், நோக்கினு னியாவ னேக்கத னுமே நோக்கலா மிதுமறை யந்த,

நீக்கிலாப் பரமாத் துவிதநிட் டையுமிந் நிலமென்றே முடிவிதிற் பேத, மாக்கிறு னறிவா லறிவிலா தொழிவா லவனலா தார்பசு வாவார். 55

பரமாத் துவித ஞாநியே பரதே வதைதா னவனேயித், திரமா முத்தி யானிங்குச் செப்பும் பொருள்செய் வினையாலு, முரமாந் ததீசி கௌதமனு லுண்டாஞ் சாப வுரையாலுங், கரமா மநுடர் நெஞ்சதனிற் காதல் செய்யா தொருகாலும். 56

ஆரணத்தந் நியமில்லாச் சிவன்றன் பாலு மத்து வித வேதநத்து மடைதற் குள்ள, காரணமாஞ் சிவ லிங்கார்ச் சநத்துஞ் சாலக் காய்வதுவு மேயன்றி யுருத்தி ராக்க, தாரணத்துந் திரிபுண்ட்ர தார ணத்துஞ் சர்வாங்கோத் தூளநத்துந் தானே காய் வர், சீரிணக்குஞ் சிவனென்னு முரையுந் தங்கள் செவியாலுங் கேளார்செய் வினையாற் றீயோர். 57

தொல்லைநல் வினையாற் சுருதிநன் மிருதி சொன்னவா துணிந்தவத் தூயோ, ரொல்லையிற் பரமாத் துவிதவே தநத்தை யுள்ளவா றுணரவே

யுணர்வர், நல்லவிப் பரமாத் துவிதஞா நியைநா ராயண ஞனுருத் திரனு. மெல்லையி லெல்லாத் தேவரும் பூசித் தேத்தவும் படுமிவ னென்றும். 58

ஈசஞ ஞாநி யிருந்துள விடந்தே யிருப்பது முத்திதா னந்தத், தேசிக னேவல் செய்பவன் காலென் சென்னியி லிருப்பது மன்னி. மாசிலாப் பரம ஞாநியா முநிக்கு மகேசனு மொப்பலன் மதிக்கி, லாசிலா வரியு மொப்பல ஞனு மொப்பல னேவரொப் பாரே. 59

ஒப்பறும் பரமாத் துவிதஞா நத்தை யுணர்ந் துள பரமயோ கிக்குக், கைப்பொரு ளாவி காயமுங் கொடுப்பான் காதலா லவைகொடுத் திடவே, யிப்பவ மறுக்கு ஞாநம்வந் துதித்தற் கேதுவா மதுவிது வொழிய, வுற்பவந் துடைக்கு முணர்வுபெற் றுய்தற் கிலதிதி லையுறே லொன்றும். 60

சதுர்மறை யொழிந்த வாதனை பொல்லாத் தர்க்கவா தனையுல கத்தின், மதமுறு சமய வாதனை தார மக்கள்சுற் றத்தின்வா தனையு, மிதமுறு பொரு

ளில் வாதனை தேகேந் தியமநம் புத்திநற் பிராணன்,
முதலவா தனையும் வித்தைவா தனையு முடிவில்போ
கத்தின்வா தனையும். 61

ஏறுடைச் சிவனைத் திருநெடு மாலை இகழும்வா
தனையும்வே தத்திற், கூறிடு ஞாந சாதந மாகக்
கொள்ளுமுத் தூளபுண் டரத்தை, மாறுட னிகழும்
வாதனை பாவ வாதனை யாவுமா நுடர்க்கு, வேறடும்
பரமாத் துவிதஞா நத்தை விலக்கிடும் விரோதிவிண்
ணவரே. 62

ஆதலால் வீடதனி லாசை யுள்ளோ னதின்
மிகவுந் தாற்பரிய னுகி முன்ன, மோதுவா தனைக
ளெலா மிகந்தெப் போது முற்றபர மாத்துவித
ஞாநி யாவன், வேதவே தாந்தங்க ளுரைக்கப் பட்ட
மேலான வத்துவித ஞாநமாகு, நாதனும் பிரமத்தை
நவில லாமோ நாமௌநத் திருப்பதல்லா னுகத்
தீரே. 63

ஓதிய தோட மெல்லா மொழிந்துள ராகி யுற்ற,
வேதவே தாந்தந் தன்னின் மிகநிட்டை யுடைய

நல்லோ, ரியாதுந்தம் மிதயத் துள்ளா யிரண்டலா ஞான மத்தைப். போதகஞ் செய்யத் தக்கோ ராவர் கள் புரையற் றோர்க்கே. 64

சுரரிலுத் தமரே யெல்லாத் துக்கமுந் தொலைப்ப தாகிப், பரிவொடொண் குரவன் பார்த்த பொழு திலே பரமா நந்தப், பொருவிலாச் சிவரூ பத்தை யடைவித்துப் புரண மாக்கும், பெரியவத் துவித ஞான முங்கட்குப் பேச லானேம். 65

4 - கேனோபநிஷதார்த்தம் உரைக்கும்
அத்தியாயம் முற்றிற்று.
ஆகச் செய்யுள் - 174.

# 5-சாந்தோக்கிய உபநிஷதத்தின் ஆறும் அத்தியாய அர்த்தத்தை உரைக்கும் அத்தியாயம்.

மறைப்பதாய் மிகவு முன்னோர் மடிவிலாப் பொருளைக் காட்டுஞ், சிறப்புடை யுபதேசத்தைச் செப்புவ னுங்கட் கெல்லா, மிறப்பிலா தரத்தி னோடு மிசைந்திது கேண்மி னென்றான், பிறப்பன முழுதுஞ் செய்யும் பீடுடை மலரின் மேலோன். 1

யாதொன் றிருந்த படிகேட்கக் கேளா முழுதுங் கேட்டனவாம், யாதொன் றிருந்த படிபார்க்கப் பாரா வெவையும் பார்த்தனவாம், யாதொன் றிருந்த படியறிய வறியா வெல்லா மறிந்தனவாம், யாதொன் றிந்த வுபதேச மறிக வறிவு மிகவுடையீர். 2

மண்ணதோர் திரளைக் காண வனைந்தகா ரியங்க ளந்த, மண்ணில்வே றிலாதெக் காலும் வருதலே யாத லால்வே, றெண்ணிடு நாம ரூப மிசைந்திலே

யாகு மென்று, மண்ணிதே யுள்ள தென்றும் வானவர்க் கயன்முன் சொன்னான். 3

உலகமோர் மணியி ரும்பா முகிர்சீவி யொன்று காண, உலகமெல் லாமு மாய வுருவமு மிரும்பு மஃதே, யலகில்கா ரணத்தி னோடு காரியம் வேறி லாமை, பலபட வறியும் வண்ணம் பகர்ந்தனன் படைக்கு நாதன். 4

காரிய மெல்லா முள்ள காரணம் வேறு மன்று, காரிய மொருகால் வேறாய் வேறன்றி யிருப்ப தன்று, காரியங் கார ணத்தின் வேறென்று கருதி லந்தக், காரிய மசத்தோ சத்தோ சதசத்தாய் வேறோ வென்றான். 5

சத்தாயே வேற தென்னிற் காரண முடைய தொன்றே, பொய்த்தாய காரி யத்தின் சத்தையோ புகலுங் காலே, யொத்தாகி நின்ற தன்றே யுரைத் தன னுலக மெல்லாம், வைத்தாயு மறைக ளோது மலர்மிசை மன்னும் வானோன். 6

காரண சத்தை தானே யென்றிடில் வேறு சொன்ன, காரிய சத்தை யில்லை யாயிடு முன்பு சொன்ன. காரண சத்தை யொன்றே யானபி னந்தச் சத்தைக், கோதொரு பேத முண்டாம் படியெங்ங னுரைமி னென்றான். 7

சத்தைதா னென்று நின்ற தாயினுங் காரி யங்க, ளொத்தபேர் வேறு பாட்டா லுள்ளகா ரணத்தில் வேறே, யித்தகைத் தென்ற வார்த்தை யியம்புபே ரளவே யானால், வைத்தகா ரியமுண் டென்னும் வார்த்தையு மசத்தே யாகும். 8

சத்தையில் லாத போது காரிய மில்லை யாகு, மித்தன்மைக் காரி யத்துக் கிலாமையே யிசைவ தென்று, மத்தன்மை யசத்தி னுக்கே காரியம் பிறந்த தென்றிங், கொத்தொவ்வா துரைத்த வார்த் தை யென்றுமின் றுகு மன்றே. 9

காரண சத்தை யேயக் காரிய சத்தை யின்று, வேறொரு சத்தை யுண் டே யென்றிடில் வேறு சொன்ன, காரிய சத்தை யுள்ள காரண சத்தை

யோடு, கூறிய சத்தாய்க் கொண்டே வசத்தாயோ நிற்ப தென்றான். 10

சத்தாய்க் கொண்டே வேறென்னி லொன்றே சத்தை யிரண்டாகா, தசத்தாய்க் கொண்டு காரணத்தோ டாகி வேறு நிற்குமெனி, லசத்தா மிதுதானிலாமையினு லசத்தே யாகுங் காரியத்தை, யிசைத்தே லுளதாய்ச் செயமாட்டா தென்று மலடி மகன் போல. 11

காரிய மொருகா லுண்டா மொன்றினு லழிவ தில்லை, காரியந் தனக்குற் பத்தி யிலாமையா லில்லா வொன்றாங், காரியந் தானென் றேடே நண்ணுமென் றுரைத்தல் கூடாப், பாருமி னென்று வானோர்க் குரைத்தனன் பதும மேலோன். 12

இன்னதோர் படியி ருக்கு மெனப்படா திலாமை யேபோ, லன்னதே யாத லாலே யாவது மிலதே யாகுஞ், சொன்னவிக் காரி யந்தா னசத்தெனத் தோற்றி னும், பின்னையும் விசேட மொன்றுண் டென்னவே பேசு வீரேல். 13

இதற்குநீர் சொன்ன வேறே தியைந்திடு சம்பந் தந்தா, னதற்கொரு கார கத்தா லென்னில்வே றமைவ தில்லை, யொதுக்கமில் லாத தொன்றே விசேடமா யிருக்கு மென்று, மதற்குவே றொன்று மில்லை யாதலாற் கூடா தென்றும். 14

காரணத் தோடு கூடல் வேறெனி லதுதன் னுலுங், காரணந் தானே யாகு மிதினின்றுங் கருதிச் சொன்ன, காரியம் பிறக்கு மென்ற விதுகொண்டு வேறு சொல்லிற், பாருள குற்ற முன்போற் பரிகரிப் பாரு மில்லை. 15

இரண்டுக்கு மொன்றே சத்தை யெனுமிது வேறே யென்னிற், றிரண்டிடுங் குற்ற மெல்லாஞ் செறிதனிச் சயமெப் போதுந். திரண்டகா ரியம சத்தே யாதலாற் சதசத் தென்னி, லிரண்டிற்கு முரைத்த குற்ற மிசைந்திடு மியல்பி னுலே. 16

உண்மையிற் பேத மின்றி யிருந்தேயும் பேத மென்னல், வெண்மையே செய்த ரூப வியாபாரந் தோற்றங் கேடு, பண்வயி னிவற்றுற் கொள்ளும்

பயனும ரூபம் வேறு, முண்மையி லெல்லாம் பொய்யா லுண்டாகு மனைத்து மன்றே. 17

எல்லா விகாரங் களும்வாக்கா லென்று முண்டென் றுரைப்பதுவுஞ். சொல்லா மளவே யெவ்விடத்துந் தோன்று மென்ற துண்மையதே, யல்லா விகார மறிவொழிய வனைத்தும் பொய்யே விகாரத்துக், கில்லா தாகு முண்மைபிறி தில்லா தாகு மாதலினல். 18

காரண மதனு லன்றிக் காரிய முளவாய்த் தோன்ருக், காரண மொழிய வேறு காரிய மின்மை யாலே, காரிய மனைத்தி னுக்குங் காரண மதுவே யுண்மை, யேர்தர விரண்டும் வேறென் றியம்பிட லியன்பின் ருமால் 19

ஆமன்றென நினைவீரல தன்பின்வழி யறிவீர், நாமுன்சொன முதல்கார ண மறியம்முழு தறிவாஞ், சேமம்பட மிகவுந்தெளி வுறுவீரிது வேறே, தாமந் தரு மலர்மேலுறை தலைவன்னுரை தருமால். 20

கூறும்பொருள் விரிவென்றிவை யறியா மையின் முழுதும், வேறும்மல வேறேடுட னுய்நின்றது மல தான், றேறும்படி யுளகாரண மொன்றேயுள தென லால், வேறென்றிடு பேதம்மில தாமெங்கணும் வினையாம். 21

அயலொன்றிடு பொருளும்மதன் பிரிவும் மரி வரிதா, மியல்பின்கண தறியும்பொழு திவைதான்மிக வேரு, மயலொன்றிவை யறியில்லறி வறியாமைதன் னியல்பான், முயலும்பல பேதம்மென முடியும்வினை முழுதும். 22

பேதந்நெறி யோரில்லில தாகும்மத னாலே, பேதம்மொட பேதம்மது பேசல்பிழை யேயா, மேதம்மில தாயெங்கணு மொன்று மொழி வில்லா, தியாதொன்றது முதல்காரண மெனுமாமலர் மிசை யோன். 23

மண்ணும்வனை வானும்வனை பவையும்பிறி தாயே, யெண்ணும்மன வறிவின்செய லிவனைப்பெற விசையுங், கண்ணென்றிட வருகாரண மொன்றேயம

லமதா, லெண்ணும்மறி வுருவையிசை யாநிற்பதெவ் விடமும். 24

வணகின்றவ ரொருகாரணம் வரசேதநன் வேறு, நினையும்படி யிலதாதலி னிலையாயுள தறிவி, லன காரண மறிவாயினும் வனைவானிக ரன்று. நினமண் ணொடு நிகரானவை தனையேகொடு செயுமால். 25

தோன்றலா லசித்து மாகித் தமத்தொடு கலந்து நின்றே, யான்றவ முநிகள் பண்ணு மநநத்தா லளப்பொ ணுதாய்ச், சான்றதா யெங்கு நின்ற சங்கர னுடைத்தா யொன்று, மீன்றிடு மரிய வெல்லா மித்தன்மைத் தெனவொன் றுண்டு. 26

காரண மேவி மாயை படைத்தளித் தழிப்ப தாகுங், காரணஞ் சத்தாஞ் சித்தா யிருத்தலா லென்று கொண்டே, பூரண மாகி யுள்ள பொரு ளினைச் சுரர்கள் கேட்ப, வாரண முரைத்த வாதி யருளின னறியும் வண்ணம். 27

உண்மைசித் தினுக்கே யுள்ள தசித்தெனும்

பழுதைப் பாம்பிங், கெண்மையி னிலாத வண்ண மிசையுமுங் கட்கு மேற்கக், சண்ணென முழுது நின்ற காரண மொன்றே சத்தா, யெண்ணிடி லென்று முண்டா யிருப்பதென் றியம்ப லுற்றான்.

அறியாதா ரசத்தாய் முன்பு காரண முளதாய்த் தென்பர், நெறியாலிவ் வசத்துண் டாக்குங் காரண மாகா தென்றும். பிறிதாய காரி யங்க ளிதினின்றும் பிறக்கு மென்னில், வறிதாய மலடி மைந்தன் காரண மக்கட் கெல்லாம். 29

அசத்துத்தன் சத்தி யாலே யாவுக்கு முதலா மென்னி, லசத்துக்குச் சத்தி கூடா தாமசத் தாத லாலே, யசத்தலா வித்தி லென்று மங்குரந் தோன்று மானு, லசத்தசத் தாகுஞ் சத்தே யாவையு மாவ தென்றும். 30

அசத்தின்க ணுளதாஞ் சத்தி சத்தாயோ வசத் தாய்க் கொண்டோ, வசத்துடன் சத்தாய்க் கொண் டோ வாய்நின்ற வாற தென்னை, யசத்தினை யுளதாஞ்

சத்தி யாசரித் திடுவ தென்னி, வசத்தாய மலடி மைந்த னியாவையு மாக்கு மன்றே. 31

அசத்தின்றன் சத்தி தானு மசத்தாலே நிற்ப தென்னி,லிசைத்திடுங் காரி யங்க ளியாவையு மியற்று தென்று, மசத்தோடே மலடி மைந்த னுக்குவ திலாமை யேபோ, லசத்தோடே சத்தே யென்னி லாயிடு மிரண்டின் குற்றம். 32

அசத்துத்தன் சத்தி யாலுங் காரண மாகா தானு, லசத்துமுன் புளதென் றேதற் கருத்தமு மில்லை யேயா, மசத்தலா தாகு மொன்றே யனைத் திற்கு முதல தாகு, மசத்துள தாகு மென்ற லழிந் திடும் வார்த்தை யன்றே. 33

பூதத்தா லுளதா யுள்ள புவனங்க ளுயிர்கண் முன்போன், றேதத்தா னரிய சத்தா லுதித்ததென் றுணரும் வண்ணம், வேதத்தான் முழுதுஞ் சொன்ன வடிவினை விளங்கு மாற்று, லோதத்தான் றெடங்க லுற்று னுயர்தரு சுரர்கட் கெல்லாம். 34

எல்லாமுண் டாவதற்கு முன்னே தோன்றி யித் தனைக்குங் காரணமாஞ் சத்தை யாகு. மில்லாத முதன்முடிவை யுடைத்தா யொன்று யிருக்குமிது வெனலாகு மியல்பிற் றுகி, நில்லாத வுலகனைத்து முன்பு செய்த நெறியதனை யுடைத்தாகி நிமல மாகிச். சொல்லாலு மளப்பரிதா மிதன்ற னுண்மை சுருதி முடி வதனுலுந் தொடரொ ணுதால். 35

காலமுங் கன்மங் தானும் பரிபாக மான வாறே, ஞாலமுண் டாக நல்ல குணத்தினைக் கலந்து நிற்கும். பாலதொன் றில்லா விந்தச் சத்திமான் படைத்தற் காக, வேலவே யெல்லா மாவோ மென்றுகொண் டிசைந்து பார்த்தான். 36

பார்த்தபின் முன்னு காயம் வாயுவைப் படைத் துப் பின்பு, தீத்தனை யப்பைச் செய்தே யநமெனச் சொல்லப் பட்ட. பூத்தனை யுளதாய்ச் செய்த காரண மாகா வீசன். வாய்த்தநுண் பூத மைந்தால் வகுத் தவா றியம்பக் கேண்மின். 37

தன்மாத் திரைக ளைந்தினையு மோரொன் றிரண்

டாய்ப் பகுத்தொன்றை, நன்று லாக்கித் தன்பாதி யொழிந்த நாலி னுடன்கூட்டி, யின்னே யல்லா தவைநான்கி லியல்பிற் கூட்ட வாநாகி, பின்னே தூல பூதமெனப் பிறக்கு மெனவே பெயர்த்துரைத் தான். 38

அறியாமை வடிவா யுள்ள புவநங்க ளமைத்துப் பின்பு, பிறியாத கன்மந் தன்னின் வசத்தினு லுயிர் கட் கெல்லாஞ், செறிவாய காலபாக மானபி னீசன் ருனே. பிறிவாகு நான்கு யோநி பிறந்திடும் வகையே செய்யும். 39

ஈசனு மிறைவ னுெத்த வறிவினு லெங்கு மாகிப், பேசிடு நாம ரூப முன்புபோ லுண்டாய்ப் பேணு, மாசிலாச் சகத்துத் தானே யுளதுயோ லசைந்திட் டாலு. மீசனை யொழிய வேறு நிற்பதொன் றில்லை யென்றும். 40

அநலினிற் சிவந்த மேனி யானதவ் வொளியே யாகு, மநல்வயின் வெண்மை யப்பாங் கருமைபூ மியின்றன் கூறு, மெனவிவை மூன்று மன்றி யீண்டந

லென்ப தில்லை, யநலெனும் விகாரம் வார்த்தை யாவதே யன்றி யில்லை. 41

ஆதித்த னிரத்த வந்த மானதவ் வொளிய தாகு, மாதித்த னிடத்து வெண்மை யப்பின தாகு நின்று, பேதித்த கறுப்புப் பூமி யுடையதிம் மூன்று மன்றி, யாதித்த னென்று வேறிங் கில்லையென் றறிமி னென்றும். 42

அறிவொடு விவேக மில்லா தாதலா லவாக ளாலே, பிறிதர விரவி யென்று பேசிடப் பட்ட தென்று, மறிகனல் பிருது வீநீ ரானவிம் மூன்று மன்றிப், பிறிதுசந் திரனை மின்னைப் பேசிடல் பிழை யே யன்றே. 43

பூதம் புவநஞ் சுவர்வே றுருடம் போலும் பொருளா யுளவா தலெலாம். பேதம் பிரம மொழிய வில்லையாற் பேர்வின் றிடநின் றதுதா னதுவே, யோதுஞ் சநநம் பலவா தனையா லுடலம் முதலா கியவெளி யினிலே, பேதம் படநா னெனவே யறியும் பெயரா மயலா யிடுமெங் கணுமே. 44

ஊனிந் திரியா திகளா னவெலா மோருங் கணிஞ னெனலா கியிடா, வானம் முதலா கியபூ தம தால் வரவின் படியே வளர்வும் முளதா, லானம் மணிஞ லமையுஞ் சுவர்தா மாகும் மணுநீர் கொட ளித் திடல்போ, லூ னுங் கரணங் களுமுண் பவையா லுளதாய் வளரும் மெனவே யுணர்மின். 45

ஊனு திகளா யதிரட் சியிலே யொழியா வணநா னெனதென் றுகொடே, நானே நுகர்வே னெவை யென் றுணரு நானு வறிவா னவைவிட் டிவையிற், ருனே முதல்கண் டிவையித் தனியிற் சலியா வறிவா கியதென் மையிலே, நானே யதுவென் றிடு நல் லறிவோர் நாடார் பிறிதென் பதுநா டொறுமே.

கடையப்படு தயிரிற்றிர ணெய்போன்மந முதலா, மிடையிற்செயு மியல்வேறில யுளபூதம திடையே, யடையத்திர ளுருவிற்செலு மதிவிட்டறி வுருவா, மடை யப்பிறி திலமெய்ப்பொரு ளதுதா னெனு மறிவீர். 47

அந்நத்தா னிறைவி லானுக் கறிவுதோன் றுமை

யாலு, மங்கா ரியமே புத்தி யாதனிச் சமய தாது, லங்கத்தா லுண்டா மந்தப் புந்தியைத் தவிர்ந்து நாளு, முன்னுவா னெங்குங் காணு மறிவுநா னென் றெப் போதும். 48

தேகேந் திரியா திகளாகுந் திரட்சி யினைநா னெனதென்றே, போகா நின்ற புத்தியினை விட்டுத் தாது யிருந்துளதா. யாகா தெல்லா மாகியிடு மறி வாஞ் சித்தி லியாதொருகா. லேகா வொன்று யடங்கியிடு மவன்ற னியல்பை யியம்பிடுவாம். 49

அப்போது சுகதுக் கங்க ளாதியாய்ச் சொல்லப் பட்டிங், கெய்ப்பாய விகார மெல்லா மறியாது தன்னைத் தானே. மெய்ப்பாடா யறியா நின்றோன் விளங்கவவ் விடத்தே காணுந், தப்பாது தானய் நின்ற சுகத்தினைத் தடையொன் றின்றி. 50

ஆதலா லறிவுள் ளோர்க ளழிந்திடு முடலே யாதி, சேர்தரு புத்தி தன்னைச் செலவிட்டுத் தெளி யும் வண்ணங். தீதிலா தெவையுங் காணுந் திகழ்தரு சித்தின் கண்ணே, யேதிலா மதியை நானென் றிடு

மின்க ளிசைத்தெப் போதும். 51

காண்பவன் றானே யாகுங் காண்பவை யென்ற யாவுங், காண்பவன் றன்னில் வேறென் றின்மையிற் றனையே காணும், பூண்பதொன் றின்றி நின்ற பூரண மதுநீ யென்ற, மாண்டவார்த் தைக்கு முள்ள பொருளிது மற்றென் றில்லை. 52

நீயென் கின்ற வார்த்தைக்குப் பொருளா யென்று நிற்பதுவே, நானென் கின்ற வாசகத்தின் பொருளாய் நின்று நாடுவது, நானென் கின்ற வாசகத்தின் பொருளாய் நாடி நிற்பதுவே, நீயென் கின்ற வாசகத்தி னிற்கும் பொருளு நிலைபெறவே. 53

சொல்லிய விரண்டி னுலுஞ் சுட்டிடப் பட்டு மேலா, யெல்லையில் பொருள்க ளான தியாவுக்கு முன்னே தோன்றி, நல்லதோ ரறிவா யுள்ள தியாதொன்ற தென்னும் வார்த்தைக் கெல்லையாம் பொருளுந் தானே யெனுமிடம் பார்க்க வேண்டா.

உடம்பா திகளில் வேறுகி நீநா னென்னு முறையாலே, திடம்பாடாகச் சொலுமிந்தச் சித்தா யுள்ள

பொருளினையே, யடங்கா ததுவென் றிடும்வார்த்தை யிதினின் றுண்டாய்த் தெனச்சுருதி, தொடர்ந்தே தத்தொ மசியென்றே சொல்லு கின்ற தெனவுரைத் தான். 55

தற்பதப் பொருளா யுள்ள வறிவொடே கூடு தற்கு, நிற்பதொன் றிலையாய்ச் சொல்லப் பட்டகா யாதி விட்டு, மெய்ப்படத் துரியத் தோடே யுடனுகி வேறி லாத, சிற்பொரு டனையே தத்தொ மசியெனச் செப்பு மன்றே. 56

அதுவென் றுரைசெய் பொருளா மதிலு நீயென் றுரைசெய் பொருளா மிதிலு, மதிபண் ணிடவே றதுவா கியிடு மறிவா கிகள்கா ரணமன் றியிலே, யெதுமொன் றுமிலா தவையா வையுமா மிவையென் றிடுகே வலசித் தினையே, யதுநீ யெனும்வாய் மொழி யா மதனு லறியும் படிசொன் னதிவ்வா ரணமே.

தத்துவ மென்ற வார்த்தை யிரண்டுக்கும் பொருள தாகிச். சித்துமெய் யாகி நின்ற திகழ்பர மொன்ருந் தன்மை, தற்பரந் தன்னினுலே சித்திக்கு

மென்ப தேயிங், கப்படி வாக்கி யத்தி னருத்தமே யாகு மன்றே. 58

இப்படி யன்றி வேறு யிருந்துள பொருடா னியாதொன், றப்பொருள் வாக்கி யத்தி னருத்தமன் றுகு மொன்று, மெய்ப்படு பொருளின் ஞான முள தாகா வாக்கி யத்தாற், செப்பிடும் வார்த்தை தன்னி னறிவின்மை சிதைத்தல் செய்யும். 59

அறியாமையினை யழிவித்துக் கொண்டே யிங்கு வாக்கியந்தான், பிறியா தொன்று மறிவினையுண் டாக்கா தென்று பேசுங்காற், செறிவா யுண்மை யுருவாகுஞ் சித்தி னொளியைத் தவிர்த்துண்டா, மறியா மையதொன் றெனவில்லை யாகு முண்மை யறியுங்கால். 60

நோக்கு மிடத்து வாக்கியத்தா னுண்ணிதாய பரத்தொளியை, நீக்கி நிற்கு மறியாமை யென்ப தில்லை யாதலினு, லாக்க மில்லா வறிவின்மை யழிப்ப தென்றுங் கூடாது, தாக்க தின்றி யொன்றுத றன்னுற் கூடுந் தன்மையதே. 61

பிரமா ணங்க ளாயவைதான் பேத மில்லா தொருபொருளைத். திரமா யிதுவென் றிடமாட்டா செல்லா தாமங் காதலினு. லுரைமாத் திரமா யாவை யினு முளவஞ் ஞாந மதுதானும், பரமா மொளியே யாகியிடும் பார்க்கி லுண்மைப் பரிசிதுவே. 62

அறியாமை யென்று வேரு மதுதாஞ மறிவி னுண்மை, பிறியாது நுண்மை காணு மளவினி லுளது சத்தே, யறியாமை சத்த சத்தே யாகிய விரண்டின் மேலா, மறிவான தோன்ற ருனு மறிவின தொளியே யாமால். 63

தோன்றுகூட் டரவி னுலே தோன்றிடும் பொருள்கட் கெல்லா, மூன்றிடு முண்மை யுண்டே லதுவுள்ள பரமே யாகும், தோன்றுவ துளது பாரா தொழிதல்வே றுண்மை யென்னிற், ரேன்றிய வுருவு முண்டாய்த் தோன்றலாற் பரமே யன்றே. 64

உருவமா யொளிர்வ துள்ள பிரமமே வேறென் றில்லை, யுருவமா யுண்மை யின்மை யாதலில் வேறி னுக்கு, முருவமுண் டென்று சொல்லப் பார்த்திடில்

வேறொன் ருய, வுருவத்தாற் ருேன்று ரூப முண்மை யிற் பரமே யாகும். 65

அந்நியத் தினுக்குச் சொன்ன வுருவுவே றுருவி னுலா மென்னிலப் பரந்தா னன்ரு மெனுமுரு வந் தான் ருனே, யுன்னிய பரத்திநேடு பிந்நமோ வபிந்ந மாயோ, சொன்னவவ் விரண்டுங் கூடி யுள்ள தோ சொல்லு மென்ருன். 66

பிந்நமென் றுரைக்கி லந்த வுருவுவே ருகை யாலே, சொன்னவவ் வுருவே யாகுந் தற்பதஞ்சொல் லுங் காலே, பிந்நமன் றென்னிற் ருனே யாயிடும் பந்நா பிந்ந, மென்னின்முன் சொன்ன குற்ற மிரண் டும்வந் திசையு மென்க. 67

பாராத படியி னுலே பரத்தினில் வேற தாக, நேராயொன் ருகித் தோன்று நெறி சொல வார்த்தை யேயா, மேராயோர் பயனு மில்லஞ் ஞாநமு மெக்கா லத்தும், பேராது விளங்கு கின்ற பிரமமே பிறி தொன் றில்லை. 68

எல்லாமஞ் ஞானத் தாலே தோன்றுறு மென்ற ருனும், இல்லாத வொன்றில் வேரு வறிவின்மை யிலாமை யாலே, யில்லாதஞ் ஞான ஞான காரிய மிரண்டு மூன, மில்லாத பிரமந் தானே யெனு மிதென் னறிவே யென்றான். 69

இப்படி யெல்லா மாகி யிருந்ததே பரமே யென்ன மெய்ப்படி யேயா யுள்ள சுருதிதான் விளங்கா சொன்ன, வப்பொரு டற்பா வத்தா லாவதே யென்று கொண்டு, செப்பிடுஞ் சுரர்கட் கெல்லச் திகழொளி மலரின் மேலோன். 70

கேட்பவ னுடைய சித்தம் பரிபாக மிலாதே கொண்டு,மீட்சியாய் வசம நின்றி வேதமோ ரிடத்தி லோர்காற், காட்சிய துள்ள கால பரத்திநீ யொழிந்து வேறு,மாட்சியி லொன்றுண் டாக வகுத் துரை செய்த தன்றே. 71

இத்தா லித்தைச் சாதிப்ப தென்ற நீர்த்த மாடென்ற, லொத்தொவ் வாது வேறுபடத் தோன்று முலக மென்றுரைத்தல்: வைத்தே பாவ

புண்ணியமும் வங்ஙாச் சிரமங் களுமிவற்றோ, டொத் தே நின்றோர் சரிதைகளு முரைக்கும் வேறு முள்ள னவும். 72

சுகமொடு துக்கம் பூதம் பௌதிக மிதுவே யென்றல். சசமுடைத் தாய சத்தம் வேறினின் றகைமை தானு, மகமறி வென்று நின்ற வறிவினில் வேறி யாவும், தகவுள வுண்மை யென்றே சாற்றிடுந் தன்மை தானும். 73

எல்லாம் பொய்யே யென்பதுவு மாயைக் குண் மை யியம்புவது, மில்லா மாயை யிதனாலே யியலும் பந்தம் வீடுகளு, மெல்லா மாகுங் குருமதமு மிவனே யடைவோன் றன்மதமுஞ், சொல்லா ரளப்பில் லாவிச்சை யிருக்கும் படிசொல் லுகைதானும். 74

ஓது கின்ற நூல்பலவு முரைக்குந் தர்க்க முள்ள னவும், பேதித் துளதா மிகவுமெனப் பேணிச் சுருங் கச் சொல்லுகையு, மேத மின்றி யித்தனையும் பரத் தில் வேறென் றியம்புவது, நீதி யாகு முளவெவையு நின்றே நிகழ்த்து மாமறைதான். 75

பரமா யுள்ள மறைதானே பாக மானோ ரறி வுக்குத், தரமா யடையும் பரிசாகச் சாற்றி யவர்கட் கிதமாகத், திரமா யுள்ள மழுங்கேயுஞ் சிறிதே யெல் லா விரதம்போ. லுரமாய்த் தாமிப் படியென்றே யுபதே சித்த தன்மையினல். 76

சாத நமாகுஞ் சதுட்டயங்கள் சமைந்த வத்தன் மையினோர்க்கு, நீதி யாக வருமறைதா னின்றே யிவர்க ளறியும்வணம், பூத மாயும் புவநங்கள் பிறவு மாகி யிருந்ததுவு, மேத மில்லா தொன்ருய பரமே யென்றே யியம்பினதால். 77

சகமொடு சீவ னீசன் சார்ந்துள விகார மின்றிச், சுகமுடைச் சத்தாய்ச் சித்தாய்த் தூகளின்றி நுண்ணி தாகி, யகமெனு முரைகட் குள்ளா யறிவரி தாகி யொன்ருந், தகவுடைப் பரமந் தன்னி னொருமையை மறைகள் சாற்றும். 78

ஈசன் சகமோ டுளசீ வனதா மியாவும் பரரூ பம தென் றுகொடே, நேசம் மதனு ளுளதா கியதன் னிறையும் மறிவா னதியா ததுதான், மாசெயன்

றதிலா தபரம் பொருளும் மயலொன் றறியா தவபே தமது, மேதம் மொழிவே தநமா வதுவு மென்றம் மலரோ னுமியம் பினனல். 79

இத்தன் மையொழிந் துளதா மறிவே யாதொன் றறியா மையையெய் தியதே. மெய்த்தன் மையதா யறிபோ ததினும் வேறு யறிகின் றவிடந் தனிலு, மத்தன் மையில்வே றுபடா ததிலோ ரைய மிலையா சறகின்றதுதான். சித்தொன் றியறிந் திடுமவ் வறிவே சேர்தற் கரிதா யிடுமெங் கணுமே. 80

எப்படிப் பொருள்க ளெல்லா மிதுவிது வென் றே யென்றுஞ், செப்பிட வுண்மை யாகத் திகழ் தரும் வேறு பாட்டா, லப்படிச் சிவனே யந்தப் பொருள்களி னுண்மை யாகி, மெய்ப்பட விளங்கு கின்றான் வேறொரு பொருளன் றுமால். 81

யாதொரு படியிற் போதம் பொருடொறும் விளங்கு மன்னோர், தீதிலாச் சிவன்றன் சத்தி யாயதே பிறிதொன் றன்று, லேதமில் சத்தி யின்னே யிசைந் திட வறித லேயாம், போதமு மிறந்து தோன்றும்

பொருளொன்ரு யறியும் வண்ணம். 82

யாதொரு படியி ஞலே யாவையுந் தோன்று மத்தை, யோதிய பரமே யாக வுண்மையா யறிந்தா னியாவ, னேதமி லீசன் றன்னை யியல்பிஞ லெளி தாம் வண்ணம், பூதஞ மவனே மிக்க பூசனை செய்யா நின்ருன். 83

எப்படிப் பூத நாநா வுருவமா யிலங்குந் தன்னு, ளப்படி யறிவே யாக வநுபவித் திடுத லேயாஞ், செப்பிட லரிதா யுள்ள திகழொளி யாகுந் தன்னை, மெய்ப்பட வேருென் றின்றி விளங்கிடும் பூசை தானே. 84

போதம தாகித் தோன்றும் பொருளெலாஞ் சிவனே யாக, வேதமி லறிவாற் காண்பா னெவனவ னுண்மை கண்டான், றீதிலாச் சிவனன் றென்று சிறிதொன்றைச் சிந்தை செய்வோன். பேதமா மருளின் மேய பித்தனென் றறிய லாவான். 85

சிவனிது வன்றே யென்று சிறிதொன்றைச்

சிந்தை செய்யு, மவனறி வுடையோர் தம்பா லதம னென் றறியப் பட்டா, னுவமையொன் றில்லா வீசன் றனையிகழ்ந் தொழுகு வானும், பவமதி லென்று மேவும் பசுவெனப் படுகின் றானும். 86

எல்லாமுஞ் சிவரூப மாகித் தோன்று மியா வனுக்குத் தன்னுடைத்தா யவனே மிக்க. சொல் லாலு மளப்பரியா னவன்ற னிச்சை சுருதியினுற் றுணிந்துரைத்த சரிதை தானும். பல்லோரு மவனை யருச் சனைசெய் தேத்தப் பரரூபந் தனக்கேநற் பூசை யாகு, நில்லாத வவிச்சையினை நீங்கி யுள்ள நிர்க் குணனு மிவனுரு நினையுங் காலே. 87

எப்பொருள் களுந்தா னுகி யிலங்கிடு மறிவா மீச, னப்படி விளங்கு கின்ற தறிதலே யவன்ற னக்கு, மெய்ப்படு பூசை வேறோர் செயலினு லன்று மெய்யே, யிப்படி ஞாநந் தன்னு லிறைஞ்சிடப் படு வா னீசன். 88

சகரூப மாய வதில்வேறி லாது விளையாடு தெய்வ மதுதான், சுகரூப மாய தனையேப குத்து விளையாடி

யுண்ட லதனே, யகமாயை யின்றி யறிகின்ற போத
மூளதாகி நிற்கு மதுவே, தகநாளு மோது மறிவாவ
தென்று சதுரான நன்சொ றருமால். 89

ஆன தாகாத் தெய்வமதே யடையும் விடய
மிந்தியமாய்த், தானு மாகித் தனைத்தன்னுற் றூனே
நுகருந் தன்மையது, வூன மாகு ஞாதாதி யொழிந்தே
யுள்ள வறிவதனுற், றூனே யாகக் கண்டிடுதல் சத்தா
யுள்ள பூசையதே. 90

பிறப்பிறப் பாய துக்கம் பிறித்திட லுளதா
யென்று, மிறப்பிலா வீசன் செய்யு மருளினு லிசைவ
தாகி, மறப்புடைப் பாவ கத்தின் வரும்பொரு
ளன்றாய் மேலா, யிறப்பதாம் பேத மோர்கா லியைங்
திடாப் பொருளி தன்றே. 91

ஆதித்த னொளியை யந்த னறிந்த கண் டிடாமை
போல, நீதிக்க ணறியு நாட்ட மவிச்சையான்
மறைந்து ளோர்க்கு, மேதக்கட் கிசையா தெங்கு
மியாவையு மாகி நின்ற, சோதிக்கண் ணொளியு மாங்
கே தோன்றிடா தாகு மன்றே. 92

ஈசன்ற னருளி னாலு மிசைந்தவா தரத்தி னாலு, மாசுகிர் நிலேயி னாலு மருள்பவன் பார்வை யாலும். பேசிடும் பாவ கன்ம புண்ணிய மிரண்டு மொத்தாற். பாசமாம் படலம் போக்கும் பரம்பொரு டிகழு மன்றே. 39

சுத்தமா யென்று முள்ள சுருதிதா னருளினாலே, யித்தன்மைத் தாகு ஞான மென்றுகொண் டிசையும் வண்ணம், பத்தரா யுள்ளார்க் கேயப் பலபடி யாகப் பல்கா, லுய்த்துநோய் கழியும் வண்ண முள்ளவா றுரைத்த தன்றே. 94

சிவனே யுள்ளான் பிறிதில்லே யென்று திரமா யறிவதுவே, பவமே யொழிக்கும் பரமார்த்தம் பகரு நெறிதா னதுவாகு, மவமே யிதனே யொழிந்துளதா மவைதா னிதனே யடைதற்குத், தவமே முதலாஞ் சரிதைகளைச் சாற்று கின்ற தன்மையவே. 95

ஆதர முடையீர் கேண்மி னருமறைப் பொருளி தென்றே, யோதலா லுவமை யில்லாப் பொருளிதி லேய முண்டேற், நீதற மழுவைக் காய்ச்சிச் செங்

கையி னிடுவே னென்று, ஞதனு புலக மெல்லாம்
படைக்குநான் முகனு யுள்ளோன். 96

பத்தரா யுள்ளீர் கேண்மின் பகர்ந்தவே தத்தி
னர்த்த, மித்தகைத் தாகும் வேறென் றில்லையா
மிதனி லுங்கள், சித்தநம் புதலுண் டாகச்
செப்பினே மாணை மூன்றே, டத்தனுர் பாதந்
தொட்டே யென்றன னலரின் மேலோன். 97

அன்பரா யுள்ளீர் கேண்மி னறிவித்த
பொருண்மெய் யன்றே, லென்சிர மிற்று வீழ்வ
தென்றன லிதுவு மன்றி, யின்பமே யளிக்கு மீச
னிவ்விடந் தன்னின் வந்து, தன்பெருங் கருணை
யாலுந் தளர்வறப் பண்ணு கின்றான். 98

இவ்வண முரைத்துப் பின்னை யாவர்க்கு மன்பா
யுள்ளோன், செய்வண மொழிந்தே யீசன் றிருவடி
சிந்தை செய்து, மெய்வண மிழந்து தாழ்ந்து
பணிந்துமெய்ப் பத்தி யாலே, யவ்வண மாகித்
தன்னை யழிந்தன னயனு மையன். 99

அப்பொழு தளவி லாத வருளுரு வாய வீசன், செப்பிடு மூவ ரேத்துந் திருவுரு வுடைய சோதி, யொப்பிலா மதியுஞ் சூடி யுமையொரு கூற னாகி, யிப்படி வானோர் காணும் படியுள வியல்பின் வந்தான். 100

நீடொளி மணிகள் சேர்த்தி நிமலமா யோங்கி யெங்கும், பீடுடைத் தாம நாற்றிப் பீறங்கரி மிசைய தாகி, யாடக மதனி னாலே யமரரா லமைக்கப் பட்ட, பீடம்வந் திட்ட தாங்கே யிருந்தனன் பெயரா தீசன். 101

அளவிலா வொளிய தாய வரனெழுந் தருள லுன்னித், துளபமா லுலக மியாவு மளிப்பவ னுவகை யோடுங், களமதார் கறைசேர் நாதன் கழலடி நினைந்தப் போதே, யுளநெகிழ்ந் துருகி யொல்லை வந்தன னுணர்வின் மிக்கோன். 102

நீத்தரா யுள்ள வானோர் நிறைமலர் மாரி யேன்மே, லுய்த்தனர் மிக்கவன்பா லுரைத்தனர்

அதிக ளெல்லாம், பத்தர்வே தங்கள் சொன்ன படியிலே பணிந்து வாழ்த்தி, யித்தன்மைத் தாய வேறுஞ் செய்தன ரிறைவர் காண. 103

கடுகியு முயர்ந்து தாழ்ந்துங் காளங்கள் பல முன் னூதப், படகமோ டிடக்கை சல்லி மத்தளம் பலவா கிப்பத், துடிகுழல் வீணை தாளம் வலம்புரி தொடர்ந்தே யார்ப்பக், குடமுழா முரசு பேரிக் குசலரா யினர்கொண் டார்த்தார், 104

வானவர் பாட வாட மங்கையர் மறையி னீரு, லானவா கவிக ளானு ராசிதோத் திரங்கள் சொல்ல, வீனமி லீசன் பாத பங்கய நினைந்து நோக்கு, மோனமா யிருந்தார் வேறு முநிகளோர் செயல தின்றி. 105

அன்பிலம் முநிக ளெல்லா மதிசய மாகி நின்றார், பின்புளோர் தலையி லாடும் பெருமையை யுடைய ரானு, ரென்புநைந் துருகி நெக்கங் கியாவருந் தாமே தம்மில், வன்பெருங் கைக ளாலுங் குத்தினர் வானோ ரெல்லாம், 106

தலையினான் முட்டி மேலுந் தாள்களா லுதைத்
துக் கைகள், பலவினா லடித்துத் தண்டிற் கயிறது
பூட்டி வானோர், சிலவர்தாஞ் சிலவர் தம்மைச் சிவி
கையாற் பொறுத்தார் வேறு, குலவியோர் குதிரை
தன்னிற் கொடுசென்று சிலர்மேல் வைத்தார். 107

ஓடினார்சிலவ ரொக்க நின்றவர்க ளொருவரோ
டொருவர் தழுவினார். கூடி யொண்புடவை மேலெ
றிந்துசிலர் கொண்டு கொண்டுவிளை யாடினா. ரோடி
வந்துபிரி யத்தி னோடொருவ ரொருவ ருச்சியைமு
கந்தன, ராடி னார்கள்சில ரன்பி னாலறிவ தொன்றி
லாதபடி யாகவே. 108

உமையோடு கூடி யுள்ளாய வீச னொழியாத
தேவர் செயல்கண், டமையாத வன்பு மிகவாகி
யங்கை யருளோட மைக்க வயன்மா, லிமையோர்க
ளோடு முனியாயி னோர்க ளிடர்தீரும் வண்ண
மருளா. லமையாத வங்க ணதுவைத்தல் கண்ட
தருள்பெற்று நின்ற தனைவோர். 109

சத்திய மாகி வேத மொன்றுமே யளவை யாகு, மித்தன்மைப் பொருளை யெல்லா வுலகரு மறியும் வண்ணம், சித்தரா மன்ப ரேத்து நிறைந்தமெய்க் கருணை யீசன், மெய்த்தகு பொருளி தென்றே விளம்பிடல் செய்ய லுற்றான். 110

உலக மியாவு முயிர்பலவு நானே சிறிதும் வேறில்லை, யலகி லறிவா லாய்ந்திடினு மாயா விடத்து மருத்தமிதே, திலக மாய மறைதணிந்து திகழ்த்தும் பொருளு மிதுவென்ற, விலகுந் தன்மை யநுபவமு மிதிலோ ரைய முளதன்றால். 111

அப்பா லாகி யெவர்கட்கு மதுவே யெனநிற் கின்றேனு, னிப்பா லாகிக் காண்பொருள்க ளெல்லா மாகி யுள்ளேனன், மெய்ப்பா லுயிர்க ளியாவையு மாய் விளங்கி மிகவு நின்றேனு, ஞெப்பே யிலையா முபாதிபல வாகி யெங்கு முள்ளேனன். 112

பூத மாகிப் பொருள்பலவாய்ப் புணர்ந்து நின்றுங் கரப்பவனன், பேத மாகிப் பேதித்தும்

பேத மில்லாப் பெற்றியனுன், சோதி யாகு பிரவிமகி யாகித் தோன்று கின்றேனுன், வேத மாகி யுள்ளே னுன் விளங்கு புராண மாவேனுன். 113

கூறு மோசை பலவவைநா னவற்றிற் குலவும் பொருளவைநா, னறு சமய மாயவற்றினருத்த மாகி நிற்பேனுன், வேறென் றறியும் பொருள்களுமாய் வேருய் விளங்கு கின்றேனு, னறுஞ் சிந்தை யழிந் தொன்று மறிவா லறியு மறிவுநான். 114

தோன்று கின்ற வொளியவைநான் றொடர்ந்தே செறியு மிருளதுநா, னன்றங் கமைந்தோ ருளமேவி யறிவாய் நின்றே யறிபவனு, னான்றும் பொருள் கண் மேலோடு முணர்வாவதுநா னுணர்பவனுன் சான்றங் காகி யெப்பொருட்குஞ் சலியா தென்று நிற்பேனுன். 115

பாடு மிசையா யவ்விசையின் பயனு யறிந்து நிற்பவனுன், கூடுங் கந்தம் பலவாயுங் கொள்வா னுயு முள்ளீனுன், காடுங் கல்லு மலைபலவுங் கட மும் படமு மாவேனு, னீடும் பொருளா யெவ் விடத்து நிறைந்த வொளியாய் நிகழ்பவனுன். 116

அளவை யோடங் கறிவானு மறியும் பொருளு
மாவேனா, னுளவஞ் ஞான ஞானமென வுரைக்கு
முண்மைப் பொருளவைநான், விளையுங் கன்ம சுக
துக்க மேவுங் கால மாவேனா, னுளம தார வுணர்
கின்ற சுவையா னாகி யுள்ளேனான். 117

தேவ ரெல்லா மாவேனான் றிகழு நரரா யுள்ளே
னான், யாவ ரேனுங் கருவாகி யிடுதற் கிசைந்தே
யிருப்பவனான், பாவ பேத புண்ணியங்கள் பலன்கள்
சுவர்க்க மாவேனான், மேவி யடையும் புத்திநான்
வீழு நிரய மாவேனான். 118

கரணம் பன்னான் காவேனான் கரணி யாய கார
ணனான், சரணந் தருதேசிகனாகித் தன்னுளடங்குந்
தன்மையனான், புரணந் திகழ்பே ரொளியோவாப்
போத மாய பூரணனான், கரணங் கடந்த வெளி
யென்றுங் காண்பார் காணப் படுவேனான். 119

நாத மாகி மந்திரங்க ளான வாகி யுள்ளேனான்
பேத மாகி நீங்கிருந்து பேறாந் தியாக மாவேனா,

னே தலாகு மவத்தைபல வொன்ற யறிவா யுள்ளோனு, னேத மில்லா வெப்பொருட்கு முள்ளே யிலங்கி யிடுபவ னுன். 120

யாதொன் றருத்த முண்டில்லை யென்னு முரைக ளிரண்டினுக்கும், யாதொன் றருத்தந் தோன்று மென் றுந் தோன்ற தென்றுஞ் சொல்லுதற்குந், தீதொன் றின்றி யிவையனைத்துந் திகழு மென்ற னுருவென்றே, யோது மைய மோரிடத்து முளதன் றுண்மை யுரைக்குங்கால். 121

யாதினை நித்த முள்ள புத்தமே சுத்த மென்றிங் கோதிடு மறைதா னென்ற னுண்மையே திகழும் வண்ணந், தீதினை யொழிந்த நிந்தப் பூரண மதுவே யாமென், றேதிடு மெய்யே யிங்கோ ரையமு முள்ள தன்றே. 122

அகமென வறியப் பட்டு நிற்கின்ற பொருளு மாகித், தகைமையி லிதமென் றுன்னத் தக்க விப் பொருளு மாகிச், சுகமுடைச் சற்சித் தாமென்

னுருவமே தோன்று மென்று, மிகவுரை செய்ய
லுற்றான் வேறுரு விலாத வண்ணம். 123

நானே முழுது மெனையொழிய நாடிற் சிறிதும்
வேறில்லை, யான பொருளை யருமறைதா ளறையும்
படியா னதனுலும், யானு மிசைத்த படியானு
மிதுவே நிடமா யுளபொருடா, ஞான மின்றி நான்
முகனு முரைத்த தங்கட் குண்மையிதே. 124

இப்பொரு ளையப் பட்டோ ரிறப்பர்கள் கணத்
தின் மெய்யே, மெய்ப்படு பொருளை யென்றும்
விடுதனிச் சயம தாகு, மிப்பொரு ளைய மின்றி யறிந்
தவன் பவபா சத்தை, மெய்ப்பட வொழிந்து மேலா
மொளியினை யடையு மன்றே. 125

பாசமோ சகனு மீசன் பகர்ந்தருள் செய்து
தன்னை, நேசமோ டயன்மா றம்மை நீடுறத் தழுவிக்
கொண்டு, வாசிலா வமரர் தம்மை யருட்கணு
லமைத்து நோக்கிச், சோதியா நந்த வெள்ளச் சுகருப
ராமி னென்றான். 126

சாந்தமெய்க் கருணை மேனிச் சம்புவை யமர ரெல்லா, மாய்ந்தபே ரன்பி னாலே யடியிணை மலர்க டம்மே, லேய்ந்தமா மலரு நீரு மிலையொடு பலமுங் கைக்கொண், டாந்தனை யிறைஞ்சி யேத்தி யருச்சனை செய்து நின்றார். 127

உலக மியாவு மளந்தருளு முலப்பில் கீர்த்தி நாரணனு, மிலகுந் தனது காரணமா மீசன் பாத பங்கயத்தைத், தலையின் மிசையே வைத்தருளித் தரியா வன்பாற் றுனமிழ்ந்தான், மலரின் மிசையோ னவ்வடிகண் மறந்தே தன்னை வைத்திருந்தான். 128

தேவர்க்குந் தேவ னுயை பெருமான்றன் கழல்செ றிந்த, யாவற்கும் பாச நீக்கி யெடுத்திட லியல்பா யுள்ளோன், மூவர்க்குந் தெரியா வுண்மைப் பொரு ளான தற்பா வத்தை, யாவர்க்குந் தெரியும் வண்ண மின்பக்கூத் தாட லுற்றான். 129

மேலா யருள்சே ராகரமாய் வேறென் றிடுதற் கரியவளுங், கோலா லளவில் பேரன்பாற் கூத்தன் றனையே பார்த்தருளிக், காலா லாட றனக்கிசையக்

கையாற் ருளக் கதிசெய்ய, மாலா முதலாம் வரநோர்
கள் வலவா மகிழ்வா லாடினரால். 130

பேரா நந்தக் கடலாய பெருமான் பிணங்குந்
தேவர்பிரான், பாரா வெல்லா வமரரையும் பரிந்துள்
ளுவகை கூர்ந்தெவர்க்குந், திரா வின்ப மளித்தருளித்
தெரிவை யொருபா லுடனுகி, யாரா லறியா வறிவுரு
வோ னுங்கே யறிவிற் கரந்தனனல் • 131

அரியு மயனை யணைத்துக்கொண் டமரர் முனிவர்
தமையெல்லாந், தெரிய வன்பான் மிகநோக்கிச்
சித்தங் களிகூர்ந் துண்மகிழா, வுரிய வுலகந் தணி
யினுமா முலப்பில் பெருஞ்சீர் வைகுண்டத். தரிவை
மலர்மே லவளோடு மரவி னணையோ னமர்ந்தனனல்.
132

அயனுமீண் டதிச யத்தா லவசமா யழிந்து
பின்னும், பயனுறு மமரர் தம்மைப் பார்த்துமுன்
பரிவி னலே, வயமெலா முளதாய்ச் செய்யு மலர்
மிசை மறையி னேனுந், தனதுவாய் திறந்து
வார்த்தை யுரைத்தனன் றழைக்கும் வண்ணம். 133

மாநுட ராளு ரென்று மோதிடும் விச்சை யெல்லா, மூனமாய்ப் பாச பெத்த மாக்கிடு முண்மை யாகத், தானதா மறிவாம் விச்சை யொன்றுமே பாச மான, வீனமா மிருளை நீக்கு மின்பநற் சோதி யொன்றும். 134

தானுகு மறிவொன் றில்லா தவனுக்குத் துன்ப வாழி. தானேயுண் டாவ தென்றுந் தான்றனிற் றழைத்து ளோர்கட், கானுதெவ் வுருவு மாகி யல்லவா மறிவாஞ் சோதி, தானுகும் வீடே யாதல் சங்கையொன் றில்லை யன்றே, 135

யாவ னொருவன் றனையிழந்தே யளவில் வேறு படக்கண்டும், யாவ னொருசொல் வேறுபடக் கேட்டு மறிந்தும் வருகின்றான், யாவ னொருவன் றனக்கென்றுஞ் சிறுமை யதுவே பிறப்பிறப்புப், போவ தில்லாக் காரணமு மதுவே யென்று புகன்றனனால். 136

அருளினு லியாவன் றங்க ணிலையில்வே றென்று காணு, தருளினல் வேறு கேளா தறிந்திடா

திருக்கி லக்தே, யருளதாம் பெருமை தானு மழிந் திடாச் சுகமு மெல்லா, விருளிலா வீடு தானு மென்றன விமையோர்க் கெல்லாம். 137

யாவ ரொருவர் தமக்கென்றுஞ் சிறுமை யுண்டேற் சுகமிலையா, மோவ லில்லா தளவு படா தொன்று மறிவாய் நின்றோர்கட், காவ தில்லைப் பிறப்பிறப்பு மழிந்து போக்கு வரவுமில்லை, மேவு பந் தம் வீடுமில்லை யென்றே விரிஞ்சன் விளம்பினனால். 138

தன்னிலே யாக்கப் பட்ட களவினி லுலக மெல் லாந், தன்னுணர் நனவ தாகத் தனிலவை யடங்கு மாபோற். றன்னிலே தோன்று மெல்லாப் பொருள் களுந் தானே யானற். றன்னிலே தன்னிற் றுனே யாமதே தனில்வே றின்றே. 139

எல்லாப் பொருட்கு மேற்சுகமா மிதனை யுங்கட் கேயும்வண, நல்லா ருளங்கொ ணடராச நாதன் பாதத் தருளாலே, யெல்லா மென்றன் கருணையினு லுரைத்தே னிதன்றன் மேற்கேட்ப, தில்லா வண்ண மினியானு மியம்ப வேண்டு வதுமிலதே. 140

5-சாங்தோக்ய உபநிஷத்தின் 6-வது அத்தியாய அர்த்தத்தை உரைக்கும் அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் - 314.

———

## 6 - சாந்தோக்ய உபநிஷத தாத்பரியம் உரைக்கும் அத்தியாயம்.

பங்கயா சநத்தி லிருந்திடும் பரமன் பழமறை பகர்ந்தவப் பரிசே, சங்கையா காமற் சங்கரன் றிருவாய் மலர்ந்தனன் பரிசினைத் தானே, யங்குவா னவர்கட் களிக்குமா றளித்து மளவிலா வருளினு லந்த, வெங்குமாய் நின்ற பொருளைமீண் டுணரு மிடத்தையுந் தெளிவுற விசைப்பான். 1

புகலரின் றிடுபிரம புரமெனும் பதியதனிற்
றகரபுண் டரிகமெனு மகமிலங் கியதகர,
ககநமுண் டது மறைகள் கருதரின் றுளபிரம,
மிகவிரும் புவர்பிறவி விடவிரைந் துளவிமலர். 2

தெரிவிடஞ் சிறிதலது சிறியதன் றறிவுருவு, பெரிதெனும் படிநினைக பிறழுமெங் குமுளதென, வுரியதொன் றுணர்வதுணர் வொழிவதென் பதுவு முணர், கரியழிந் துளதொர்பொருள் கழியநின் றதுவுயிலை. 3

அறிவின்முன் பலதுசட வகிலமுண் டென
நிகழ்வு, பெறுவதன் றறிவினிலை பெறநிகழ்ந் தது
பிறிது, செறிவுறும் பொருளினனி சிறிதெனும் படி
நிகழ்த, லிறைவனெங் கணும்விரவி யெலையலும்
படிநிகழும். 4

அளவிலம் பரமெவள வறிசிதம் பரமவள,
வுளதுவின் புவியனில மொளிபதங் கனுடுமதி,
துளிதரும் புயன்மின்முதல் சொலவரும் பொருள்
களினி, விளைபவென் றிவையிதய வெளியடங்
கிடுமடைய. 5

இலதெனும் பொருளுமிவ ணிடையிலங் குதலி
லிறை, சொலவரும் பொருண்முழுது நிலவினன்
சுழலும்வினை. நலனுமன் றியதுநரை மரணமும்
பசியைமுத, லுலகுறுந் துயர்முழுது முடையனன்
றொருபொழுதும். 6

பண்ணிய தொழிறரு பயன்க ளியாவையு
மண்ணிடை நுகர்ந்திட மாளு மாறுபோற்
புண்ணிய வினைதரும் போக மியாவையும்
விண்ணிடை யிருந்தநு பவித்து மீளுமால். 7

மெய்யினை யுணர்ந்தவர் வினைக ளியாவையுஞ்
செய்யினுஞ் செய்தில ராவர் தேவர்க
டுய்யநல் வினைகளே தொகுத்து மற்றையார்
வெய்யகர் மத்தராய் விளம்ப வேண்டுமே. 8

பொற்பொருள்பு தைத்தபுவி யிற்புலனி லார்போய்
நிற்பினுமி டிப்பர்நனி நித்தமுல கத்தோர்
தற்பொருள்சு முத்திதனி லுற்றுமது தானே
யற்பமறி கிற்றிலர யர்ச்சிவலி யையோ. 9

விதம்படுமு ளங்தொறும்வி சேடவறி வாயுற்
றிதம்படுத லாலிதய மென்பரிறை தன்னைத்
திதம்படவி வன்றிறம றிந்தவர்கள் சேரும்
பதம்பிரம மல்லதுப கர்ந்திடுத லுண்டோ. 10

சுழுத்தியத னிற்றுயர்து வக்குமுட றன்னின்
றெழுப்பியுள தன்வடிவி னுலிறையை யெய்துற்
றழுத்தமுற யாவனது வாகுமவ னெங்கும்
முழுத்தியுள தற்பரம மாகிமுடி வுற்றான். 11

இதுபரம் பரமமிர்த மபயமென் பதுவுமிது
விதமுறும் பலவுலகும் விரவலின் றிபபிரம
பதமிதன் கணிலிரவு பகலடைந் திலமரண
முதயமொன் றிலவிருமை வினைகளொன் றதுவுமில.

ஆதலிற் சிலவினையி னுலடர்ப் பவனுமில
னேதலுற் றிடுபிரம லோகமிப் பரமிவனேர்
சேதுவக் கரையடைஞர் சேர்வபக் கடல் விடுவர்
சா துயர்ப் படினுமவர் தாமிடர்ப் படுவதிலர். 13

செப்பிய பொருள்க ளியாவையுஞ் சென்று சேர்வரு வகைநின்ற சேது, வப்படிப் பட்டாலந்தனு மகந்த னருந்துய ருற்றுமுற் றிலனு, மிப்படியிதயா காசமென் றியம்பு மீசனிவ் வுடம்பின்லேறுகிக், கப்புறு நனவு கனவுறக் கத்தைக் கண்டவை கடந்துநிற் கின்றுன் 14

தற்பரந் தன்னிற் கற்பனை யாலே சாக்கிர கனவுறக் கங்க, ளற்புத மாக விளங்குமல் லதுதானுகவவ் வவத்தைகள் விளங்கா, கற்பனை யாகிக்

காட்சியாங் கடம்போ லுடம்பினைத் தானெனக் கருதிற், புற்புத வுடம்பாய்ச் செற்றவர் வங்கள் பொருந்துமை யுறேலினிப் பொருளில். 15

உடம்புட னிருந்தே யுடம்பிலா வுண்மை யுணர்ந்தவ னுளத்தொரு காலும், விடம்படுகாம வெகுளிமே வாது விளம்பிடும் பொருளெலாம் விளக்கு. மிடம்படு மிதயா காசமற் றிதுவே யிறப்பொடு பிறப்பில தென்றுந், திடம்படு பிரம மாவது மாத்மா வாவதுந் தேசிகட் கெல்லாம். 16

அப்பரம் பொருளே வேறொரு பரமு மாகிய தற்பமு மில்லை, யெப்பொரு ளாயும் விளங்கியும் விளங்கா திருக்கின்றான் ருனுமிங் கிறையே. யொப்பரும் பரம னுருத்திரன் சிவனென் றுரைக்கவின் றவனுடைத் தான, விப்பெருந் தன்மை யிருந்தவா றென்னே யேவரா லறியலா மிதனை 17

இந்தம காபூ தங்கள்ப குந்தே யெல்லையி லாநா மங்களை யும்பெற், றந்தவி காரங் களுநிகழ் போது மவ்வவை யாயே நிகழ்வது போன்மற், றந்தமி

லாவொன் ருஷியி ருந்தே யளவறு பேதப் பலபொரு ளாயிட், டெந்தவு பாதிக் குங்கரி யாய்பின் றெங் கும்வி யாபிக் கும்பர மீசன். 18

பிந்த டாகா யாதிக ளாலா காயம பேதம் பேதமு ருதே, யன்னவ னேகா காரன நேகா காரவ கம்புக் காலும னைத்தா, மன்னிய பேதா காரம பேதா காரமு மாய்மா தேவனி ரானே, வின்ன தெனுமத் தானெனு மாறெ னியானவையு மீசா கன்பிறி தன்றே. 19

உளவாகியு மிலவாகியு முருதவாலெலை யிலகு, மொளியானவ னவனேயவை யவை யாயொளிர் வுறுவா, ளளவாவகை சிவனே யடை யவுமானவ னெனவே, தெளிவாகிய மதியாதது சிவையாவது தெளிவீர். 20

சிவனேயக மெனவேதிகழ் வுறுவானித மென வின், றவனேயுட லதுமாய்நிகழ் பவன்வேறிலே யாளுற், பமமேதது விடலேதொரு படியாயுள பரனே, யிவனேகமு மெனவோர்பொழு திறவாரவர் பிறவார். 21

பரையாமதி யுடையாரநு பவமாய்நிகழ் வதுநா,
னுரையாடிய படியேயுள வொளியாய்நிகழ் சிவனுர்
வரையாவரு ளதனல்வரு மிதுமாதவ முதலா
நிரையாயிர வழியாலிது நிகழாதிது நிகழா. 22

திவகர னெழில்வேறே சிலவொளி திகழ்வாமோ
வவமுற விருள்போகா தவனெதிர் நிலையாமோ
சிவகிர கரனலே செறிபவ விருணேரா
வவனெளி தனின்மாறு னமரர்க ளறிவோமோ. 23

புரணநல் லறிவாகப் புகலுறு பரமீசன்
சரணினை தலுமாரா தனையுறு தலுமல்லான்
மரணம தறவேறேர் வழிசொல விலையாறு
லரணம துறநங்கட் கடையவு மவனன்றே. 24

ஆகமங்கள் பலவுமுறை யாடுகின்ற நிவனையது,
போக மொன்றி லறியுமறி வாகிநின்ற புனிதனிவ,
னேக னந்த வநுபவம தேயிவன்றன் வடிவுதனே,
யோக மொன்ற வருள்பவனுமோதுகின்றபரமசிவன்

நாலு மந்த வரியமரர் ஞால மொன்று நரர்
விவித, யோகி யிந்த முழுதுமத னூடெ மூந்த
சிறுஜிவஜீவ, தாஜெ ழிந்து சிறிதில்சிவ சாக ரந்த
னிகராரியை, யூந மொன்று மெஜீனமொழிவ
ரோர்வொ ழிந்த வுணர்விலிகள். 26

எறிக திர்க்குநிக ராகின் மின்மினியி றைக்கு
நேராரியு மெட்டிதா, னறுவி ரைக்கொளகில் சந்தொ
டொக்குமெனி னுனு மப்பரம ஞேடுநே. ரறிவி
னுக்கறிவி லாமை நேரகில நாய கற்கொருவர் நேரெ
னிற், செறிய வுற்றவறி யாமை யின்செயலி ருந்த
வாரெனது செப்புவேன். 27

ஓத லுற்றபர னுல ஊனத்துமுன தாவ தப்பரம
ஞென்றிஞ, லாத லுற்றிலன நாதி முற்றுமவ னுலெ
றிப்பதகி ரேகமா, வேத நத்தவர ஊனத்து மத்துவித
மாய்வி ழிப்பர் விவி தத்திலே, போத மற்றவர்வி
ழிப்பர் மற்றவர்கள் போத மற்றவர்கள் புல்லி
யோர். 28

இதுசகந் தானெனமு னிகழ்தலுண் டேவிவித
மெவர்களுங் காணு மறிவே, யதுபரந் தானெனமு
னநுபவந் தானடையி லதுபவந் நீரு மறிவா.

முதியசந் தோகவுப நிடதநின் றோதுபொருண்
முழுதுமிங் கிசன் மொழியா, லதிசயந் தானமா
ரனைவருங் கூடவழ குறவறைந் தேன ருளினால். 29

இன்னணி தாகவித யத்தை மீளும்வகை செய்து
சிந்தனையெ லாமறப், பண்ணி னலறிவி லாமை
யென்றுவரு பாவ கத்தையுமொ ழித்திடக், கண்ண
தாய்நிகழு மக்க ணன்றியெதிர் காலெ ணுதுபிற்
தென்னவே, நுண்ணி தானபொருள் சொல்லி
னனதுமெய் நோக்கி னலடைய வாக்கினன். 30

6. சாந்தோக்கிய உபநிஷத தாத்பரியம்
உரைக்கும் அத்தியாயம் முற்றிற்று.
ஆகச் செய்யுள் - 344.

---

*

## 7. முண்டகோபநிஷதார்த்தம் உரைக்கும் அத்தியாயம்.

---

நீண்டகேள் வியினுற் கல்வியா னெஞ்சா னிச்சயித் தறியவொண் ணுத. தூண்டிடா ஞானச் சுடர்தனைச் சொரூபா நந்தனைத் தரிசற வுளத்தே, நீண்டுகாண் பதுவே விச்சையென் றுரைப்ப தாகவே தொடங்கினன் மெய்போ. லீண்டுலோ கங்க ளிறக்கவுற் பவிக்க விமைப்பது விழிப்பதா மிறை யோன். 1

எப்பொருள் களுக்குந் தோற்றமு நிலையு மிறுதியு மிதன்கணே யாகி, யொப்பிட வொன்று மின்றியே யென்று முள்ளதா யுரையுணர் விறந்த, வப்பொரு ளொன்றே யறிந்தபோ தெல்லாப் பொருள் களு மறிந்ததா மந்த, மெய்ப்பொரு டானே யெப் பொருள் களுமாய் விளங்கலால் வேறிலா மையினுல் 2

இங்குநா மறிய வேண்டுவ திரண்டு விச்சையவ் விரண்டினு மொன்று. பங்கமா மபரை பரை யெனப் படுவ தொன்றதிற் பழமறை நாலு, மங்கமா றுண்மை யமையிதி காச மாதிக ளபரையா மற்ற, தெங்குமாய் நின்ற தொன்றையா தொன்று லெய்த லா மதுவிறை யருளால். 3

காணவோ ருருவு மின்றியே தனக்கோர் கண் செவி மூக்குவா யின்றிப், பாணிபா தங்க ளின்றி நுண்ணிய தாய்ப் பற்றிய பொருளெலாங் கடந்து, தானுவா யெல்லாந் தோற்றுதற் கிடமாந் தத்துவந் தன்னைத் தன்னாலே, யாணியா யறியு மறிவது விச்சை யாவது பிறிதெலா மவிச்சை. 4

நிலந்தியு மிழ்ந்துவி ழுந்தவ தெப்படி தேகத்தே.
மலந்தரு கேசவு ரோமம தெப்படி மண்ணிற்கே,
பலந்தரு மோடதி யெப்படி யப்படி யீசன்பா,
லலர்ந்தத டங்கவெ றுங்கனெ வொக்கும தாயுங்கால். 5

பன்னுத வத்திர னூற்றப ரத்திடை யேமுன்ன, மங்கமெ ழுந்ததி னின்றுபி ராணன்ம நங்கன்மன், தன்னிலு றும்பல லோகமும் வந்தது தாவில்லா. வின்னமு தென்றுணர் முத்தியும் வந்ததி தன் கண்ணே. 6

யாதுமு ணர்ந்தெவை யுஞ்செய வல்லவ னியாரி யாவன், போதம யந்தவ மாவுடை யன்னுள போலேயம், நாதிக ளங்கணி கழ்ந்தத டங்கவிங் காநாவா, மாதிவ ரும்பிர மங்கன வொக்கும தாயுங்கால். 7

அக்கர மாகி மெய்ம்மையா யுள்ள வப்பொரு ளறிந்தபோ தல்லா, லெக்கரு மங்க ளாலும்வீ டில்லை யாகமா திகளியற் றுங்காற், றுக்கர மாகி யநித்தமாய்ப் பேறுஞ் சுருக்கமா யிருக்கமற் றிவற் றைத். திக்கறி யாதே முயல்பவர் முத்தி செறிந் திடார் மரணமே செறிவார். 8

கருமதற் பரராய் நாங்களே யெல்லாங் கற்றவ ரென்றிருக் கின்ற, பெருமித முடையார் மூடரே

பிறவா நெறியையும் பெறுகிலார் பிறவிக், குருடர் கைப் பற்றிப் போகிய குருடர் குழியிலே கூடவீழ் வதுபோன், மருவிய வினையுந் தாங்களுங் கூட மாய்வதே யன்றிமற் றில்லை. 9

தொலையுநல் வினைப்பயன் றொலைந்த போதிலே,
தலையது கீழுற விழுகை தப்புமோ,
நிலையுறு முத்திநேர் படுத னெஞ்சிலே,
யலைவறு ஞானமுண் டாகி லல்லவோ. 10

சுருதியு மிருதியுஞ் சொன்ன வாறுநின்
றிருமையு மரித்தமென் றேதும் விட்டுநற்
குருவினை வழிபடிற் கோதி லாவவ
னருளிடு மழிவற நின்ற வப்பொருள். 11

எங்குநி றைந்தப ரத்தினி லோகமெ ழுந்தழி யும்படிதா, னங்கியெ ழும்பொறி போலுமு கம்புற மாயது மாயையெனுங், கங்குல்க டந்துயி ருக்குயி ராயொரு காலழி வற்றகமா, யங்கபி ராணன்ம னங்கள றுஞ்சிவ னுகிய வக்கரமே. 12

அங்கிதலை வாய்விவித மானமறை பாநு
திங்கள்விழி யெண்டிசைக ளுஞ்செவிகள் வாயு
தங்குமுயிர் தன்னிதய மேசகல முங்கா
லிங்கவனி சங்கரனி ருக்கும்வடி வீதால். 13

அர்க்கன்மதி யங்கிமழை யாதிமறை நாலு
மிக்கமிகு தியாகவிவி தங்களிய மாநர்
தக்கணைசு ராசுரர்ம னித்தர்பசு சாதி
யெக்கிருமி கீடமுமெ முஞ்சிவனி டத்தே. 14

மெய்ம்மைவிர தந்தவம்வி முப்பமுத லாகுஞ்
செம்மைதரு நல்வினைகள் செய்தநுப விக்கு
மிம்மைமறு மைப்பயனை யைத்துமிறை வன்பாற்
பொய்ம்மையற வேநிகழி னுங்கனவு போலாம். 15

வரக்கடவ தெப்பொருளு முன்புவரு மாபோ
லுரைத்தபர னேயடைய வாகியொளிர் கின்றூ
னரிக்குமுநி கட்குமர னுக்குமறி வீதே
யிருக்குமதி னையமொரு காலுமிதி லெய்தா. 16

மருவிவரு மாய விடயமய லாலிம் மநுடர்மா ணுநி யிடரரு, வெருவுபவ வேலை விவழுரமி யாத விமலசிவ ஞாந விழிபெரு, ரொருபிரம ஞாந மொழியவொரு காலிவ் வுததிகரை யேற வொணு மதோ, தெருள்செய்சிவ ஞாநம் வருவதிறை தாள்கள் செறியவரு சேவை வலியினுல். 17

அக்க ரந்தனை யிக்கு ரம்பையி லறியு மாகில விச்சையா, மிக்கி ரந்திந சிக்கு மீசனை யெய்த லாமமு தென்பதும், புக்கி ருந்தபி ராண னுமந மாவ தும்பர போதமே, மிக்கி ருந்தவு ளத்தி னோர்விர காலி துள்புக மேவுவார், 18

தாரம் விற்கனை தானி லக்குள தத்து வந்தவ ரூதவா, ருர்கு றித்தெய வல்ல ரப்பொரு ளிற்கு ளிப்பவ ரம்புபோற், பேறி லக்கெயும் வில்லி யப்படி பேசு நற்கணை யெங்கணுங், கூர்மு கத்ததி லக்கி லம்புகு ளிக்கை யையுறல் கூடுமோ. 19

அரணியோ டுத்த ராரணி யுயிரு மமலவோங் காரமு மாக்கிக், கரணிய தியாந மாமத நத்தாற்

காணுணு வொளியினைக் காண்பர். புரணநல் லொளியிற் பூதபௌ திகங்கள் பொருந்துயிர் புலன் கண்மற் றெல்லா, மரணுறக் கோவை யாகியே கிடக்கு மதனையே யறிகுவ னறிஞன். 20

பரம்பொரு ளினையே பாடுவான் வேறு பகருவா னலன்பரு கமிர்த, வரம்பது வாகு மண்ணின்மற் றிந்த மகிமையே யுள்ளதிப் பிரம, புரந்தனி லிதயா காசமே நிகழ்ந்தெப் பொருள்களு மறிந்தெலாம் வல்ல, வரன்றனை வெறுமா நந்தநல் வடிவா யறிந் தவர் மறுபிறப் பறுவார். 21

இதயமா மிந்த விமலகோ சத்தே யிரசமாய் விளங்குநற் பிரமந், துதயமே விடுமச் சோதியே யெல்லாச் சோதிக்குஞ் சோதியா வதுவு, மிதயமே நிகழு மிதனைமெய் கண்ட விடத்தின்மற் றிதயநோ யெல்லாஞ், சிதையுமை யுறவுந் தீருமெவ் வினையுஞ் செய்யினுஞ் செய்தில னுமால். 22

இலங்கிரவி யிந்துவன ருரகைமி னெல்லா
நலம்பெறவி ளங்குவது ஞானவொளி கொண்டே

பலம்படும னத்தையும்வி ளக்குபர போதந்
துலங்குவது தன்னுடைய சோதியத ஞலே. 23

ஒரொளிவி ளங்குகில தூதையுல வாத
சீரொளியில் வேறுசில தேவர்திகழ் வாரோ
பார்வெளியு மெப்பொருள்க ளுந்திசைகள் பத்தும்
பேரொளிபெ றத்திகழ்ப ரப்பிரம மேயாம். 24

இந்தவு டம்புறை சீவப ரங்களெ னப்படு மங்கமிரண், டந்தவி ரண்டிலு மொன்றுவி னைப்பய னங்குநு கர்ந்திடுமாங். தொந்தம றும்பர மொன்றுமு ளுதுசொ லப்படு பேத மில்வான், வந்தக டத்தில கப்படு பேதமெ னப்படு மாயையினுல். 25

தற்பர னுருவஞ் சித்தே தற்பர னிடையேயக்
கற்பித சீவன் ருனும தானக் காலந்தச் [மோ
சிற்பொரு ளொன்றே வேறெனின் மற்றது சித்தா
வற்பமும் வேரு காதுசித் தாகா ரத்தாலே, 26

பன்னுச டாகா ரப்புணர் வாலே பரசீவர்,
பிந்நரெ னிற்போ தத்தொரு பேதம் பிறவாதே,

மன்னுச டத்தே பேதம தத்தான் மாநத்தாற்.
சொன்னவ பேதப் பொருள்கலர் கண்ணிற்
றேன்றுதே. 27

மறையாலு மிருதிசொலும் வழியாலும் வருவதவி
ரிறையார்த மருளில்வரு வதுவேக மெனுமுணர்வு
பிறிவான தறுமுணர்வு பெறுமாகி லொருபொழுது
மிறவாத சிவமடையு மிடர்மோக மெவையுமிலன்

திதமாவி யுடலுறைய விறைமாயை செயலதுயர்
விதநாட வரியகடல் விழும்வேறு படவுணர
விதுநாளும் வருமிறைவ னுருவாகு மிலதெவையு
மதுநானெ னநுபவம தடைவோனெ ரலைவுமிலன்.

சின்மய மாகுந் தன்மகி மாவைத் திரவ றிந்தா
னியாதொரு போதத், தன்மய னுகுந் தன்னைய
கர்த்தா வாய்முழு துக்குந் தானிட மாகிப், பொன்
மய னுகும் பூரண னுவப் போதெதிர் காணும்
புண்ணிய கோடிப், பன்மையி னுலுந் தர்க்கொடு
மாநப் பார்வையி னுலும் பரனருளாலும். 30

பாவபுண் ணியங்க ளிரண்டையு முதறிப் பற்றுவீ டொன்ளுெடு மின்றி, யாவையுந் தானுய் வேறிலா தவனெப் பெய்துமற் றிப்பொரு ளறிந் தான், சீவனும் பரனுஞ் சிந்மய மாகு மாதலா லொப்பெனச் செப்பன், மேவியொன் ருகி விடுதலே யன்றி வேறுவே ருகுமோ வீடு. 31

உடம்புடன் புணர்ப்பார் சீவனுக் கிறையொ டொப்புள தென்னிலொப் பில்லே, கடந்திகழ் வானின் வாநம்வே ருகக் கருதியொப் புரைப்பரோ வொப்பா, யிடுந்திறங் கன்மத் தாலெனிற் கன்ம மிறக்குமே விச்சையா வென்னிற், றிடம்பட முன்பே யுள்ளதே ஞாநந் திகழ்த்துவ தில்லது செய்யா. 32

எப்படி யாலும் பண்டுமிப் போது மெப்பொழு துஞ்சிவ சீவர்க், கொப்புள தாகு முருவமொன் ருன வுண்மையால் வேறுரு தொன்றே, யப்படி யுள்ள சிவன்பிறர் போல வவிச்சையா னிகழுமவ் வவிச்சை, மெய்ப்பர விச்சை யானசித் தொன்ருய் விடுதலொப் படைதல்வே றன்றே. 33

சிவன் றன்னுரு வானசி வத்தைத் தெளியிற் றான், மேவும் பலதொழி றன்னிடை யாலே விளை யாடும், யாவுந் தன்னுரு வாகிநி கழ்ந்தா லிவன் முத்த, னுவன் பண்டவ னுகா மையின்முத் தனு மாகான். 34

வேதம் பகர்வழி யேவந் தவர்கட மெய்க்குள்ளே
யோதும் பரவொளி யேகண் டுணருவ ரொன்றுமப்
போதந் தனையடை வாரங் கொருகதி போய்மீளா
ரேதுந் திகழ்தரு வானெங் கொழிவுசெய் தேகுந்தான்

வாக்கினு லுரைக்கு மாறிலாப் பொருளை மற்றுள புலன்களொன் றுலே. நோக்குமா றென் னுங் கருமமொன் றுலு நுவல்தவத் தாலுநண் ணுதே, தாக்கிலா வந்தக் கரணம துடையார் தத்துவ ஞாநநல் விழியாற், போக்கிலா தெங்கு மாகிய பொருளைப் புரையறக் காண்பரெப் பொழுதும். 36

அருளினைத் திருமே னியிற்றரித் தருளு மகிலநா யகனையெப் பொழுதந், தெருளுறத் தியாநம் பண்ணுமே காந்த சித்தராற் றெளிவுறும் பொரு

ளிப், பொருளித னிடத்தே யைவகைப் பட்ட பொருள்களும் பொருளினுட் பத்தா, லொருவரு மறியா ரரியதென் றிகழா தொருப்பட வேண்டுமீ தொன்றும். 37

எத்தைப் பெறமுயல் கின்று ரதுபெறு கின்று ராதலி லெப்போது, நித்தத் துவமெனு மொன்றைப் பெறநினை கின்று னருளினி னேர்பாடா, மத்தத் துவமுநி தன்னைப் பொருளத னுலுந் தனதுட லாற் கூடப், பத்திப் படுமா னுலர்ச் சனைநனி பண்ணப் படுவது பவவீடாம். 38

எண்ணிலாக் கல்வி யாலு மிலங்கிய கேள்வி யாலுந், திண்ணிதா மதியி னுலுந் தெளியவா ராது தீர, நண்ணிய ஞாநி தானே நயந்தருள் செய்யின் ஞாநக், கண்ணினுற் காண லாகுங் கரத்திலா மலகம் போல. 39

அயர்ச்சிமிக் கிருப்பா னுலு மரும்பிணி யாள னுலு, முயற்சியிற் றமோகு ணத்தான் மூடிடப் பட்டா னுலுஞ், செயப்படா துண்மை ஞாநஞ்

தெள்ளுமா மதியாற் கால, வயத்தினுற் சத்து வத்தின் வலியினு லன்றி வாரா. 40

இப்பரம் பரனைச் சேர்ந்தா ரேகமாம் பொருள தாகித், தப்பறு ஞான மெய்திச் சாந்தராய்த் தாப மாறி, யெப்படி யாலு மெல்லாப் பொருள்களு மெய்தி யிங்கே, யப்பொரு டமக்குள் ளாக வவை தனக் குள்ளு மாவர். 41

அந்தமா மறையா னுடிய பொருளை யழகுற வறுதியிட் டல்லற், பந்தமா மயற்பற் றறுத்தமா தவரிப் பரமயோ கத்திலே யெல்லாம், வந்துமாய் விடமா யனைத்தினும் பரமாய் மதிக்கொணு மாயையி னுடைய, வந்தகா லத்தே யந்தமற் றிந்த வமிர்தினு லரியவீ டடைவர். 42

வீடிலா வினைகள் கலைகண்மூ வைந்தாம் விடய விந் தியவநி பதிக, ணுடுசே தனனுஞ் சிவன்மற் றனைத்து நாதனு ராலய நண்ணிப், பாடுபே ருருவ மொன்றுமற் றந்தப் பரமனே யாய்விடும் பார்மே லோடுமா றெல்லா முததிபுக் கொன்று யுருவுபே ரெ ாழியுமா போல. 43

மிக்க நற்பிரம ஞான முற்றபொழு தேவெ றும்பிரம மாய்மநத், துக்க மற்றிடுவர் தொல்லை வல்வினை துவக்கு மாறுமிலர் துஞ்சிடார், பொக்க மற்றொருவ னிச்ச கத்திலநு போக மாயறியு மாயின்மே, லக்கு லத்தினிலொ ருத்த ரப்பிரம வித்த ராவதில ராணையே. 44

சோக மோகபட லத்தி னைக்கடிதொ ழிப்ப தாகிவெறு முண்மையா, யேக போககுக ரூப மெய்ப்பொருளெ றிப்ப தாகியுள சோபநந், தாக மோடும்வகை யிங்கொர் நாவிலிது சொல்ல லுற்றிது தொல்லையே, பாக மாகியவி ரோத மானபரி சுத்த நெஞ்சிடைப ரிப்பதே. 45

அச்சமா கியவெம் பிறவியை வேரோ டறுப்பதா யறிவதற் கரிதாய், மெய்ச்சொரூ பாநந் தன்றிரு மேனி விளக்குவ தாய்மிகுத் துள்ள, விச்சையின் றன்மை விண்ணவர்க் கெல்லாம் விளங்கவே விளம்பினன் மெய்போ, லிச்சக மெல்லாம் படைத்துமெய் யன்ப ரிதயபங் கயத்தில்வீற் றிருப்பான். 46

7-முண்டகோபநிஷத தாத்பரியம் உரைக்கும் அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் - 390.

# 8-வது கைவல்லிய உபநிஷதார்த்தம் உரைக்கும் அத்தியாயம்.

---

நவிவேத நாலு முகமாக மேவி நவிநால யத்தி லுறைவா, னநுபோக மாக வருளால ரீந்த வவரேப ரத்தை யறிவார், தனிமேவு வார்கள் பெறுஞாந மாகு மிதுசாத நங்க ளுடைய, முநிமேவு வான தெனுமாறு வேத மொழியோது மாறு மொழிவான். 1

ஈசனென் றியம்பு மொன்றை யிப்பிறப் பறுப் பார் தம்மான், மாசற வறிய வேண்டும் வருந்தியு மறிந்து நன்ருய்ப், பாசமா னதுகெ டுத்துப் பரப்பிர மத்தை நல்குந். தேசுடை யிந்த விச்சை தீர்வறத் துறந்தோர் செய்வார். 2

முத்தியின் விருப்பத் தாலு முதலவ னற்பா தத்திற், பத்தியி னுலு மற்றப் பரனேயே பாவிக் கின்ற, சித்தமாந் தியாநத் தாலு நிரந்தர யோகத் தாலுஞ், சித்தியா மிதுசித் திக்கும் வினையினுற் சித்தி யாதால். 3

திரமாம ருத்தத்தி னுண்மைந்த ராலுந் தீராத வற்றின்றி யாகத்தி னலே, புரமான வேதாந்த மாவாக்கி யத்தா லுற்பந்ந மாம்விச்சை யாநிச்ச யத்தாற், பரமான வஞ்ஞாந வந்தத்தி லேயப் படி ஞாந வுபதேச மொன்ருலு மேயிப், புரமாமு டம்புக்கு ளேயந்த முத்திப் பொருள்கண்டு வீடெய்து வாரிப்பு விக்கே. 4

தக்கஞா நத்தைத் தான்பெறற் பொருட்டுத் தனியிடந் தனையடைந் திதய, துக்கமே வாமற் சுகாசநத் திருந்து தோடலை கழுத்துடம் பிவைநே, ரொக்குமா றிருத்திப் பூதிகொண் டிந்த வுடம்பை யுத் தூளநம் பண்ணி, மிக்கவாய் வருமிந் தியங்களை யெல்லாம் விடயமே லெழாவகை விலக்கி. 5

பத்தியாற் குரவன் பதம்பணிந் திதய பங்கயந் தனைநினைந் ததிலே, நித்தமா யொருவ ராளினைப் பரிதாய் நிமலமா யெங்கணு நிறைந்து, சுத்தமாய்ச் சாந்த மாயனைத் துலகுந் தோற்றுதற் கியோநியாய்ச் சுபாவ, சித்தமா யமுதா யருவமா யொன்ருய்ச் சிற்சதா நந்தமாய்ச் சிவமாய். 6

உரியநால் வேதத் தோமெனும் பொருளா யுள்ளதா யுள்ளவெப் பொருட்குங், கரியதாய் நின்ற வொன்றினைக் காள கண்டமுங் கண்ணொரு மூன்றும் பிரிவிலா மங்கை பாகமு மாகப் பேணுநற் பாவனை பெறுவா, னரியதா யருளி னல்வரும் விச்சை யத னினு லதனையே யடையும். 7

தெரிவரிய சிற்கநமாய்த் திகழ்சிவனே திசை முகனு, மரியுடனவ் வரனுமவ னவனமரர்க் கதிபதியுந், துரிசறவே யக்கரமாய்ப் பரமாகுஞ் சுராட்டுமவ, னெரியுமழல் காலனவ னிந்துவொடு பிராணனவன். 8

ஒழிந்ததொரு பொருளில்லை யுள்ளதெலா மவனேமுன், கழிந்தபொருண் மேலும்வரக் கடவ பொருடானுமவன், மொழிந்ததனி பலவிச்சை யவிச்சையெனு முற்றுமவ, னிழிந்தபிறப் பறவே றோர் வழியில்லை யிவனொழிய. 9

இன்னதெனுமற் றன்னிடை காணத் தன்னை யெப் பொருளினுங் காணு, மந்நிலை யடைந்தா

லவன்பிர மத்தை யடையும்வே ரென்றிறு லடை யான், றன்னையு மோங்கா ரத்தையு மரணி யாக் கியத் தத்துவ ஞாந, வங்கியைத் தியாந மதநம்விட் டெழுப்பு மதியினர்-வன்பவஞ் சேரார். 10

தாக்கரும் பரமன் றன்சுதந் தரத்தாற் றன்னுடை மாயைதன் னாலே, யாக்கின னிந்த வுடம்படைந் தறியான் போலவின் றனைத்தையு மதிலே, சாக்கிரத் தென்னு மிடம்வகுத் தந்ந பாநமுந் தையலார் முதலாம், போக்கியங் களையும் புசித்திடுங் கனவும் புண்ணியத் தன்மையே புசிக்கும்.

உறங்குமவ் வியத்த மங்கிய தமத்தி னுட்புகுந் தொன்றெழி யாம, விறந்தவவ் விடத்தே தன்னுரு வான வின்பமே புசிக்குமீண் டெழுந்து, கறங்குபோ னனவை யடையினு மடை யுங் கனவைவந் தடை யினு மடையுஞ், சிறந்தமுப் புரமு மிவன்விளை யாடித் திரிதரச் செய்ததே திகழ்த்தில். 12

சொல்லிடும் பொருள்க ளியாவையுங் கடந்து சுதந்தர னுய்த்துவக் கின்றி, யெல்லைதீ ரின்ப மேவடி

வாகி யிருந்துள விறைவனுக் கென்று, மல்லலுண் டாகா திவையநு பவிக்க வந்நிய மாகவோர் சீவ, னில்லையே பேத மின்மையாற் சடந்தா னெங்ஙனே புசிக்குமா றியம்பிர். 13

ஆதலா லறிவா நந்தமா யுள்ள வமலனே யவை புசிக் கின்று, னீதெலாம் விளையாட் டேவிளை யாடு மிடங்களே யிப்புர மூன்று, மாதலா காமை சொல்ல வும் படுமோ வதிசுதந் தரனையந் நியமா.! யோதலா மோவிப் புரங்களு மவன்ற னுருவமே யொழிவிலா மையினுல். 14

மாலுரு நனவு கனவுறக் கங்கள் வடிவமா நிகழ்ந்துள விறைக்கு, ஞாலமே விசுவன் றைசதன் பிராஞ்ஞ னுமமா நவிலுவ ரடைவே, தூலமே விசுவ னுண்பன சுருக்கந் தைசதன் றுய்ப்பன சுகந்தன். பாலதா தலினுற் றன்னுடை யின்பம் பருகிடா நிற் குமே பிராஞ்ஞன். 15

புறங்கண் மூன்றிலும் போக்கிய மியாவையங்
கிருந்து துய்ப்பவ னியாவன்மற் றியாவையும்

பரம்பி ரமமெ னும்படி பார்ப்பவ
னரந்தை யெய்திடா னுயிரஞ் செய்யினும். 16

விழுமி தாமய மேதங்கள் செய்யினும்
பழமி கும்பஞ்ச பாதகம் பண்ணினு
மொழிவு றுமலொன் றேயென் றுணருவா
னழுவி னனந்த நன்மையுந் தின்மையும், 17

சீவ னன்று புரமூன்றிற் சித்தா மவனே விளை
யாடு, மேவு மெல்லா மெய்போல வவனல் விளைத
லான்மெய்யத், தேவ னேசான் ருதலினுற் சித்து
மவனே யத்துவிதன், யாவுந் தானு தலிலெதினுந்
தனையே விரும்ப லாலின்பன். 18

இந்தப் புறங்க ளொருமூன்று மிவன்ற னிடை
யே யிறப்பதுமிர்த், தொந்தப் புருட னெருகாலு
நசியா னதலாற்சொல்லு, மந்தப் பிரம மேயவன்று
னறியா மையினு லப்பரனைப், பந்தப் படுமோர்
சீவனெனப் பார்ப்பார் பவத்தே பதைக்கின்றூர். 19

ஈந மாகிவி டும்பி ராணன்ம நங்க ளிந்திய மியா
வையும், வாந மூதைநெ ருப்பு நீர்புவி மற்று மந்தம
கத்திலே, யான தாகிலு நுண்மை யாமதி னுண்மை
யாமது வாகுமெய்ஞ், ஞாந நாடிய தத்து வங்களை
னும்ப தங்கண வின்றதே. 20

நீயெ னும்பொரு ளேய தென்றுநி கழ்த்தி டும்
பொரு ளாவதுந், தூய சிற்பர மேப தங்களி ரண்டி
னுந்துணி வாதலான், மாயை யென்றும வித்தை
யென்றுமு பாதி பேதவ முக்கினு, லாய கற்பித பேத
மல்லத பேத மேபொரு ளாவதே. 21

ஆத ரத்தொட விச்சை நாமம றுத்த நல்லதி
காரியைப். போத முற்றுமெ னப்பு கன்றது பொய்
யி லாமறை யையமன். றேத மற்றது நானெ னுந்
திட னுவ னேயஃ தெய்தினு. ஞேது முத்திய வன்ற
னுள்னறு போக மிங்ஙனு திப்பதாம். 22

புகலுமுப் பதத்திற் போகம் போக்கியம் புசிப்
பா னேநா, னிகழுமித் தனைக்குஞ் சான்ருய் நின்றதற்

சொருப னேநா,னிகழுவ தென்பா லென்பா னிற்பது மிறப்ப தென்பாற்,சகலமு மாத லாலே தற்பரம் பொருளா கின்றேன். 23

அணுவினுக் கணுவு நானே யப்படி மகத்து நானே, தனியிலெப் பொருளு நானே சோதியுட் சோதி நானே, பணிவுறத் தகுவே னுனே பழைய னும் புருட னுனே, யிணைதனக் கில்லா வீச னுகிய வின்ப நானே, 24

கண்ணுஞ் செவியு மின்றியுமே காணக் கேட் கக் கடவேனுன், பண்ணுந் தொழிலெல் லாம்வல் லேன் பாணி பாத மில்லெனினு, மெண்ணுங் கடந்த விடமிங்கே யிருந்துஞ் செல்வ னுனெருவர்க், கொண்ணும் படியன் றெனையுணர வெல்லா முணரு கின்றேனுன்: 25

ஓது வேதம் பலவாலு மோதி யுணரப் படு வேனுன், வேத வேதாந்தப் பொருள்க ளெல்லாம் விளங்க வறிவேனுன், நீது நன்றும் வினைமரணஞ் செநாந் தேகேந் தியம்புத்தி, பூத மைந்து மின்றியக மிதமாய் நானே புசிக்கின்றேன். 26

சிறப்புடைய தேசுவடி விற்றிகழ்த லானு
னெறித்தவடி வாலுமெறி யாவடிவினுலு,
நிறத்தசுட ரானவடி வாகநிகழ் கின்றே,
னிறத்தலிலனு னபர மீசனவ னியானே. 27

எனேயொழி யழவொன்று மிலேயெலா மெனதுரு
வென்று நிகழ்வதோ, ரநுபவம் வந்து விளேயுமே
லறிவுள தன்றி யமலமா, யினிதுற நெஞ்சி லுறை
வதா யிலதுள தன்றி யெதுவுமா, யங்யமி றந்த பிர
மமா யறிவுரு வொன்றை யடையுமே. 28

கைவல் லியவுப நிடதங் கருணையினுலே யெது
கரு திக்கூறிற், றுய்வில் லேயநிய மொன்று லெனவரி
பிரமா திகளுக வாநின்று, ரெவ்வல் லியிலுள வதிகா
ரிகளும தறியும் படியினி திற்சொன்னே, னவ்வெல்
லேயில்பொரு ளதிபத் தியொடறி வுறுவீ ரமரர்க
ளனேவீரும். 29

பண்டைநான் மறைகள் சொல்லிய பரிசே பர
குரு வாயிருந் தள்ள, வண்டர்நா யகனே யாதளித்
தவன் ற னருளினு லநுபவ மாகக், கண்டுளோ ரிருக்

குந் தன்மையை யெல்லாங் காதலால் வானவர்க் குரைத்தான், புண்டரீ கத்தே யிருந்துதான் சகல பூதமும் படை த்திடும் புநிதன். 30

8 - கைவல்லிய உபநிஷதார்த்தம் உரைக்கும் அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் – 420.

---

## 9 – பிரகதாரணிய உபநிஷதத்தில் மைத்திரேயப் பிராமணார்த்தம் உரைக்கும் அத்தியாயம்.

—:—

துன்பமா முடம்பி னின்றுமங் கதனைற் றுவக் குரு வகைநின்ற சிவனுக், கின்பமே வடிவ மாதலாற் சொரூபா நந்தனென் றெழின்மறை யெல்லா, முன் புகூ றிற்றவ் வின்பமாம் பரிசை மொழிந்திடக் கேண்மினென் றழகா, யன்பிரு லலரோ னமரரியா வர்களு மறியவ ாதரத்தொடு முரைப்பான். 1

ஈசனுக் குருவா நந்தமே யாகு மேதெனி லியா
தினுந் தன்மே, லாசைவைத் திடலா வாசைவைத்
திடுமா நந்தமே மிகவுமா நந்தம், பாசம்வைத் திடுத
றன்பொருட் டன்றிப் பதிபொருட் டல்லவே மனைவி,
நேசமெப் படியுந் தன்னுடோ தலிற்று னிரதிச
யாநந்த நேரே- 2

வேதிய ராசர் விண்ணவர் மிகவும் விரும்பிய
வுலகுகள் சகல, பூதமும் போக போக்கிய மாகும்
பொருள்களும் பொருள்களின் பொருட்டுக், காதல்
செய் கின்று னல்லனெப் படியுங் காதல்செய் வது
தனைக் காமித், தாதலால் விருப்பந் தன்னுடோ
தலிற்று னிரதிச யாந்த மாகும்- 3

யார்க்குமின் பம்போல் விரும்பிடப் படலா
லின்பமே யிறைவடி வின்பந், தூக்கியே யின்பம்
பெறநினைப் பவராற் றுயர்மிகுந் தொழிலெலாம்
விட்டுப், பார்க்கவுங் கேட்க நினைக்கவுந் தியாநம்
பண்ணவும் படுவனிப் பரம, னூக்கியங்
கவனை யறியவே யெல்லா மறிந்ததா மொழியவின்
மையினுல். 4

மத்தமு றும்பிற விப்பகை மாளு
முத்தியு முன்னிலை யாமுடி வில்லா
வெத்துய ருங்கெடு மின்பமதாகு
மத்துவி தத்தைய றிந்தவ ருக்கே- 5

பிந்நமு றப்பிர மத்தைய றிந்தான்
றன்னையம் மெய்ப்பொரு டள்ளும தன்றி
மன்னுமு டம்புவ சத்தொரு வாதிங்
கின்னவு லோகமெ ளுமலி ழிக்கும். 6

அல்லா தில்லாப் பரந்தன்னி லயலா வறியும் படியயர்ந்து, பொல்லா தாகத் தறிவுபெறும் பசுவா னவனைப் புத்தேளி; ரெல்லா மெல்லா வேதமும்பூ தங்க ளியாவு மிறத்தள்ளி; நில்லா நிற்கும் பேதத்தே நிற்பா னசிக்கை தப்பாதே. 7

மறையோ ரரசர் முதலான வன்னுச் சிரம மற்றுள்ள, பிறிவாய் நிகழு கின்றவெல்லாம் பிரம மொன்று மேபிறிதா, லறியா நிற்கு மறிவென்று மல்லர் பிறப்பை யடைவிக்கு, மிறைதா னுன நிலை யய்து மிரண்டு காணு திருந்தக்கால். 8

அத்துவி தந்தா ருமை விகற்பத்தை யடைந்த போதே, புத்தியி லிளைப்பும் போகும் போகுமிப் பிறப்பு நேரா, வெத்திகழ் வாலும் பேத மின்மையா லிறையே யெண்ணுங், தத்துவ வித்தே யென்றன் றலையினால் வணங்கத் தக்கான். 9

வேதமா கமபு ராண மிருதிகள் வேரு மார்க்க, ரோ தா ம கமங்க டர்க்க மொன்றோடொன் றுவ்வா தாகு, மீதெலா மொக்கப் பண்ண லாவதன் றிதய துக்க, மாதலா லனைத்தும் விட்டிங் கனைத் துமாஞ் சிவத்தைப் பார்ப்பான். 10

இருமிகி டங்கண் மதியுடைத் ததனிற் கிளாங் திடும் பசுமதி யவற்றி, னரர்மதி யுடைய ரவரினுஞ் சிலவர் ஞாநமிக் கிருப்பரன் னவரி, லரியகந் தருவர் மதியினு லவரிற் பெரியரே பிதிர்க்கள்வெவ் வேறு, மொருவருக் கொருவர் தாரதம் மியத்தா னுணர் வினு லுயர்ந்தவ ருளராம். 11

உள்ளபே ரெல்லா ரினுமுணர் வுடையீ ரும்பர்கா ணிங்களுங் களினுன், றெள்ளியே னுவேன்

மதியினு லென்னிற் சொனார்த்தநன் சேதந ஞகும்,
வெள்ளமே துயிலு மாலினு மரன்ருன் மேதையாம்
விளம்பிய வெவர்க்கு, முள்ளமே மருவி யுணர்வளிக்
கின்ற சிவன்யா ரினுமுணர் வுடையான். 12

ஆதலா லறியு மறிவெலாங் கைவிட் டறிவினுக்
கறிவதாய் நின்ற, பேதமில் பிரம மொன்றுமே
யறிவான் பேறுபே ரின்பமாம் பிறத்தல், சாதலற்
றிருக்கு மதனையோர் வருத்த மின்றியே சாரலா
யிருக்க, வாதரித் தறியா ரற்பமே விரும்பி யநந்தது
கத்திலே யமைவார். 13

வேதநூன் மிருதி புராணமத் துவித மெய்
மையே விளம்பமெய்த் தர்க்கஞ், சாதியா நிற்கத்
தத்துவ ஞானத் தவருமிப் பொருளையே சார. வாதி
யாஞ் சிவனு ராயண ஞனிங் கறைந்தது மபேதமா
யிருக்க, வாதியா மொருவர்க் கிதையநா தரித்தன்
மாயையி னுடை யவல் லபமே. 14

கநகமத பேதம் வேறு கடகமகு டாதி போல
வநியவடி வால நேக மறிவுநிலை யால பேத

மெனவுமுரை யாடு வாரு மிதயமிலர் ஞான கீந
ரெனையநிகழ் வாலு மீச னெனநினைகு
வானவ் வீசன் 15

பலவடிவும் வேறு பாடு பகரும்வெறு மூட ரான
புலையரொடு கீட மோடு புழுவினொடு வாசி யேது, சொலவிலுல காகும் வேறு துணிவிலுணர் வேயெ
லாமெ, னிலகுமதி பேற தாகு மிறைவனடி பேண
வாலே. 16

தேசிக னளித்த வழியினு லையந் தீர்ந்துசிற் சடத்திகழ் வெல்லா. மீசனுப் பார்ப்பா னிப்படிப் பார்க்கு மிதனையு மிறையெனப் பார்ப்பா, னேசமோ டிங்ஙன் பார்ப்பவன் பார்வை தன்னையு நிகழ்த்திடா துள்ள, தேசிகந் திகழுஞ் சிந்மய மாகிச் சிந்மய மென்கையுஞ்சிறிதே. 17

ஒழிவிலாப் பரம யோகிய ரநுபவ முள்ளவா றுரைத்திட வெனக்கோர், வழிபெறே னெடுமான் மகேசன்மா முநிவர் வானவ ருரைத்திட மாட்டார்,

விழிமிகுஞ் சிவனால் வீஞ்சையாஞ் சிவையால் வீளம்
பீவும் படாதது விளம்பு, மொழியெலாம் வந்து
மோநபா வத்தே முடியுமங் நிலமதே முடிவு. 18

இப்படிக் கருணையா லியம்பி னேனெலா
மப்பழ மறையெலா மறிய வோதுவ
தொப்பற நானுமக் குரைத்த வீதெலாஞ்
செப்பரு மறையதின் சேட மாகுமே. 19

உரையா டுவதித் தனைமைத் தெனவோர் குறி
யுண்டாம், பொருள்பா லன்றே பூரண மாயோர்
வேறில்லாச், சொரூபா நந்தன் றிருமே னியெனச்
சொலவன்றே. விரையார் கமலத் தவன்மெய் பாரா
வியவுற்றான். 20

9-பிரகதாரணிய உபநிஷதத்தில்
மைத்திரேயப் பிராமணார்த்தம்
உரைக்கும் அத்தியாயம் முற்றிற்று.
ஆகச் செய்யுள் 440

———

## 10-பிரகதாரணிய உபநிஷதத்தின் உஷத்தங் கார்க்கி அந்தர்யாமிப் பிராமணங்களின் அர்த்தம் உரைக்கும் அத்தியாயம்.

—:—

நாத னூர்சொரூ பானந்த னுண்மலர்ப் பாதம்
போத மேயெனும் பரிசுபுத் தேளவர்க் கெல்லா
நேதி நேதிசெய் திப்பரி செனநிகழ்த் திடுவான்
வேத நாலுநான் முகத்தினுல் விளக்கிய விதாதா 1

எப்பொருள் களுக்குஞ் சான்று யார்க்குமுள் ளாகி யென்று, மெய்ப்படுந் தன்றே சாலே விமல மாய் விளங்கா நின்ற. தெப்பொரு ளெல்லா மாகி யெங்கணு நிறைந்து நின்ற, வப்பரம் பிரம நேரே யழகுற வறிய லாகும்- 2

இந்தப் பிராணு பானாதி யாரா லுண்டா யியங் குவதிங், கெந்தப் புருடன் முன்பாக வெல்லா மியங்க வற்ருகுந், தொந்தப் படவெத் தொழிலுஞ்செய்

தேவன் றெழிலற் றிருக்கின்று, னந்தப் பரனெ யாவர்க்கு முள்ளா மாந்மா வாகின்றுன்- 3

உடம்போ தானன் றுடம்பீதென் றுணரப் படுத லாலுடம்பிற். றிடஞ்சேர் பிராண தியுமன் று செடமாய்க் காணுஞ் செய்தியிஞற், கடம்போ லியாவ னிவையனைத்துங் காண்பா னவனே கர்த் தாவாய். நடஞ்சே ருடம்பி னுண்ணின்று நடத்து கின்ற நானுவான். 4

வினவுற்ற கேள்விக்குக் கேட்பா ஞகி மேவிய காட் சியில்விழித்துக் காண்பா ஞகி, மநநத்தின் மந்தாவாய் ஞாநந் தன்னின் மதித்திடுஞா தாவாகி மன்னுகின்றுன், சொனவத்தற் பரனுகு மவனில் வேறுந் தோற்றமெலா மெய்யாகுந் தோற்ற மன்று, நினையிற்றற் பரனேயிங் கெல்லா மென்று நினைவ துவே நினைவான நினைவு நேரே. 5

பாரிலே யெல்லாப் பொருள்களுங் கோவைப் பட்டதெப் படியிலப் படியே, நீரிலே பாரு நெருப் பிலே நீரு நிலவுகா லதனிலே நெருப்பு, மூருகா லந்த

ரிக்கலோ கத்து முண்டையும் பாவுமே போலச்
சாருமா மொன்ற்றே டொன்றுவே றறவே தன்னிலே
பின்னியிச் சகத்தில். 6

அந்தரிக் கங்கள் கந்தரு வத்தே யாதித்த
வுலகங்க ளிடையே, கந்தரு வங்கள் சந்திர வுலகிற்
கதிரவ னுலகுக ளெல்லாஞ், சந்திர வுலகுந் தாரகை
யுலகிற் றுரகை வாநவ ருலகி, லிந்திர வுலகில் வாநவ
ருலக மியாவையுங் கோவையா யிருக்கும். 7

அரசா கியவம ராதிப னுலகா னவையடையப்
பிரசா பதியுல கங்களி னிடையே பிரமனதா
முரைசா ருலகம தானவை யுயர்மா லவனுலகிற்
றிருமா லுலகஞ் சேர்வுறு மிடமுஞ் செப்புதுமே. 8

உருத்திர வுலகின்மா லுலகு ருத்திர
னிருக்குமவ் வுலகெலா மீச லோகமே
திருத்தகு மீசலோ கங்க டிண்ணமாய்க்
கருத்தருஞ் சதாசிவ வுலகின் கண்ணதே. 9

தற்பரந் தன்னிலே சதாசி வன்றன
துற்பவ வுலகெலா முறுதி யாமதிற்
கற்பித மாய்நிகழ்ந் திடுமெய் காணுறி
லற்புத மாம்பர னல்ல தில்லையே. 10

உடைய தொன்றுடை யானெனும் வேறவை யின்றிலோகத், திடையி ருந்துமி ருந்தில னுயெவை யும்முடம்பாய்த்; திடமி தென்றறி யாவகை நின் றுருசெய்கையின்றி, யடைய வுஞ்செயு மாரவ னந்தரி யாமியாவன்- 11

காண்டல் கேட்டல் கருதல்செ யப்படு வாலன் றுன், காண்டல் கேட்டல் கருதல்செ யப்படு வாறெருத்தன், றாண்டு சோதியி னுலகல் சோமன ருக்கனெல்லா, மாண்ட போதும்வி ளங்கும நக்கரி யாகிநின்று. 12

சித்தமத்த மித்திடத்த பாவமுந்தெ ரிந்திடுஞ்
சுத்தநற்சு முத்தியிற் றுய்க்குமாயை கண்டிடு
மத்தமித்த லும்பிறத்த லும்மிலான பாவபா
வத்தைவிட்ட கண்டமாய றிந்தபோத டங்கவாம் 13

பிங்கமான தன்றியேபி ரமமாய றிந்தவன்
றுன்னுபேத மேவினுஞ்சொ ரூபமேநி கழ்ந்ததா
ஞன்னின்ஞாந நாசமில்லை ஞேயநாச மாகுநன்
றன்னின்ஞாந ஞேயமாக வேருருத தன்மையால். 14

இதுபரம மானகதி யிதுபரம மாமுலகு
மதிசுகமு மாவதிது வழிவிறந மாவதிது
வுதறுதன தோலுரக முடலெனவு ளதுபர
மதனையறி வானதிக னகமதிவை யானுடலில். 15

தற்பரம மாகியுள தத்துவ மதேயொழிய
வற்பமயல் காணுமவ ரத்துருவ மேயடைவர்
கற்பிதவஞ் ஞாநமதி லுற்பவம தாமுலக
நற்பிரம மாயறிவர் நற்சிவம தாநயநர். 16

நிலையினிலை யாகி யளவிடவொ ணாத நிமலனுரு நாளு நினைகுவான், சலநமும நாவு மலைவலைய ருத சமயகலை யோத றவிருவா, னுலகிலுதி யாது வுயர்வுகுறை வானதொருவினையி னைலு மருவுறு, தலகிலுல கேவல் செயவுரிய ணை வதிபதியு மாகு மமலனே. 17

பூதபதி பூத பாலனுல கூடு போகமுடி யாத தானதோர், சேதுவெனு மீச னுனவனை மேவ றேடி வழி பாடு மேவியே,வேதமொழி யாலும் வேள்விபல வாலு மேவுதவ தான பூசையே, யாதிவழி யாலு மாதரவி னுலு மாயுமுநி ஞாநி யாகுவான். 18

குறியது வாதலால் குறிக்க வும்படா
னிறுவது மிலனுடம் பென்று மின்மையாற்
செறிவது பற்றிலன் றீண்ட லின்மையா
லறியிலிவ் வறிஞனென் றேடு மார்ப்புறுன் 19

சத்தியத் தான்மிகுஞ் சாந்தி தாந்தியா
லெத்தொழி லும்மிசை வற்றி ருத்தலாற்
பத்தியா லிறைவனைப் பண்ணும் பூசையாற்
சுத்தவே தாந்தமெய்த் துணிவு தோன்றுமால். 20

வேளுடல் பொடிபட விழித்த விண்ணவற்
காளெனு மன்பினு லணியு நீற்றையுத்
தூளனம் பண்ணலாற் றெழுது போற்றலான்
மாளுதல் பிறத்தலாம் வழியை மாற்றலாம். 21

மெய்யுறு மன்பினுன் மேவு சாதந
மையமின் ஞாநமுண் டாக்கு மாக்கினல்
வையக மியாவையு மன்னு போதமாக்
கையுறு கூவிளங் கனியிற் காணலாம். 22

மேவு பாவம்வெல் லாது மெய்ஞ் ஞாநியை வென்றிடு மிவனெல்லாப், பாவ மானது மாதலால் வேதநம் பண்ணவல் லவனுன; தேவ தேவனுந் தேசிகன் றனக்குமுன் செய்பொரு ளுடலாவி, யிவ தேகடனிறைவவெம் பிரானென வேத்திமெய் யிதயத்தால்.

மாய வன்புலத் தெழாவகை தீர்ந்ததன் வாய்மையான் மயிர்க்காலாற், பாய வின்னமு திருசெவித் துளைவழி பாய்ச்சினுன் பதுமத்தா, டாயுந் தந்தையுஞ் சுற்றமு மற்றுநற் றநமுமென் றடைவான்றன் காய முள்ளள வும்புகழ்ந் தேத்துவான் கற்றதோர் கலையாலே. 24

தேசிகன்றன் றிருமேனி சிந்தை செய்யச் சிவனைச் சிந் தித்தானுஞ் செம்பொற் ருளிற் பூசனைசெய் திடவெங்கு மாகி நின்ற பூரணனை யினிதாகப் பூசித்

தானு, நாசமிலாச் சிவநாம நவின்று ளுண்ட நாயகன் றன் றிருநாம நவின்று ளுகி, லீசனையே யிகழ்ந் தானுங் கண்ணிற் காண வெழுந்தருளுந் திருக்கோல மிகழ்ந்தா ளுகில். 25

ஆதலினுல் வேதவே தாந்தத் துண்மை யறிவா ளுய் முழுதுமறிந் தடங்கி ளுன்றன், பாதமடை வான்முத்தி வேண்டி னல்லற் பரப்பையெலாங் கைவிடுவான் பரிவோ டுங்கட். கோதுவதிற் கிடைப் பதிலை யருளா லெல்லா மோதினே னிப்பொருண் மெய் யுணர்ந்தோன் செய்யு, நீதிபிழை நினைந்திடவு மில்லை யெங்கு நிறைந்தபரம் பொருளாகி நிகழா நின்றுன். 26

ஒருவரா லொருவிரகி லுணர்வொணு ததுபரம
குருவினு லறியவரு மதனைநேர் தருகுரவ
னருளையா தொருவழியி லடையலா மதுமுயல்கை
கருமமா மெனநிகரில் கருமநான் முகனருளும். 27

10–பிரகதாரணிய உபநிஷதத்தின் உஷத்தங் கார்க்கி அந்தரியர்மிப் பிராமணங்களின் அருத்தம் உரைக்கும் அத்தியாயம் முற்றிற்று.

ஆக செய்யுள் 467

# 11 கட வல்லி சுவேதாசுவதர உபநிஷதங்களின் அர்த்தம் உரைக்கும் அத்தியாயம்.

—::—

பன்னுநன் குருவெனும் பரம்ப ரன்றிறஞ்
சொன்னதன் மையையெலாந் தோன்ற நானுமக்
கின்னமுங் கூறுவ னெனவி யம்பினு
னன்னவா கநத்தினு னமரர்க் கன்பினல். 1

குகையி லிருப்ப தாய்மிகவுங் கூட மாகி யெவ்
விடத்துந், திகழ்வ தாகி யொருவர்க்குந் தெரியா
தாகுஞ் சிவனுருவ, மிகவு நன்ருய் மேலாமவ் வுருவ
மெய்ம்மை விளங்குமவன், சுகதுக் கங்க ளர்ந்து
வெறுஞ் சுகசொ ரூப னுகின்ருன். 2

தருமா திகட்கும் பூதங்க டமக்கு வேரு யாதொன்
றருமா மறைக ளறைகின்ற தரிய பிரம சரியாதி
சரியா நின்று ரியாதுபெற வதுதற் பரமக் கரமதனைத்
திரமா யறியு மவன்சிந்தை செய்த
தெல்லாஞ் சித்திக்கும் 3

அந்தப் பரமே யெப்பொருட்கு மாலம் பநமா வதுவதனைச், சிந்தைக் கேறத் தெளிவுற்றுன் செநி யான் மரியா னெருதிசையில், வந்துற் றிலனேர் வடிவுமில னதனுல் வரவு போக்காகு, மிந்தத் தொழில்க ளொன்றுமில னெங்குந் தானு யிருக் கின்றுன். 4

பொன்றவுடலைத் துணிசெய் போதுமிறைபொன்றுன்
கொன்றிடுத லுங்கொலையு றுந்தொழிலு மில்லா
னின்றுபெரு மைச்சிறுமை யிற்பெருகி நுட்பா
யென்றுமித யக்குகையி லேயிலகு கின்றுன். 5

அண்ணியனு மாகுமதி தூரியனு மாகும்
வண்ணமில தானமகி மாவருளி னுலே
கண்ணினிகழ் வாமலது காணவெளி தோதான்
றிண்ணமுற நானதிவன் வேறுதெளி வாரார். 6

நின்றுமுட ரேறுமுட லின்றிநிகழ் வானுய்ப்
பொன்றுமத னேடுமொரு பொன்றுதலு றுன
யென்றுநிலை யாயுலக மெங்குமொரு தானு
மொன்றையறி வானிடர்க ளொன்றிலுழு லானுல்.

இகழுபுன் னெறியை விட்டொருப் படுமிங்
கிந்திய மநங்கண்மீண் டிருக்குந், தகவினை யுடையா
னருள்பெறு மந்த வருளினுற் றத்துவஞ் சாரு,
மிகபர மிரண்டும் புசிப்பவ னவனிங் கெவ்விடத்
தேயுள னிங்ஙன், றிகழுற மிகுத்த தேவரு மறியார்
மனிதரோ யினித்தெளி வுறுவார். 8

ஏயபே ருலகில் வினைப்பய னுகர்ந்தங் கிதயமே
மருவா ரிருவர், சாயையா தபமா கின்றனர் சீவ
சங்கரரெ ன்றிடத் தகுவா, ரோயுமா றறவே
யுண்பவன் சீவ னூட்டுவான் சிவனிவர் தமக்கிங்,
காயபே தந்தா னுபாதியால் வந்த தல்லத பேதமே
யாகும். 9

தேசிலிகழ் தேருடல்செ லுத்துமதி பாகன்
பாசமன மாமதுபி ணித்துவரு பாய்மா
வீசுபுல னும்விடய வீதிமிசை தானு
மீசனிலை யாதும்வினை யாடியிடு கின்றான். 10

போகமன மொன்றியறி வாமுணர்வி லானுக்
காகமுறு மைம்புலவ யங்கள்வய மாகாப்

பாகனைய றிந்துபரி போலமந நத்தே
யாகுமதி யாளனைய றிந்துவய மாமால். 11

வருத்தமில தாமநந மற்றமதி கேடன்
பரத்தையடை யான்மிகுப வத்தையடை கின்று
னெருக்குமந னுணர்வு கூடினவன் வீடா
யிருக்குமிட மேவியதி னின்றுமிலை யானல். 12

பொருந்து ஞாநமா மதியினன் மநத்தனை பூட்டி யைம் புலப்பாய்மா, பரந்தெ மூாவகை தன்வச மாக்கினன் பரம்பத மடைகின்ருன். றிருந்து மாலுடைப் பதமது வதுபரஞ் சிவனெனுந் திரு நாமத், திருந்த வாறுதா னிருந்தவா றன்றிவே றிணையிலா விறையாவான். 13

அருள தாலுரு வொன்றியே நின்றுள வகிலநா யகனென்னும், பொருள தேபர மாம்பத மியாவரும் புகலிட மதுவாகுங், கருணை மேவிய சிவனெழிந் துருத்திரன் கண்ணனன் முகனென்பா, ரிருள தாகுமே பரம்பத யெனும்படி யெங்ஙனே யிமை யோரே. 14

இந்தி யங்களிற் பொருளெனும் பரமந மிவற்றி னும் பரமத்திற், புந்தி நற்பர மதிலுமான் பரமெ லாம் பொன்றிய தெரியாமை, யந்த மானினும் பரமவ்வி யத்தமா மதிற்பரம் புருடன்று, னிந்த மெய்ப்பரம் புருடனிற் பரம்பிறி தில்லைமே லிவனை யாம். 15

புருட னென்றுரை செயப்படுவதுபரி பூரண மாகின்ற, சொரூப நின்றவா நிற்சு விங் கருளொடு தோன்றவல் லவன்றுனே, யரனு மன்றுமா லயனு மன் றெவர்க்குமுள் ளாகியே யாவர்க்குந், தெரிவ ருஞ்சிவ னவனை யிங் கொருங்கிய சிந்தையார் தெளிவாரே. 16



வாக்கது மநத்திடை வைக்கு மம்மநம்
போக்கிடும் புந்தியுட் புந்தி மானிலே
யாக்கிடு மந்தமா னிலைவைய னைத்திலுந்
தாக்கறுஞ் சாந்தமாந் தன்னிற் சாந்தமாம். 17

ஒலிமுத லுரைப்பன வொன்று மின்றியே
யெல்லையில தாகியெப் பொருட்கு மேலதாய்ச்

சலமதின் றியவது தன்னைத் தம்முளே
நிலைபெற வறிந்தவர் மரண நீங்குவார். 18

பரப்பி னனிந் தியங்களைப் பராக்குறப் பரம்பர
னுள்ளாகி, யிருத்த லாலறி வொண்கிலன் புறம்புள
விதரமே காண்கின்றான், றிருப்பி ஞா நநாட் டத்தினு
லப்பொரு டெரியவே பெறுந்தீர, னெருத்த னேயவி
நாசியாம் பரவொளி யாயவ னெளிர்கின்றான். 19

பேத மாகிவே றாகிய பொருள்கண்மேற்
பேதைமை யதனாலே, காதன் மேவினர் காலபா
சத்திலே கட்டுணக் கடவாரே, யாதலாலழி வின்றிய
பொருளிலே யறிஞரா தரித்தல்லா, லேது மாதரித்
திடாதவ ரப்பொரு ளெய்தியே யிருக்கின்றார். 20

சத்தப் பரிச வுருவிரதங் கந்தா திசமைந் தன
முதலா, யெத்தைக் கொண்டிங் கறிகின்று னதனை
யொழிய வேதுளதா, மத்தற் பரத்தைக் கண்டிந்த
வவத்தை மூன்றுங் காணுமை, சித்தித் திருக்கு
மவனலமுந் தீங்கு மின்றித் திகழ்கின்றான். 21

மூன்று நின்ற வவத்தையென மொழியும் புரங்கண் மூன்றுணருஞ், சான்று யறியி லறிகின்ற தன்னில் வேறு காதவைதா, னான்று வுணர்வே யுருவான வொளியே யுளதாய் வித்தாகித். தோன்று நின்றுந் தோன்றுது நிகழ்வா னென்றுஞ் சுதந்த ரத்தால். 22

பரமிக மாய்நிகழ்ந் ததுப ரம்பொரு
ளொருபொருள் பிறிதிலை யுளது போற்பல
சருதுமே லவன்கணிற் காண்ப தெங்கணு
மரணமே மரணமே மறித்துஞ் சார்வதே 23

வந்நிதா னொருவனு யிருக்க மற்றவ
னுன்னிய வுருவமாய்த் தோன்று மாறுபோ
லின்னதெ னுமலுட் புகுந்து மேகனு
யந்நிய னுகியொன் றோடு மார்ப்புறுன். 24

எல்லாம் வசிக ரிப்பானு மெதுக்கு முள்ளா மொருவடிவைப், பல்லா யிரங்கோ டிகளாகப் பண்ணு நிற்கும் பரம்பரனே, யல்லா தொன்று மில்லையென வநுப வத்தா லகத்துணர, வல்லார் தமக்குப் பேரின்பம்வடிவாய் மொழியுமாமறைதான்

யாவ னறியப் படாமையினு லிவ்வே றுண்டா மிவ்வேறெத், தேவ னுலே நிலைபெற்றுச் சேதநங்க ளாய்த்திகழு, மோவ லறவே யப்பரனை யுள்ளத் துணர்ந்தோ ருள்ளத்தே, தாவில் சாந்தி குடிகொள்ளு மல்லா தவரைச் சாராதால். 26

இதுவதென வொண்ணுத வெல்லையில்பே ரின்பத்தை, யதுவிதுவென் பர்களறிவோ வறியாமை யோவறிவே, யெதுவுமிறை யானிகழ்வ திறை நிகழ்வி லிவையொன்ருன், மதிபருதி யநலொளியு மறுவில்பர னுலொளியாம். 27

அரசதொன் றும்பர்வே ராகிநீள் சாகைகீழ், நிரைசெய்தெங் கணுநிறைந் தென்றுநின் றுள்ள தாற். கரையிலண் டங்களெல் லாமதன் கண்ணதா மொருபரம் பொருள்கடந் திடவொணு தொருவரால்

எச்சகத் துஞ்சலிப் பிக்குமீ சானனும்
வச்சிரத் தைப்பெறு மனிதன்வீ டுறுமிவற்
கச்சமுற் றங்கிகா லர்க்கனிந்தி ரன்யம
னிச்சயிப் பானிதந் தொழில்செயா நிற்பரால்.

உண்ணுடி யாகத்தி லுணராத வன்று னுடம் பாமு டம்புக்கு ளேகாண லாகுங், கண் ணுடி போலப்பி ராணுதி கத்தைக் கடம்போற்க ழித்துக்க ழித்தற்ற பின்னைக், கண்ணுன பரனன்றி வேறின்மை யாலக் கண்ணுன வநுபூதி யாகின்ற கண்ணு, லெண்ணுரும் வேறின்மை கண்டார்க ணேரே யிறவாது பிறவாதெ லாமாயி ருப்பார். 30

ஒருவருங் கண் ணுற் காண வொண்ணும தன்றுள் ளத்தாற், கருதவுந் துணிந்தங் கொன்றக் கடவது மலாத தைத்தான், சுருதியா லநுப வத்தாற் றுணிந்தவர் சுகசொரூப, மருவியே மாண்டு மீண்டு வரும்வழி மறப்ப ரன்றே. 31

கட வல்லி உபநிஷதார்த்தம் முற்றிற்று.

—:—

## சுவேதாசுவதர உபநிஷதம் ஆரம்பம்.

வித்தம வேதப பொருளதாய் ஞான விழியினுல் விளங்கிடும் பொருட்கோர் புத்தியி னுலு முள்ளவா றறியப் போயிடா தாயிருந் துள்ள, சக்தியுண்

டந்தச் சத்தியா லென்யங் தான்பிறி வாகியத் துவித, சத்திய ஞாந வநந்தவா நந்த தத்துவ மாகியே யிருக்கும். 32

மெய்யதா முருவம் விமலமா மிறைக்கு விளங் கிய திவ்யமா முருவம், வையமா முருவ மற்றுமோ ருருவ மறைமுத லாகவே விளம்பல், செய்யுநூ லெல்லாம் வேறுமோ ருருவஞ் சிவனுடைய வடிவிலை யிவற்றிற், றுய்யதா முருவஞ் சொல்லிலவ் விறைக் குத் துலங்கிய ஞாநமே சொரூபம். 33

பெரியதா யெவர்க்கு முள்ளதா யுயிராய் நிறைந்துள பிரயசக் கரத்தே, திரிதரா நிற்குஞ் சீவனிப் பரிசே திரிதரு மிவனையுந் திரிக்கும், பரமனு யுள்ள வவனையு மநநம் பண்ணியிப் படியிலே பார்ப்பா, னொருவனே செநந மரணமற் றென்று முள்ளதாய் நிகழ்ந்திட வுரியான் 34

அறிவனு மறியா தானு மாய்நிசும் பரசி வர்க்கு மறையினல் வடிவாற் றர்க்க வழியினு லநுப வத்தாற் பிறிவிலா மாயை போக வேதுவாம் பிரமந் தானிங் கறைதரு மெல்லாந் தானு யகர்த்துரு வாகி நிற்கும்.

நாச முற்றுவிடு மாயை சீவனசி யாவி ரண்டி
ளிலு நாதனு, மீச னிற்குமிறை யைத்தி யாநபர
னுக வந்தவியல் பாலுமே, யோச கத்திலிலை யாலு
மேகமெனு முண்மை யாலுமுயிர் முடிவினிற்,
றேசே னத்திகழு மிங்ங னேபிறிது செய்த மாயை
சிதை வாகுமால். 36

ஈசனை யறிந்த வந்த விடத்திலே யெண்ணு மெல்லாப்
பாசமு நசித்த ருனும் பணியறப் பவத்தின் றீர்வுங்
காசுறு மகில மாயக் கங்குலின் கழிவுந் தானே
யாசறு மகண்ட ரூபி யாகையு மனைத்து மெய்தும்.

மேவிய தன்பா லுள்ள மெய்ப்பொரு ளொன்று
மன்றி, யாவுமிங் கறிய வேண்டா வருந்துமிப்
பொருளு மாகிச், சீவனு யுண்பா னுகிச் சிவனென
வூட்டு வானுய். மூவித மாகி நிற்கு மூலமாம் பிரமந்
தானே. 38

நிம ரந்தொறும டைந்தழிவு ருதுதெரிவா
காமை நின்றரணி யால்வடிவு காணு மதுபோ

லாமு டம்பிலழி வின்றிமறை கின்ற வமல
னேமெ னும்பொருளு ணர்ந்திடவு
டம்பில் வெளியாம் 39

உலத்த லின்றியொழி வற்றபொரு
ளுண்மை யதுவாஞ்
சலித்த லின்றியத வத்தினவர் தங்க ளொதிரே
இலத்தி லெண்ணெயர ணிக்கனற திக்க ணிகழ்நெய்
நிலத்தி னீரெனஙி கழ்ந்துவெளி யாகி நிலையாம். 40

ஆகு ஞானநற் றவமறை யீறறை யருத்தமு
மதுவல்லா, லியாக தானபுண் ணியங்களா லியோ
கம்வந் தெய்தும்வந் தெய்துற்ற, யோக ஞானமுள்
புகுத்துமெய் யுணர்வுதா னுள்ளவா றுளவாறே,
யேக மானவீ டளித்திடுங் கருமத்தா லின்பவீ
டெய்தாதே. 41

மிக்க சித்தராய் வன்னவாச் சிரமங்கள் விட்டுமே
லாய்நின்ற, பக்கு வர்க்கிது பகரலா மல்லது பகர்ந்
திடப் படாதென்றும், தக்க நற்குர வன்றனைச்
சிவனெனத் தானினைந் திடுவாருள், புக்க லாகுமிங்

குறைத்தமெய்ப் பரம்பொருள் பு ர ண மா ய் வெளியாக. 42

அரிய மாமறை வாக்கிறு லுங்களுக் கறியவு மறைறந்தேனுன், றெரியு மாகின்மற் றவன்றெரி யாமையைக் கடந்துபோய்ச் சிந்தைக்குப், பீரிய மாகிய ப ர ப் பி ர ம்த்தையே பெற்றுமேற் பிற வாமைக், குறிய னுகுமென் றுரைத்தன னுணர் விறு லுலகெலாம் படைத்திட்டான். 43

11 கடவல்லி சுவேதாசுவதர உபநிஷதங்களின் அருத்தம் உரைக்கும் அத்தியாயம் முற்றிற்று.

ஆக செய்யுள் 510

—::—

## 12 முன் சொல்லிய உபநிஷதங்களின் அருத்தத்தைத் தொகுத்து உரைக்கும் அத்தியாயம்,

வகுத்து நானுமக் குறைத்தநான் மறைகளின் பொருளைத், தொகுத்து நான்சொலக் கேண்மினென் றின்னவா சொன்னு, னுகத்தை நான்கையு மொன் றதா யிரமொரு பகனுன், முகத்தி னுற்பொரு ளுன்குநான் மறையினுன் மொழிவான். 1

பாடு கின்ற வெக்கலையின் பயனுந் தெரிந்து பகர்கின்றே, ேைடு கின்ற சிந்தை யொழித் தொருப்பட் டெவருங் கேண்மினுரை, யாடு கின்ற நானென்னு முரைக்கு மறிவுக் கும்மறிவாய், நாடு கின்ற வுணர்வொன்றுண் டதுவே யான்மா நமக் கெல்லாம். 2

மாச தில்லாப் பரனுகி யிருக்கத் தனது மாயை யினு, லீச னென்ப தறியாம லிறந்தான் பிறந்தான் போலிருக்கும், பாசம் விடுமா நினைவுறுவான் பாரம் பரியத் தாற்பண்ணு, மாசின் மறையா லாசை யெலா மறலாற் சாந்தி யாதியினல். 3

பத்தியாற் குரவன் பாதம் பணிந்துவே தாந்தம் பன்னுஞ், சுத்தமா வாக்கி யத்தாற் றுணிந்தவப் பொருளைத் தாய, புத்தியாற் றுணிந்து கொண்டப் பொருளநு போக மாகச், சித்தியா நிற்கு மைக்கியஞ் சிவபதந் தவனையே சேரும். 4

உளனிலொரு பற்றுமுள னன்றியுட னிற்கு
நானெனவி ளம்புதனை நற்சிவம தாகத்

தானறியு மாகிலொரு வன்றனுரு வாகு
ஞாநபரி பூரணாந் வந்தனைய டைந்தான். 5

செறிவா யெங்குந் திகழ்ந்துள்ள சிவனு னென்னுந் திகழ்வுற்று. னெறியா னிகழு நிகழ்வெல்லா நிமல மாயே நிகழ்ச்சிதரு, மறிவா யறியா மையுமாகி யறிவிப் பவனு யறிவானுய்ப், பிறிவா யுனதா யில தாகிப் பிரம மொன்று மேபிறழும். 6

அடையவும் பிரமமே யெனவ றிந்துளோன்
அடைவதங் கதனையே யாகு மன்றியே
இடையிலோர் மாயையுண் டென்ன வெண்ணுமேற்
கடையதே யாமவன் கற்ற கல்வியே. 7

மாயையென் றென்றுண் டாக மதிப்பது மாநாமல்ல
ஆயினு மகண்ட ஞாந வங்கமா யிந்த ஞாநங்
காயம்வே றுகு மென்கை காரண மாக வித்தைத்
தாயநான் மறைக ளோதுந் துவந்துவந்
தீர்க்கை சுட்டி. 8

யாதொரு படியிற் றேன்று மியல்பினுற் சகத்துக் குண்மை, யோதிய துபசி டந்தா ஞெரோவிடத் தண்மை யாகப், பேதமா முலகு தோன்றிற் பிறப் பதற் கேது வாகு, மீதெலா மில்லை யென்ன லின்பத் துக் கேது வாகும். 9

ஆகை யாலகி லத்தையே மாயையென் ருகமெய் யாய்வந்த, மோக மாற்றுதற் பொருட்டொரோ விடத்திலே மொழிந்தது முதுவேதம், பாக மாகிய சித்தரைக் குறித்து மெய்ப் பரம்பொரு ளாகின்ற, ஏக மேவிகழ் கின்றதெல் லாமென வியம்பிய திதயத்தால். 10

மெய்யை நாடின்மெய்ப் பரமலா லவிச்சையும் விச்சையும் வேறேயோ, வைய மானது மற்ருெரு பொருள்களு மில்லையிம் மாநஞ்செய், துய்ய யோகிமு னெப்படி யெப்படித் தோன்றுகின் றதுதோற்றஞ், செய்யு மியாவையுஞ் சிவன்வடி வாகவே திகழ்ந் திடுந் திடமாக. 11

யாதொரு படியிற் ஞேற்ற மென்றியம் பியது முன்னே. வாதனை யதனைப் பற்றி யல்லது மற்றொன் றில்லே, போதமே யுள்ள தென்றும் பூரண ஞைகை யாலே, யோதமில் வேலே போலு மொழிவற நிறைந்த யோகி. 12

அப்படி யிருந்த யோகி யநுபவத் தன்மை தானு மெப்படி யென்று காணு னீசன்மா னுனுங் காணேன் செப்பிட வறியா வேதாக மங்களுஞ் சிவனுர் மேனி யெப்படி யென்னின் மற்றப் படியிலே
யிருந்த தென்னும். 13

அம்பி காபதி யறியுமிவ் வநுபவ மவனரு ளாகுமக், கொம்ப ஞைறிந் திடுந்திரு வருளேயே கோலமாய்க் கொண்டந்த, வெம்பி ரானரு ளாலரி நாம்பிற ரியாவரு மறிவோமத், தம்பி ரானறிந் தமையெவ ராலெனச் சங்கையுந் தகுமோதான். 14

ஞாந மாகிய விழியினுற் குருபர னயந்துநோக் கிடவுண்டா, மாநு பூதியா தொன்றது வேசிவ ஞவதப் படியுள்ள, மேனி தான்வினை யொத்தவப் பொழுதிலே வெளிப்படும் வெளிகாண, லான தேசி கன் றன்னேயப் பரம்பொரு ளென்னவா தரஞ் செய்வான்- 15

நேச னெஞ்சினாற் றனக்சுது நினைவல வாயினு
நெறியன்றே, தேசி கன்றிரு வுள்ளமே செய்குவான்
செகித்திடுங் குலத்துக்கு. மாச தாயினு மாச்சிர
மத்திலே வழுவினு முலகெல்லா, யேசி வீடினு
மறம்புகழ் தநம்பிற விழப்பினு மிடரேனும். 16

தேகி கன்றிரு வுள்ளமுண் டாகவச் சிவன்றிகழ்ந்
திடுகின்றா. னீச னிங்கருள் செய்யவந் திருக்கிற விட
மிவன் றிருமேனி, மாச தொன்றிவ னளவிலை செயி
லெரி வாய்நர கினிற்பூத. நாச மெவ்வள வவ்வள
வுஞ்செல நண்ணுநன் னெறிநண்ணான் 17

அருவெனு மமலன்றா னருளில னெனினுஞ்சார்
குருபர னருளுண்டே யெனிலொரு குறையுண்டோ
திருவடி தரவந்தார் திருவுள மிலரென்றா
லொருவரு மிலர்கண்டீ ருறுதுயர் களைகின்றார். 18

உறுவது தனில்வேறா யுளதல வதுநேரே
பெறவருள் பெரியோனே பெருகிய குருவாவா
னெறியுட லுனநசவா னிலைபெற வழிபாடே
செறிபவ னருளாலே சிவகதி யடைவானால். 19

இந்தவி டும்பையு டம்புறு மேது
தந்தையெ னப்புகழ் கின்றிலர் தக்கோர்
அந்தமி லாதவ கண்டமு நம்முட்
டந்தவர் தந்தையெ னச்சமை வுற்றார். 20

உண்டுபோற் றேன்று முலகெலா முண்மை யின்றென வுணர்த்தியெப் பொருளுங், கண்டசான் றதனைக் காட்சிய தறவே கண்டிடக் கரியெனக் காட்டும், பண்டைவே தாந்த வாக்கியஞ் சொன்ன படியிலே பரமனே டொன்றாய், விண்டிடா வண்ண முணர்த்துவான் றன்னை வியன்குரு வென்றிடும் வேதம். 21

காட்சியை யெல்லாங் கண்ணதாய்க் கரைத்துக் கண்ணொழிந் தொருபொரு ளில்லா, மாட்சியை யளிக்க வல்லவன் குருவா யாரிபோன் மாறுவேண் டாதே, மீட்சியில் பதத்தைக் கருணையா லளிக்கும் வித்தகக் குரவனே யெவருந், தாழ்ச்சிசெய் தேத்தற் குரியதத் துவமாஞ் சங்கர னென்றிடத் தகுவான்.

வருபிறப் பறவே வேண்டினன் மறையீ றென் னுமம் புயத்தினை மலத்தற், கிரவியாய் நெஞ்சிற்

கிசைந்தநற் குருவை யாதொரு வழியினு லிறைஞ்சி. யருள்சுரந் திடுதற் காவதே செய்வா னருமறை முடிவெலா மறையும், பொருளேநே ராக வுமக்கெனக் கீசன் புகன்றவப் படியிலே புகன்றேன். 23

எல்லா மறிவா னுயில்லா தில்லா னுகி யெல்லாந் தான், வல்லா னுகித் தீங்கொன்று மருவா னுகி வடிவருளே, யல்லா திலனு மிறையுண்மை யன்றிச் சொல்லா னப்பொருளிற், சொல்லா தில்லை யுங் கட்குச் சொன்னே னெல்லாஞ் சுருக்காக. 24

போதவடி வாயகண்ட பூரணனுஞ் சிவனுங்கு, யாதுமுளங் கைக்கனியா மிவனருளின் படியொழிய, வேதமுடி யிற்பொருடாம் வேண்டியவா விளம்பியிடும், பாதகர்போ யேறவொணுப் பாழ்ங்கிணற்றில் வீழ்வர்களால். 25

ஆதிவே தாந்தப் பொருளேயத் துவித மாம்படிக் ககிலநா யகனுஞ், சோதிபா தப்போ திரண்டையுந் தொட்டுச் சூழுகே னென்றயன் சொல்லிக். காதலாற் பிறவிக் கவுடத முக்கட் கடவுளேக் கருத்தில்வைத் தவன்றன், பாதமே பணிந்து பரவியிப் பரிசே பத்தியாற் பரவசனுனன். 26

தேவருந் தேவ தேவர்க்குந் தேவாந் திரியம்ப கன்றனைத் தெண்டனுகப், பூவிலே விழுந்து போற்றியே யுருகிக் கிடந்தவப் பொழுதிலே புத் தேண், மூவரு மறியா முதல்வனு மிறைவன் மூர்த்தி யாய் முழுந்திய வருளாற், காவியங் கண்ணி பங்க னுய் வந்து தோன்றினன் கண்ணினுற் காண. 27

மாலுமவ் விடத்தே திருவொடும் கூட மகிழ்தரு மநத்தொடும் வந்தா, னுலுதிக் கிலும்பூ மாரியாய்ப் பொழிய நாமசங் கீர்த்தந நாத, மேலெடுத் தெங்கும் விளங்குமப் பொழுதில் விளங்கிய பிரமன்மா லவ னுஞ், சாலுமெய்ப் பத்தி யோடுமர்ச் சித்தார் சங்கர னம்புயத் தாளில் 28

தெரியில்வடி வேது மொருபொழுதி லாத சிவனு மருண் மேனி திகழவே, யரியதனை நாடி யறியுமத னுலவ் வதிசயமொ டாடி யருளினு, னுரியவநு பூதி யுடையவிழி யாலவ் வுமையுமய னுதி யுணரவே, யருள்செய்தன னீச னரியதிரு மேனி யமரரெதிர் காண வருளினுல். 29

அந்தமறை யீறு தந்தபர ஞான வங்கணத ளுலு மன்றியே. யிந்தவிழி யாலு மந்தவிமை யோர்க ளெங்கள்பெரு மானை யெய்தினுர், சந்தமறை பாடி நின்றனர்க ளாதி சம்புதிரு நாம மாமெழுத், தைந்து முரை யாடி யன்பினெடு பூசை யங்குநனி மேவி யண்டர்தாம். 30

அமையா வன்பாய் நின்ருே ரைப்பார்த் தையம் போய், நமையே யெய்தப் பெற்றீரேயென் றனளுத, னுமையென் னருளால் வந்ததி தேயென் றுரை செய்தா, ளிமையோ ரெல்லா மென்புரு கிக்கொண் டின்புற்ருர் 31

தொல்லை வேதமுன் சொல்லுதற் கரியவித் தோன்ற
னல்ல னுயின னுமக்கென நாரண னவின்ரு
னெல்லை தீர்கரு ணுகர ணுகிய விறைவன்
சொல்லு வானருள் கீதையின் பலமெலாந் தொகுத்து

பரமமா மிந்தக் கீதை படிப்பவன் பாரின் மீதே
திருவினன் முகுந்த னெக்குந் தேசினு லிரவி யொக்கு
மருவுமா மெனேயே வந்து மாசிலா விஞ்சை யாகு
முருவமா முமையு மென்று மவனுளத்
துறையா நிற்கும் 33

பிரமனு னீங்கள் பெற்றவிக் கீதை பேசிய கீதைகட் கெல்லாம். பரமமாய் வேதா காரமா தலி னுற் படிக்கலா மறையவர் தமக்கே. சுருதியா தலினுற் சூத்திரா திகளாற் சொல்லலா காதென வருளிப், புரணமா யெல்லாக் கரணமுங் கடந்த போதவின் பத்தினுட் புக்கான். 34

மாலுமா துடனே வானவர்க் கருளி மகிழ்ந் துவை குண்டமே யடைந்தான், மேலவா னவரை நீத்தயன் பரமன் மேனியே நோக்கிமீண் டிருந்தான், ஞாலமால் விட்டு ஞானதற் பரராய் நான்முகன் றன்முனே தெண்டம், போலவே பணிந்து வானவர் தந்தம் பொன்னகர் நோக்கியே போந்தார். 35

உத்தம மான கீதை யுரைத்தன னுவகை யோடும், பத்தியாற் கேட்பார்க் கென்றும் பகர்ந் திடப் படுமீ தென்று, சுத்தவே தியர்க்குச் சொல்லிச் சூதனு ஞானக் கண்ணன், முத்தியா முருவே நோக்கி மோனமே யடைந்திருந்தான். 36

இனியவுரு யெல்லாந் தன்பா லிறைவனின் னரு ளாற் பெற்ற, முனிவனை முனிவ ரெல்லா முடியுற வணங்கி யேத்தி, நனிமிகநானென் கின்ற பதப்பொரு ளடி வேரோ, ரநியமில் பிரம மாக வறிந்ததி சயித்தி ருந்தார். 37

12-முன் சொல்லிய உபநிஷதங்களின் அர்த்தத்தைத் தொகுத்து உரைக்கும் அத்தியாயம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் 547.

## பிரஹ்ம கீதை முற்றுப் பெற்றது.

சர்வம் சிந் மயம்

—:—

சிவமயம்.

# பிரஹ்ம கீதை பாட்டு முதற் குறிப்பகராதி

## அ

தெ 

பிரமகீதை பாட்டு
முதற்குறிபகராதி
முற்றும்.

ஆகப் பாட்டின்
தலைப்பு 541
ஆக எழுத்து 68

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 4 | 5 | உபநிஷதார்த்லை | உபநிஷதார்த்தத்தை |
| 5 | 10 | உஷஸ்ததங | உஷஸ்த்தங |
| ,, | 12 | முன்சொலிய | முன்சொல்லிய |
| 6 | 7 | சந்தே | சந்தோ |
| ,, | 9 | கம | தம |
| ,, | 11 | அண் | அண் |
| ,, | 14 | வேதநெறி | — |
| | 19 | பானரு | பானறி |
| 7 | 4 | வெறி | — |
| | 7 | தனன | தன்ன |
| | 10 | இந்தியம் | இந்தியங் |
| | 12 | ஆதலான் | ஆதலால் |
| | 16 | சுத | அத |
| 8 | 8 | ஆமென்றெ | அசுமன்றெ |
| | 13 | எல்லாமுன் | எல்லாமுண் |
| | 16 | ஊரணுதி | ஊணுதி |
| | 17 | நிறை | னிறை |
| | 18 | காண்பவன் | காண்பவன்ன |
| 10 | 2 | பங்கய | பங்கயா |
| | 6 | இதச | இதுச |
| | 11 | பரம்பொர | பரம்பொரு |
| | ,, | இலங்க | இலங்கி |
| | 18 | ஒழ்ந் | ஒழிந் |
| | 19 | தடுதப | தடுதா |
| 11 | 14 | ரவுல | தற்ப |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 12 | 1 | மோக | யோக |
| | 2 | டன்வாக் | வாக் ஒவிச |
| | 20 | தைச்செய்யுள் | தைக்கவிமுப்பதேழ் |
| 13 | 10 | மெத்தல் | மெத்தால் |
| 17 | 8 | மின்றன் | மின்றென் |
| 28 | 2 | வேதாவா | வேதவா |
| 30 | 5 | வெறி | நெறி |
| | 10 | லவக்களோ | லவர்தகளோ |
| 35 | 16 | அன்றியது | அன்றியநு |
| 36 | 9 | சிவவர்தா | சிலவர்தா |
| 38 | 17 | ஞுக்சினை | ஞுக்கினை |
| 39 | 12 | னந்த | னங்ந |
| 40 | 7 | சாந்தவ | சார்ந்தவ |
| 60 | 5 | சுடலெரி | சுடவெரி |
| 62 | 2 | யந்தன் | யுந்தன் |
| 66 | 4 | விடந்தே | விடத்தே |
| 69 | 14 | கரண | காண |
| 72 | 1 | கொண்டே | கொண்டோ |
| 74 | 13 | லியல்பின் | லியல்பின் |
| 79 | 18 | ளைந்திளையு | ணைந்திணையு |
| 80 | 3 | வாநாக | வாஞதி |
| | 13 | யுளதுயோ | யுளது போ |
| 81 | 8 | லவாக | லவர்க |
| 83 | 1 | னிச்சமய | னிச்சயம |
| 87 | 6 | மதுதாஞ | மதுதானு |
| 89 | 3 | ஞாந ஞாந | ஞாநஞ் ஞாந |
| ,, | 7 | விளங்கா | விளங்கச் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 89 | 9 | செல்ல | செல்லாங் |
| 96 | 5 | 39 | 93 |
| 105 | 16 | சக | சுக |
| 110 | 6 | விருளினு | வருளினு |
| | 14 | மெங்கூ | மெங்கு |
| 115 | 10 | முருதவா | முருவா |
| 124 | 2 | விவமு | விமுவ |
| 128 | 11 | வென்னிற் | லென்னிற் |
| 139 | 15 | னுள்ன நு | னுள்ள நு |
| 141 | 5 | யொழியமு | யொழிய |
| | 10 | கருனே | கருணை |
| 143 | 2 | வாசைவைத் | லாசைவைத் |
| | 7 | ராசர் | ரரசர் |
| 145 | 11 | கிளாங் | கிளர்ங் |
| 147 | 8 | வாலே | லாலே |
| | 12 | நிகழ்த்திடா | நிகழ்ந்திடா |
| 148 | 2 | பிவும் | பவும் |
| 159 | 8 | மருவாரிருவர் | மருவுவாரிருவர் |
| 161 | 8 | நிற்சு | நிற்க |
| 165 | 15 | வேதப | வேதப் |
| 166 | 1 | லென்பங் | லென்றுங் |
| | 7 | சிவனுடைய | சிவனுடை |
| 169 | 18 | பகனுன் | பகலனுன் |
| 170 | 16 | தன்னேயே | தனேயே |
| 171 | 6 | யுனதா | யுளதா |
| 174 | 1 | றனக்சுது | றனக்கது |
| 176 | 10 | சிவனுகது | சிவனுக்கு |